# முகவுரை

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்துந்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி
(தொல். சொல். எச். 4)

அவற்றுள்
இயற்சொற் றாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாம லிசைக்குஞ் சொல்லே.
(தொல். சொல். எச். 2)

என்ற சூத்திரத்துள்ள செந்தமிழ் என்ற வழக்கும்,

தண்டமிழ் வரைப்பகங் கொண்டு (புறநா. 198)
வையக வரைப்பிற் றமிழகங் கேட்ப (புறநா. 168)

என்ற புறநானூற்றடிகளிலுள்ள தண்டமிழ், தமிழகம் என்ற வழக்குஞ் சான்றாகும்.

தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து (புறநா. 19)

என்ற புறநானூற்றடியிலுள்ள தமிழ் என்ற வழக்கான் அச்சொல் தமிழ்நாட்டுமக்களையுங் குறித்தது என விளங்கும்.

தமிழென் கிளவியு மதனோ ரற்றே (தொல். எழுத். 386)
என்ற சூத்திரத்தின் உரையிலுள்ள தமிழக்கூத்து, தமிழச்சேரி, தமிழத்தோட்டம், தமிழப்பள்ளி என்ற உதாரணங்களால் தமிழ் என்ற சொல் ஒரு நாட்டையும் ஆங்குள்ள மக்களையுங் குறித்திருந்திருத்தல் கூடுமென்றும் விளங்கும்.

அதனால் தமிழ்மொழி என்றது தமிழ் நாட்டில் வழங்கும் மொழி என்றேனும் தமிழ்நாட்டுமக்களால் வழங்கப்படும் மொழி என்றேனும் பொருள் கொண்டிருத்தல்வேண்டும். பிற

காலத்தில் தமிழ் என்ற சொல்லே மொழியைக் குறித்துவழங்க, தற்போது தமிழ்மொழி என்றது தமிழாகிய மொழி என்ற பொருளில் வழங்கப்படுகின்றது.

தமிழ் என்றது தமிழ்நாட்டுமக்களைக் குறித்ததாகப் பழைய நூல்கள் குறிக்கின்றமையான் "தமிழர்" என்ற சொல் புதிதாக வழங்கப்பட்டிருத்தல் கூடும். மொழியைக்குறிக்கும் தமிழ் என்ற சொற்கு மக்களைக் குறிக்குந் தமிழ் என்றது மூலமாக இருப்பினும், மக்களைக் குறிக்குந் "தமிழர்" என்ற சொற்கு மொழியைக் குறிக்குந் தமிழ் என்ற சொல் பிற்காலத்தே மூலமாக வந்தது காண்க.

தமிழ் என்ற சொல் மொழியைக் குறித்தது பிற்காலத்தே என்றதை நோக்காது அதன் பிறப்பைப் பலவாறாகக் கூறுவர்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மொழிகளைத் திராவிடமொழி என வழங்கினர் டாக்டர் கால்ட்வெல். அவ்வாறு வழங்கியதற்குக் காரணம் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த குமாரிலபட்டர் என்ற ஒரு வடமொழிப் பேராசிரியர் அம்மொழிகளை "ஆந்திர-திராவிட-பாஷா" என வழங்கியதும், வடமொழிநூல்வல்லோருட் சிலர் அவற்றைத் திராவிட என வழங்கியதும், தென்னாட்டார் திராவிடர் என்ற சொல்லான் மனுஸ்மிருதி, மஹாபாரதம் முதலிய நூல்களின் வழங்கப்பட்டதுமென்பர். அதன்பின்னர் 'திராவிட' என்ற சொல்லும் "தமிழ்" என்ற சொல்லும் ஒற்றுமைப்பட்டன என்றும், "திராவிட" என்ற சொல்லினின்றும் தமிழ் என்ற சொல் பிறந்திருத்தல் கூடுமென்றுங் கூறி, அவ்வாறு தான் கொண்டதற்குக் காரணம் வராஹமிஹிரர் "த்ராமிள" என்றும், தாராநாதர் டிபெடன் சரிதையில் "த்ரமிள" என்றும், மலையாளபுராணங்கள் "த்ரமிள" என்றும், மஹாவம்சம் "த்ரமிளோ" என்றும் வழங்கியதும், வடமொழிச்சொல்லின் தொடக்கத்துள்ள "த்ர" தமிழில் "த" எனவும், ஆங்குள்ள "ள" தமிழில் "ழ" எனவும் ஆகின்றமையு மென்பர்.

அவராற் காட்டப்பட்ட நூல்களுள் மஹாபாரதத்தைத் தவிர்த்து ஏனையவெல்லாம் தொல்காப்பியத்திற்குப் பிற்பட்டனவாகலானும், தொல்காப்பியத்தே தமிழ்நாட்டின் ஒரு பகுதி

யைச் செந்தமிழ்நாடெனப் பிரித்திருக்கின்றமையான் அதற்குப் பலநாள் முன்னரே அப்பெயர் அந்நாட்டிற்கு வழங்கியிருத்தல் கூடுமாகலானும், தமிழ் என்ற சொல்லை த்ராவிட என வடமொழியில் வழங்கினர் எனக் கொள்ளின் குற்றமாகாது. "த" எவ்வாறு "த்ரா" ஆக மாறியது எனின், ஆய்தல் ஆராய்தலாகவும், சோக்காலி சோர்க்காலியாகவும் எவ்வாறு மாறியதோ அவ்வாறே எனக் கூறலாகும். தேகம் என்றதைச் சிலர் திரேகம் என வழங்குதலையுங் காணலாம். மகரம் இதழ்குவிந்து ஒலித்தலானும், வகரம் பல்லுமிதழும் சேர்ந்தொலித்தலானும், அவை ஒன்றுக்கொன்று மயங்கலாம். ழகரமும் டகரமும் ஒரே இடத்திற் பிறத்தலான் அவையும் ஒன்றுக்கொன்று மயங்கலாகும்.

ஆயினுஞ் சிலர் ஒருமொழிக்குப் பெயர் அயலார் வைத்தல் இயலாதாகலின் "தமிழ்" என்றபெயர் தமிழ்நாட்டாரே வைத்தனர் எனக் கூறுவர். தனக்குத்தானே ஒருவனும் பெயரிட்டுக்கொள்ளாமையானும், அவ்வாறு இட்டுக்கொள்ளாதது இகழ்ச்சிக்கு இடனாகக் கருதப்படாமையானும், தான் வழங்கும் மொழிக்குத் தானே பெயரிட்டுக்கொள்ளுதல் இன்றியமையாததெனக் கூறுதல் இயலாமையானும், தமிழ்நாட்டில் தமிழ்மக்கள் வழங்கும் மொழியைப் பிறர் தமிழ் என வழங்கினர் எனக் கொள்ளினுங் குற்றமாகாதென்க.

இந்தியாவின் தென்பகுதியிலுள்ள முகம்மதியரும், தெலுங்கரும், கருநாடரும் தமிழ்மொழியை "அரவம்" என்ற சொல்லான் வழங்குகின்றனர். அதற்குச் சிலர் கூறுங் காரணமும் அவற்றின் மறுப்புமாவன :—

(1) தமிழ்மக்கள் அறத்திற் சிறந்தோராகையானும், தமிழ்மொழியில் அறநூல்கள் பல இருக்கின்றமையானும் அவ்வாறு கூறப்பட்டதென்பர் டாக்டர் குண்டர்ட். தெலுங்குகன்னடங்களில் "அரவம்" என்ற சொல்லின்கண் இடையெழுத்து வழங்கப்படுகின்றதேயன்றி வல்லெழுத்து வழங்கப்படாமையின் அது பொருந்தாதென்பர்.

(2) அறிவிற்சிறந்தோர் தமிழ்மக்கள் ஆதலின் அவ்வாறு கூறப்பட்டதென்பர் சிலர். இதற்கும் முற்கூறப்பட்ட மறுப்புப் பொருந்தும்.

(3) தமிழ்மக்கள் அருவாநாட்டினராதலின் அவ்வாறு கூறப்பட்டதெனின், அருவாநாடு தமிழ்நாட்டில் ஒரு பகுதியேயாதலின் அவ்வாறு கூறுதல் பொருந்தாதென்க.

ஆயினும் அவ்வாறு கூறுதற்கு ஒரு காரணங் கூறலாகும். "ரவம்" என்ற சொற்குச் சத்தம் எனப் பொருளாகையால் அரவம் என்ற சொற்கு சத்தமிலெழுத்தையுடையது எனப் பொருள்கொளல் தகும். சத்தமுளெழுத்து ஐவர்க்கத்தினுமிரண்டு நான்கு ஆகிய எழுத்துக்களே யாகும். அவை வெ, வ, உ, ஸ, ஃ, ஜ, ய, ய, ஃ, ஐ என்பனவாம். இவை தமிழ்மொழியிலில்லாமையின் அவ்வாறு அவர் கூறினர் எனக் கூறுதல் அமையும்.

ஒவ்வொருமொழியும் நாளடைவில் மாறுகின்றது என்பது வெளிப்படை. ஒரு கிழவன் கிழத்தியை மணந்தபின்னர் அவ்விருவர்தம் வழக்கமுஞ் சிறிது மாறுபடுகின்றதுபோல், ஒரு மொழி பேசுவோர் மற்றொருமொழி பேசுபவரோடு சேர்ந்திருப்பின், இருவர்தம்மொழியும் ஒலியினும், சொல்லுருவத்தினும், சொற்பொருளினும் மாறும். ஆகலின் ஒருமொழியின் சரிதையை ஒருவன் அறியவேண்டுமாயின் அம்மொழிபேசும் நாட்டின் சரிதையை அறிதலும் அவ்வாறு அம்மொழியோடு இயைபுபட்ட மொழிகளின் சரிதையை அறிதலும் இன்றியமையாதனவாகும். தமிழ்மொழியோடு இயைபுபட்ட மொழிகள் பிராஹுயி * என்றதைத் தவிர்த்து, பன்னிரண்டென்றும், அவை தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளுவம், குடகு, துடவு, கோடா, கோண்டு, கு, ஒரையன், இராஜ்மாஹல் என்பனவாமென்றும், அவற்றுள் முன்னுறும் திருத்தப்பெற்றமொழிகளென்றும், எஞ்சியவை திருத்தம்பெறாதனவென்றுங் கூறுவர் டாக்டர் கால்ட்வெல்.

இம்மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி ஒன்றிருத்தல் வேண்டும். அதன் இயல்புகளை அறிவதற்கு ஒவ்வொருமொழியின் இயற்கையை அறிதல்வேண்டும். ஒவ்வொருமொழியின் செய்யுள்வழக்கையையும் உலகியல்வழக்கையும் அறிதல்வேண்டும்; அவற்றின் இலக்கணத்தை ஆய்தல்வேண்டும்; பொதுவாக மொழிநூல்வல்லோரின் கொள்கையை உணரவேண்டும். இவற்றைச் செய்யச் சிலரையேனுந் தமிழுலகந் தூண்டல்வேண்டும்.

* *Brahui.*

தமிழ்மொழிநூலை இயற்றுதற்கு எனக்கு உதவியாயிருந்தன ஆங்கிலமொழிநூலின் அறிவும், ஆரியமொழி நூலின்* அறிவும், தொல்காப்பியத்து எழுத்ததிகாரச்சொல்லதிகாரங்களின் ஆராய்ச்சியுமே யாகும். ஆகலின் பி. ஏ. வகுப்பில் எனக்கு ஆங்கிலமொழிநூல் கற்பித்தவரும் சிராப்பள்ளி S. P. G. காலேஜ் பேராசிரியருமான திரு. Isaac. Y. ஞானம் B.A., L.T. அவர்களுக்கும், ஆரியமொழிநூலின் வழியைக் காட்டிக்கொடுத்தவரும் சென்னை Presidency College வடமொழிப் பேராசிரியருமான ஸ்ரீ மஹாமஹோபாத்தியாய—வித்தியவாசஸ்பதி—தர்சனகலாநிதி—குலபதி குப்புஸ்வாமி சாஸ்திரியார் M.A., I.E.S. (Rtd.) அவர்களுக்கும், சிராப்பள்ளி S. P. G. காலேஜில் "கால்டுவெல் இலக்கணம்" பாடஞ்சொல்லச் செய்வித்தவரும், சென்னைத் தமிழகராதிச்சாலைக்கு ஐந்து ஆண்டுகளுக்கு மேல் ஓய்வுகொடுத்து அனுப்பியவரும் S. P. G. காலேஜ் ப்ரின்ஸ்பலுமான Rev. Allan, F. கார்டினர் அவர்களுக்கும், தொல்காப்பியத்துள் எனக்குத் தோன்றியவற்றைக் கேட்டு ஆய்ந்து திரட்டிக்கொடுத்தவர்களும் சென்னைத் தமிழகராதி பண்டிதர்களுமான உ. வே. மு. இராகவையங்கார் அவர்களுக்கும் உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் அவர்களுக்கும், இந்நூலை அச்சிடுவதற்குள்ள செலவை ஆவலுடன் ஏற்றுக்கொண்ட திருப்பனந்தாள் மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் அவர்களுக்கும் மனமுவந்த என் நன்றியை அறிவிக்கின்றேன். அச்சிடுவதற்கு முன்னும் அச்சிடும்போதும் இந்நூலைப் பலமுறை ஆய்ந்து பார்த்தவரும் திருவையாறு அரசர் கல்லூரித் தலைத்தமிழாசிரியருமான திரு. R. வேங்கடாசலம் பிள்ளை அவர்களும், அச்சிட்டவற்றுட் சிலபகுதியைப் பார்த்தவரும், அண்ணாமலைப் பல்கழகத்துக் கௌரவ வடமொழிப் பேராசிரியருமான மகாமகோபாத்தியாய குப்புஸ்வாமி சாஸ்திரியார் அவர்களும், அச்சிடுவதற்குமுன்னர் ஒருமுறை இந்நூலைப் பார்த்தவரும், என் மாணவருமான V. R. பஞ்சாபகேச சர்மாவும் செய்த உதவியை ஒருகாலும் மறவேன்.

திருவையாறு } பின்னத்தூர்
21-7-36 } சா. சுப்பிரமணிய சாஸ்திரி

* *Indo-European Philology.*

# பொருளடக்கம் (Contents)

## தமிழ்மொழிநூல் (Tamil Language)

IV. தொடரியல் (**Syntax**)

# இந்நூலுள் ஆளப்பட்ட நூல்களும் அவற்றின் குறி[illegible]ம.

## தமிழ்நூல்கள்.

| நூல் | குறி |
| --- | --- |
| தொல்காப்பியம் | |
| எழுத்ததிகாரம் | |
| இளம்பூரணருரை | தொல். எழுத். இளம். |
| நச்சினார்க்கினியருரை | தொல். எழுத். நச். |
| சுப்பிரமணிய சாஸ்திரியார் குறிப்புரை | தொல். எழுத். குறிப்புரை. |
| சொல்லதிகாரம் | |
| இளம்பூரணருரை | தொல். சொல். இளம். |
| சேனாவரையருரை | தொல். சொல். சேனா. |
| நச்சினார்க்கினியருரை | தொல். சொல். நச். |
| தெய்வச்சிலையாருரை | |
| கலித்தொகை | கலித். |
| பத்துப்பாட்டு | பத்து. |
| திருமுருகாற்றுப்படை | திருமுரு. |
| பெரும்பாணாற்றுப்படை | பெரும்பாண. |
| பொருநராற்றுப்படை | பொருநா. |
| புறநானூறு | புறநா. |
| பரிபாடல் | பரிபா. |
| திருக்குறள் | குறள். |
| சிலப்பதிகாரம் | சிலப். |
| மணிமேகலை | மணி or மணிமே. |
| பெரிய திருமொழி | பெரி. திரு. |
| பெரியாழ்வார் திருமொழி | பெரியாழ். திரு. |
| தேவாரம் | தேவா. |
| பெருங்கதை | பெருங். |
| சீவகசிந்தாமணி | சீவகசிந். |
| வீரசோழியம் | வீரசோ. |
| நேமிநாதம் | |
| நன்னூல் | நன். |

உ



# தமிழ்மொழி நூல்

## I. பொதுவியல்

### 1. மொழிப்பிறப்பு*

உலகில் மக்கள் ஒன்றுகூடி வாழ்தல் எல்லோரும் அறிந்தது. அதற்கு இன்றியமையாதது ஒருவர் உட்கருத்தை மற்றோருக்கு வெளிப்படுத்தலே யாகும். அதனை வெளிப்படுத்தாதிருப்பின் உலகியல் நடவாது. வெளிப்படுத்தல் பலவாறாக அமையும். அவை கை முதலியவற்றின் சைகை [1], முகக்குறி [2], மெய்ந்நிலை [3], போலியொலி [4], சொற்றொடர் [5] முதலியனவாம்.

கைச்சைகையான் ஒருவர் தங்கருத்தை வெளிப்படுத்தலைச் சிலவிடங்களிற் காணலாம். பெண்மணிகள் பெரியோரின் முன்னிலையிலும், மாணவர்கள் படிக்கும் வகுப்புக்களிலும், ஊமைகள் கருத்தை வெளியிடுமிடத்தும், சேய்மையிலுள்ளோருக்கு ஒருவர் தங்கருத்துக்களைத் தெரிவிக்குமிடத்தும் கை, முகம் முதலியவற்றின் சைகையை வழங்குதல் யாவருமறிந்ததே. ஆயினும் எல்லாக் கருத்துக்களையும் புறத்தார் எல்லோரும் அறியுமாறு சைகைசெய்தல் இயலாது. அவ்வாறே முகக்குறியானும், மெய்ந்நிலையானும் வெகுளி, மகிழ்ச்சி, வியப்பு, உடன்பாடு, உடன்பாடின்மை முதலியவற்றை வெளிப்படுத்தலாகுமேயன்றி, எல்லாக்கருத்துக்களையும் வெளிப்படுத்தலமையாது.

*Cf. *Jespersen — Language, its Nature, Development and Origin. pp.* 27, 61, 412 to 442, (1)=*gesture*, (2)=*grimace*, (3)=*posture*, 4)=*imitative utterance*, (5)=*symbolical utterance*.

போலியொலியானும் சில பொருட்களையும், அவற்றின் செய்கைகளையும், வெகுளி முதலியனவற்றையுங் குறிக்கலாமே யன்றி, ஏனைய கருத்துக்களை வெளிப்படுத்தல் முடியாதாகும். ஆகலின் சொற்றொடராலாக்கிய மொழியே இன்றியமையாத தென்ப.

அச்சொற்றொடர்மொழி தொடக்கத்தில் எவ்வாறு பிறந்தது, எவ்வாறிருந்தது என்றவற்றில் பல கொள்கைகள் உள. அவை யாவன :—

படைப்புக்காலத்தில், மக்கள் மொழி யியற்றவேண்டும் என்ற எண்ணத்துடன் ஒருங்குகூடி, இச்சொல் இப்பொருளைக் குறித்தல்வேண்டுமென்று அவையில் தீர்மானஞ் செய்தனர் என்பர் ரூஸோ [1].

மொழியில்லாதகாலத்து மொழி வேண்டுமென்று எவ்வாறு அம்மக்கள் உணர்ந்தனர் என்பதும், இம்மொழி இப்பொருளைக் குறித்தல்வேண்டுமென்று எவ்வாறு உடன்பட்டனர் என்பது மாகிய இரண்டு குற்றங்கள் அக்கொள்கையில் உள்ளன.

தொடக்கத்தில் மொழியறியா வாண்மகனும் மொழியறியாப் பெண்மகளுஞ் சேர்ந்திருக்குங்கால் இயற்கையாகத் தாமாய் உடலிலிருந்து உண்டாம் ஒலிகளைக்கொண்டும் சைகைகளைக் கொண்டும் நாளடைவில் சொற்றொடர்மொழியை யாக்கினர் என்பர் காண்டிலக் [2].

மொழி மக்களாலியற்றப்பட்டதன்று. கடவுளே மக்களுக்கு அதனை ஈந்தனர் என்பர் ஸ்விஸ்மில்க் [3].

கடவுளால் இயற்றப்பட்டதாயின் மொழிகள் புறநடைச் சூத்திரங்களுக்கு இலக்கு ஆகா. ஆகலின் மக்களாலே இயற்றப்பட்டிருத்தல்வேண்டும். ஆயினும் அவர் மனத்தீர்மானத்துடன் இயற்றினர் என்று கொள்ளுதல் பொருந்தாது. அவரையறியாது, அவரிடமிருந்து இன்றியமையாமை காரணமாக மொழி பிறந்திருத்தல் கூடுமென்பர் ஹெர்டர் [4].

(1)=*Rousseau*, (2)=*Condillac*, (3)=*Suissmilch*, (4)—*Herder*.

ஹெர்டருக்குப் பின் வந்த கிரிம்[1] அவர் கொள்கையை ஏற்றுக்கொண்டு அம்மொழி மூன்று நிலையில் இருந்திருத்தல் வேண்டுமென்றும், தொடக்கத்தில் உயிருள் அ, இ, உ இவையும், மெய்யுள் சிலவுமே உளவாதல் வேண்டுமென்றும் கூறினர். அம்மூன்று நிலைகளும் தனிமொழிநிலை[2], ஒட்டுநிலை மொழிநிலை[3], ஒட்டறியாமொழிநிலை[4] என்பனவே. தனிமொழிநிலையில் சொற்களெல்லாம் பகுதியாகவே இருந்தன; விகுதிகள் இல்லை. கருத்தை வெளியிடப் பல பகுதிகளைச் சேர்த்தனர். உதாரணமாக 'நாம்' என்ற பொருளைக் குறிக்க 'நான்' என்ற பொருளைக் குறிக்குஞ் சொல்லோடு 'கூட்டம்' என்ற பொருளைக் குறிக்குஞ் சொல்லைக் கூட்டி வழங்கினர்[5]. அவ்வாறு அவை பல காலம் வழங்க, பின்னர்ச் சில பகுதிகளை வேறு பகுதிகளோடு வழங்காது தனிமையாய் வழங்குதலிறந்தது. ஆயினும் அவை அப்பகுதிகளோடு எவ்விடத்தில் ஒட்டுப்பட்டிருந்தன என்றது அறியப்பட்டது. அந்நிலையை ஒட்டறிமொழிநிலை என்றனர். பலநாள் வழக்கத்தினால் அவ்வொட்டுப்பட்ட இடமும் அறிதற்கு இயலாதாயிற்று. அந்நிலையை ஒட்டறியாமொழிநிலை என்றனர்.

இவ்வாறு மொழிநூல்வல்லோரெல்லாம் மொழி மக்களிடமிருந்தே தோன்றியது என்றதில் உடன்பட்ட பின்னர்ச் சில கொள்கைகள் வெளிவந்தன.

பறவை, விலங்கு இவற்றின் இயற்கையொலியைக் கேட்டு அவ்வாறே மக்கள் ஒலிக்க, அவையே பின்னர்ச் சொற்களாயினவென்பர் சிலர். வெகுளி, மகிழ்ச்சி, வியப்பு இவை தோன்றும் போது தன்னறியாது மக்களிடமிருந்து பிறக்கு மொலிகளே மொழிகளாயின என்பர் வேறு சிலர். மொழி முழுவதும் இவ்வாறு இரண்டு வகையான் ஆயின என்று கூறுவது பொருந்தாது. சில மொழிகள் அவ்வாறு வந்தன என்று கூறுதல் குற்றமாகாது. அன்றியும், பறவை, விலங்கு இவற்றிற்கு ஒலிக்க ஆற்றலுள்ளபோது மக்களுக்கு அவ்வாற்றலில்லை என்று கூறுவதும் பொருந்தாக் கூற்றாகும்.

(1)=*Grimm.* (2)=*isolating stage.* (3)=*agglutinative stage.* (4) *inflexional stage.* (5)=சீன மொழியில் 'வோ' (*wo*) என்றதற்கு 'நான்' என்றும், 'சே' (*che*) என்றதற்குக் 'கூட்டம்' என்ற பொருளும், 'வோசே' என்றதற்கு 'நாம்' என்ற பொருளும் வழங்கப்படுகின்றனவாம்.

ஆகலின் மொழியின் பிறப்பினை, குழவிமொழி, சீர்மையின் மக்கண்மொழி, மொழிசரிதை இவற்றின் ஆராய்ச்சியான் அறிதல்கூடு மென்பர் யெஸ்பர்ஸன்[1].

குழவிகள் தங்கள் கருத்தை வெளியிடும் வகையை அறியின், மொழியின் முன்னிலை முழுவதும் அறியத்தகும் என்று கூறுதல் தவறாகும். ஏனெனில் குழவிகள் தாய் தந்தையர் வழங்கும் மொழியை அடிக்கடிக் கவனித்துக் கேட்கின்றன. அவ்வாறு படைப்புக்காலத்துள்ள மக்களுக்குப் பிறர் வழங்கிய மொழிகளைக் கேட்டற்கு இடனின்று. ஆதலான் தாய்தந்தையர் கூறும் மொழிகளைக் கேட்கும் நிலைக்கு முன் குழவிகள் பிறந்து ஆறு மாதம் வரையில் தாமே ஒலிக்கின்ற முறையை ஒருவன் கவனிப்பின், அவன் சிறிது மொழியின் முன்னிலையை அறிய இயலும்.

சீர்மையின் மக்கண்மொழியிலிருந்து மொழியின் முன்னிலை சிறிது அறியப்படலாமெனினும், தற்போது அந்நிலையிலுள்ள மக்களின் முன்னோர் வெகுநாளாக ஏதேனும் ஒரு மொழியையே வழங்கினராயிருக்கின்றனர்.

ஆகலின் ஒரு மொழியின் முன்னிலையை அறியவேண்டுமாயின், அதன் சரிதையை அறிதல் இன்றியமையாததாகும். நமக்குக் கிடைக்குமிலக்கணவிலக்கியங்களானும், சாஸனங்களானும், நாணயம் முதலியவற்றானும், அம்மொழியைப்பற்றி வெகுகாலந் தொடங்கிக் கூறும் பிறநாட்டுச்செய்திகளானும் ஒரு மொழியின் சரிதை இயற்றப்படல் வேண்டும்.

பல மொழிகளின் சரிதவாராய்ச்சியிலிருந்து சில உண்மைகள் வெளியாகின்றன என்பர் யெஸ்பர்ஸன். அவையாவன:—

1. படைப்புக்காலத்தில் ஒவ்வொரு மொழியிலும் ஒலிகள் மிகுதியாயிருந்து வரவர குறைவுபெற்றன.

2. தற்போது ஒலிக்கமுடியாதெனக் கருதப்படும் பல ஒலிகளோடு சேர்ந்த நீண்ட தொடர்களால் கருத்துக்கள் வெளியிடப்பட்டன. தொடக்கத்தில் இசையோடுதான் தொடர்களை வழங்கியிருத்தல்வேண்டும்.

(1) *Jespersen*.

3. பண்டைமொழி வெருளி மகிழ்ச்சி முதலியவற்றைக் காட்டும் முறையோடு வழங்கியிருத்தல்கூடும். வரவர அவற்றை ஒலியாற்காட்டாது குறிப்பாற்காட்ட முயன்றிருத்தல் வேண்டும்.

4. சொல்லுருவங்கள் பண்டைக்காலத்தில் தற்போதை விட மிகுதியாயிருந்து, அவை நாளடைவில் ஒலிமயக்கத்தானும், ஒற்றுமைப்போலியானும் [1] மயங்கி, குன்றியிருத்தல் வேண்டும்.

5. சொற்றொடரை வழங்கும் முறையினும், சொற்றொடரை ஆக்கும் முறையினும், பல வேறுபாடுகள் பண்டைக் காலத்தில் இருந்திருத்தல் தகும்.

6. தனிமொழிநிலை, ஒட்டறிமொழிநிலை, ஒட்டறியா மொழிநிலை என மொழிநிலை மூன்றுதான் எனக் கூறுதல் பொருந்தாது. அவற்றுள் அடங்காத மொழிநிலை இக்காலத்தின்கண் பல காணப்படுகின்றன. அன்றியும் ஒவ்வொரு மொழியுந் தொடக்கத்தில் தனிமொழிநிலையிலிருந்து, பின்னர் ஒட்டறிமொழிநிலையையும் அதன்பின்னர் ஒட்டறியாமொழிநிலையையும் பெறுதல்வேண்டு மென்றதும் பொருந்தாது. ஒரே காலத்தில் மூன்று நிலையினும் ஒரு மொழி இருத்தல்கூடும்.

7. பண்டைக்காலத்தில் பண்பிகளைக் குறிக்குஞ் சொற்களும், சிறப்புப்பெயர்களைக் குறிக்குஞ் சொற்களும் இருந்திருத்தல் வேண்டும். அதன் பின்னரே பண்புச்சொற்களும், பொதுச்சொற்களும் வந்திருத்தல்கூடும்.

8. புலன்களுக்கு நேரில் விளங்கும் பொருட்சொற்களே முற்காலத்தில் வழங்கியிருத்தல் தகும்.

9. தொடக்கத்தில் ஒலிகள் தம்மையறியாது மக்களிடம் விளையாட்டாகத் தோன்ற, அதன்பின்னே அவற்றையறிந்து, வகுத்து, பொருள்களைக்குறிக்க மக்கள் வழங்கியிருத்தல்கூடும். ஆகலின் தம் மகிழ்ச்சிக்காக முதலில் ஒலிக்கப்பட்டனவேயன்றி, பிறருக்குத் தங் கருத்தை வெளியிடுதற்கு அன்று.

(1)=*Analogy*.

10. பறவை, விலங்கு, இவற்றின் ஒலியையொத்த ஒலிச் சொற்களுக்கும், வெகுளி, மகிழ்ச்சி, வியப்பு முதலியன காரணமாகப் பிறக்கும் ஒலிச்சொற்களுக்கும் அவற்றால் குறிக்கப்படும் பொருட்கும் இயைபு கூறலாகுமேயன்றி, ஏனைய சொற்களுக்கும் அவற்றின் பொருட்கும் இயைபு கூறுதல் இயலாது.

11. தொடக்கத்தில் முற்றுத் தொடர்க்குத் [1] தான் பொருள் உளது [2].

12. மொழியும் ஒரு கலையாய்க் கலைகளுட் சிறந்ததாகும்.

---

## 2. மொழிவளர்ச்சி

மொழியின் பிறப்பினைக் கூறுமிடத்து மொழி வரவர மாறிக்கொண்டு வருகின்றது எனக் கூறப்பட்டது. அம்மாறுதலை மொழிநூல்வல்லோர் மொழிவளர்ச்சியென்று கூறுவர். அஃது எவ்வாறு வளர்கின்றது எனப் பார்ப்போம்.

ஓர் ஊரில் பல வீடுகளும் ஒவ்வொரு வீட்டில் தலைவன் ஒருவனும் தலைவி ஒருத்தியும் இருத்தல் கூடும். தலைவன் பெரும்பாலும் தந்தையாகவும், தலைவி அன்னையாகவும் இருப்பர். தாய்தந்தையரிடமிருந்துதான் குழவிகள் முதன் முதலில் மொழியைக் கேட்கின்றன. அவர் சொற்களை எவ்வாறு ஒலிக்கின்றனரோ, அவ்வாறே குழவிகளும் ஒலிக்கும். பெற்றோர் செய்த செயல்களை யெல்லாம் தாமுஞ் செய்தல்வேண்டுமெனக் கருதி அவை அவற்றை எல்லாம் நன்கு கவனிக்கின்றன. ஆகலின் குழவிகளை நல்வழிப்படுத்த எண்ணுந் தாய்தந்தையர் தாமும் நல்வழியிலிருத்தல் வேண்டும். அவர் சில சொற்களை ஒருவகையாக ஒலிப்பின், அக்குழவிகளும் அவ்வாறே ஒலிக்கும். அக்குழவிகள் அவ்வூரில் சிறந்தனவாயிருப்பின் அவ்வொலித்தலைப் பிற வீட்டுக் குழவிகளுக்கும் உணர்த்தும். அவையும் அவ்வாறே ஒலிக்கும். இம்முறையாகச் சொற்களினது ஒலித்தல்வகை ஒரு வீட்டிலிருந்து மற்றொரு

(1)=*Sentence*, (2)=இதனை நன்கறிந்துதான் ஆசிரியர் தொல்காப்பியனார் சொல்லதிகாரத் தொடக்கத்தில் கிளவியாக்கம் முதலிய நான்கு இயல்களைப் படித்தனர்.

வீட்டிற்கும், அங்கிருந்து ஊருக்கும், அவ்வூரிலிருந்து அதற்கு அருகிலுள்ள ஊர்களுக்கும் பரவும். இவ்வாறு ஒரு மொழியில் பல சொற்கள் ஓரிடத்தில் ஒருவகையாக ஒலிக்கப்பட்டு மற்றோரிடத்தில் வேறுவகையாக ஒலிக்கப்படின், இவ்விரிடத்தும் ஒலிக்கப்படும் மொழிகள் ஒரு மொழியின் கிளைகள்[1] எனப்படும்.

தமிழ்மொழியின் கிளைகள் இக்காலத்து உளவா எனின், உள என்னலாம். சேலம் ஜில்லாவில் 'அவரு வந்தாரு' எனவும், திருச்சி, தஞ்சை முதலிய ஜில்லாக்களில் 'அவர் வந்தார்' எனவும் ஒலித்தலைக் காண்கின்றோம். திருச்சி, தஞ்சை ஜில்லாக்களில் 'போய்க்கொண்டு', 'வாழைப்பழம்' என்றும், விழுப்புரத்திற்கு வடக்கில் 'போய்க்கினு', 'வாயப்பயம்' என்றும் ஒலித்தலைக் காண்கின்றோம். தொடரை வழங்குதலிலும் சேலம், கோயம்புத்தூர் ஜில்லாக்களில் ஒரு ஸ்வரமும், திருச்சி, தஞ்சைகளில் ஒரு ஸ்வரமும், திருநெல்வேலியில் ஒரு ஸ்வரமும், செங்கற்பட்டு, சென்னைகளில் ஒரு ஸ்வரமுங் காணப்படுகின்றன. ஆகலின் சேலந்தமிழ், திருநெல்வேலித்தமிழ், தஞ்சைத்தமிழ், சென்னைத்தமிழ் எனக் கொள்ளல் தகும்.

இவ்வாறு கிளைகள் மிகுதியாகக் கிளைக்காது செய்யச் சில சாதனங்கள் உள. அவை எளிதில் ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குச் செல்ல ரயில், மோட்டார் முதலிய வாகனக்கருவிகளும், வடிவெழுத்தின் உற்பத்தியும், அச்சிடுதலும், இலக்கணவிலக்கிய நூல்களியற்றல் முதலியனவுமாம்.

ஒரு மொழியின் கிளைமொழிகள் பல இருப்பினும், அவற்றுள் ஒன்றே இலக்கணவிலக்கியங்களில் வழங்கலாகும். அப்போது அக்கிளைமொழியை "நூன்மொழி"[2] எனப் பெயரிடலாகும். ஒவ்வொரு கிளைமொழியிலும் நூல்கள் இயற்றப்படின், ஒவ்வொன்றையும் நூன்மொழி எனவே கூறல் தகும்.

அவ்வாறு ஒவ்வொன்றும் பிரிந்து நூலில் வழங்கப்பட்டு வரவர மாறுதலையடையின், அவையெல்லாம் ஒரு தாயினிடமிருந்து பிறந்தன எனக் கொள்ளல் கூடும். அப்படியே ஒவ்

(1) *Dialects.* (2) *Literary dialect.*

வொரு கிளைமொழிக்கும் கிளைகள் கிளைத்து அவற்றுள் ஒவ்வொன்றும் ஒன்றுக்கொன்று பிரிந்து நூல்வழங்குமொழியாயின் அவையெல்லாம் ஓரினமொழிகள் [1] என்னலாகும்.

அப்போது ஒரு பொருள் குறிக்குஞ் சொற்கள் ஒவ்வொரு மொழியிலும் ஒற்றுமைப்பட்டிருப்பினும், சிறிது வேற்றுமையுங் கொள்ளும். அச்சொற்களுக்கு 'இனச்சொற்கள்' [2] எனப் பெயர் வழங்கலாம். இனமொழிக ளிரண்டனுள் ஒன்றி லுள்ள ஒரு சொல் மற்றொன்றிலுள்ள சொல்லாகவே இருப்பின், அஃது ஒரு மொழியிலிருந்து மற்றொரு மொழியில் கடன் வாங்கப்பட்டது என்றே கூறல்வேண்டும். அப்போது அவற்றிற்குக் "கடன்சொற்கள்" [3] எனப் பெயர் வழங்கலாம். அக்கடன்சொற்கள் பெயர்ச்சொல்லே யாகுமென்பர் சேனாவரையர் [4]. அப்பெயர்களிலிருந்து பின்னர் வினைகள் வரலாம் என்பது தியானி-த்தல், எத்தனி-த்தல் முதலிய வினைச்சொற்களால் அறியப்படுகின்றது. தமிழ்மொழியில் தெலுங்கு, கன்னடம், வடமொழி, உருது முதலிய பல மொழிகளிலிருந்து சொற்கள் கலந்துள்ளன. வெகுநாளிற்கு முன்னரே வடமொழியிலிருந்து சொற்கள் கலந்தமையான், அத்தமிழ்ச் சொற்களுக்கு 'வடசொல்' என்றே பெயரிட்டனர் ஆசிரியர் தொல்காப்பியனார் [5]. அவ்வாறே தெலுங்கு, கன்னடம் முதலிய மொழிகளிலிருந்து வந்தனவற்றைத் திசைச்சொல் என்றனர்.

ஒரு மொழியில் வேற்றுமொழிச்சொற்கள் கலப்பினும், அவை அம்மொழியிலக்கணப்படியே வழங்கப்படும். அவ்வாறு வழங்குமிடத்து சில மாறுதல்களும் உண்டாகும். உதாரணமாக வடமொழியிலுள்ள ஶூரவஃ என்ற சொல்லைத் தமிழில் 'குரவர்' என வழங்கியிருத்தல் கூடும். அங்கு ஶூரவஃ என்பது வடமொழியின் பன்மை என்று நோக்காது, ஃகாரவொற்று தான் பன்மையைக் குறிக்கின்றதென்று மயங்கி 'குரவர்' எனத் தமிழில் ஒருவர் வழங்கினர்போலும். வடமொழியில் ஹவி என்பது ஏழாம் வேற்றுமையொருமையாயிருப்பினும், தமிழ் மொழியில் 'புவி' என்பது முதல் வேற்றுமை

(1) *Cognate languages.* (2) *Cognate words.* (3) *Loan words.* (4) தொல். சொல். 397 சேனா. (5) தொல். சொல். 401 சேனா.

பொருமையாக வழங்கப்படுகின்றது. வடமொழிச் சொற்களாகிய ப்ராஹ்மணஃ, ப்ராஹ்மணஸ்த்ரீ என்பன தமிழ்மொழியில் முறையே பார்ப்பனன், பார்ப்பனத்தி என வழங்கியிருத்தல் கூடும் பின்னர் 'தி' என்றது பெண்பால்விகுதியாய்க் கொண்டு வண்ணாத்தி முதலிய சொற்கள் வழங்கியிருத்தல் கூடும். தொகைமொழிகளில் ஒரு சொல் தமிழ்ச்சொல்லாகவும், மற்றொன்று வடமொழியின் தற்பவமாகவுமிருத்தல் காணலாம். 'வெகுநாள்' என்ற சொல்லில் 'வெகு' என்றது வடமொழியின் தற்பவம்; 'நாள்' என்றது தமிழ்ச்சொல். இவ்வாறு தமிழ்மொழியின் வளர்ச்சி செழித்தது. ஒற்றுமைப் போலியானும் மொழிகள் வளரும். 'நமக்கு' என்றதை யொட்டி நினக்கு என்றது நுனக்கு என மாறியது. செய்யும் என்ற முற்றுவினை நிகழ்காலத்தே பண்டைக்காலத்தில் வழங்கா நிற்க, செய்யும் என்ற பெயரெச்சத்தை யொட்டிப் பிற்காலத்தில் எதிர்காலத்திலும் வழங்கப்பட்டுளது. அவ்வாறே படர்க்கையில் மாத்திரம் வழங்கிய வியங்கோள்வினை பிற்காலத்தில் எல்லாவிடத்தும் வழங்கப்பட்டுளது. உயர்திணையில் வழங்கப்பட்ட தன்மைப்பெயர்கள் முன்னிலைப்பெயர்களை யொட்டி விரவுத்திணையில் பிற்காலத்து வழங்கப்பட்டன. தடுமாறு புணர்ச்சியான்[1] நுனக்கு, நுமக்கு என்பன உனக்கு, உமக்கு என ஆயின. ஒருமொழிச்சொற்களின் பொருளை நோக்கி ஏனைய மொழிகளில் சொற்களை ஆக்குதலுமுண்டு. வாக்கிய பேதம், பிரமாணம் இவற்றின் பொருள்படத் தமிழ்மொழியில் இருதோடர்ப்படுதல், அளவை என்ற சொற்களைக் காணலாம்.

ஆசிரியர் தொல்காப்பியனார்காலத்துத் தமிழிலிருந்து தற்போது வழங்குந் தமிழ்வரையும் ஆராய்ந்துபார்ப்பின், ஐந்து நிலைகளேனும் தொடக்கத்திலிருந்து இருத்தல்வேண்டுமென்று தோற்றுகின்றது. அவையாவன:—(1) தொல்காப்பியத்தின் காலம் (2) எட்டுத்தொகை பத்துப்பாட்டு முதலியவற்றின் காலம் (3) சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியவற்றின் காலம் (4) தேவாரம், நாலாயிரப்பிரபந்தமிவை தொடங்கி வீரசோழியம்வரை யுள்ள காலம் (5) நன்னூல் தொடங்கிவரும்

(1) *Metanalysis.*

பிற்காலம். இவ்வாறு பிரித்தற்குச் சில வழக்கு சான்றாகும். அவையாவன:—1. வியங்கோள்வினை, 2. 'கள்' என்ற பன்மைவிகுதி 3. தன்மைப்பெயர்கள் 4. நிகழ்கால வினைமுற்றின் உருவம் 5. வேற்றுமையுருபேற்ற எல்லீரும், எல்லாரும் என்றவற்றின் உருவங்கள் 6. முன்னிலையில் நான்காம் வேற்றுமையின் உருவங்கள்: நுமக்கு—உமக்கு; நினக்கு—நுனக்கு—உனக்கு.

1. வியங்கோள் வினை.

அவற்றுள்

முன்னிலை தன்மை யாயீ ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி (தொல். சொல். 226)

என்ற சூத்திரத்தின்படி வியங்கோள்வினை படர்க்கையில் தான் வரும். முரஞ்சியூர் முடிநாகராயரும் ஏனைய புறநாற்றுச் செய்யுட் கவிஞர்களும் முன்னிலையில் அதனை வழங்கினர்.

வான வரம்பனை நீயோ பெரும
[1] நடுக்கின்றி நிலியரோ (புறநா. 2)
நீ நீடுவாழிய நெடுந்தகை (புறநா. 55)

அவ்வாறே பிற நூல்களிலுங் காணப்படுகின்றது. நன்னூலாரோ அஃது எல்லாவிடத்திலும் வருமென்பர்.

கயவோடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலு மிடம்பா லெங்கு மென்ப. (நன். 338)

ஆகலின் தொல்காப்பியர்காலத்தில் வியங்கோள்வினை படர்க்கையிலும், அதன் பின்னர் படர்க்கை, முன்னிலை இவற்றிலும், அதன் பின்னர் மூவிடங்களிலும் வழங்கப்பட்டதென அறியலாகும்.

2. கள்விகுதி.

ஆசிரியர் தொல்காப்பியனார்

கள்ளொடு சிவணு மவ்வியற் பெயரே
கொள்வழி யுடைய பலவறி சொற்கே. (தொல். சொல். 169)

(1) இதனால் முரஞ்சியூர் முடிநாகராயர் தொல்காப்பியர்காலத்துக்குப் பிற்பட்டவர் எனத் தெரியினும் நக்கீரர் அவரை முதற்சங்கத்தாரெனவும் தொல்காப்பியனாரை இடைச்சங்கத்தாரெனவுங் கூறியதற்குச் சான்று புலப்படவில்லை.

என்ற சூத்திரத்தில் கள்விகுதி அஃறிணையிற்பெயரோடு உறழ்ச்சி யாய் வருமென்றார். யான் அறிந்தவரை, அஃது உயர்திணைப் பெயரோடு எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இவற்றில் வழங் கப்பட்டதாகத் தெரியவில்லை. சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியவற்றுள் உயர்திணைப் பெயரோடு வழங்கப்பட்டுளது.

| | |
|---|---|
| யாங்களு [1] நீணெறிப் படர்குதும். | (சிலப். பக். 298, 162) |
| கவுந்தியடிகளும் | ( ,, ,, 298, 166) |
| பத்தினிப் பெண்டிர்காள் | ( ,, ,, 469, 4) |
| நோன்பிகள் விழுமங் கொள்ளவும் | (மணி. பக். 33, 75) |

தேவாரம், நாலாயிரப்பிரபந்தம் முதலியவற்றில் அது விளையா லணையும்பெயரிலும், அஃறிணை உயர்திணை விணைமுற்றிலும் வழங்கப்பட்டுளது.

சொன்னீர சொல்மாலை சொல்லுவார்கள் சூழ்விசும்பில்
நன்னீர்மையால் மகிழ்ந்து நெடுங்காலம் வாழ்வாரே.

திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே (பெரி. திரு. 6, 6)
பொய்யர் காலங்கள் போக்கிடுவோர்களே (அப்பர் தேவாரம் திருப்பழனம் 2)
தாங்கள் நின்று தலைவணங்கார்களே ( ,, ,, 7)

ஆகலின் 'கள் விகுதி' ஒருகாலத்து இல்லாதும், தொல்காப்பி யர்காலத்து உறழ்ச்சியாய் அஃறிணைப்பெயரினும், சிலப்பதிகா ரம், மணிமேகலை இவற்றின் காலத்து உயர்திணைப்பெயரினுடம், பிற்காலத்து அஃறிணை உயர்திணை விணைமுற்றுக்களினும் வழங்கி யிருத்தல் காண்க.

3. தன்மைப்பெயர்கள்.

தொல்காப்பியர்காலத்து உயர்திணையாகவும், நன்னூலார் காலத்து விரவுத்திணையாகவும் அவை கூறப்பட்டன.

தன்மை நான்கு முன்னிலை யைந்தும்
.................................போதுப்பெயர் (நன். 282)

(1) ஆசிரியர் தொல்காப்பியனார் கொள்கையில் தன்மைப் பெயர்கள் உயர்திணையே.
(தொல். சொல் 162.)

4. நிகழ்கால வினைமுற்றின் உருவம்.

*தொல்காப்பியர்காலத்து நிகழ்காலவினைமுற்று* 'செய்யும்' *என்ற வாய்பாட்டதே. செய்கிறான், செய்கின்றான் என்றே னும், செய்யாநின்றான் என்றேனும் சங்கவிலக்கியங்களில் காணோம். தேவாரம், நாலாயிரப்பிரபந்தம் முதலிய நூல் களில்தான் காணப்படுகின்றன. அன்றியும் 'செய்யும்' என்ற வினைமுற்று தொல்காப்பியர்காலத்து நிகழ்காலத்தையே குறிக் குமென்றது*

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை
அவ்வயின் மூன்றும் நிகழுங் காலத்துச்
செய்யு மென்னுங் கிளவியோடு கொள்ளா.

(*தொல். சொல்.* 227)

*என்ற சூத்திரத்தான் விளங்கும். அஃது எதிர்காலத்தையும், பிற்காலத்தில் குறித்தது என்றது*

செய்யுநிகழ் பெதிர்வும் (*நன்.* 145)

*என்ற நன்னூற்சூத்திரத்தான் விளங்கும். செய்யாநின்றான் என்றது செய்யா நின்றான் என்ற இருசொல் லாம் என்பர் வீரசோழியவுரைகாரர். அவற்றை ஒரு சொல்லெனக் கருதி* '*ஆநின்று*' *என்றது நிகழ்காலவிடைநிலை என்றனர் நன்னூ லார்.*

5. வேற்றுமை யுருபேற்ற எல்லீரும் எல்லாரும்.

*எல்லீரும் எல்லாரும் என்ற சொற்கள் வேற்றுமையுருபு ஏற்கும்போது எல்லீர்நும்மையும், எல்லீர் நும்மானும்............ எல்லார்தம்மையும், எல்லார்தம்மானும் ...........என ஆகும் என்றது*

எல்லாரு மென்னும் படர்க்கை யிறுதியும்
எல்லீரு மென்னும் முன்னிலை யிறுதியும்
ஒற்று முகரமுங் கெடுமென மொழிப
நிற்றல் வேண்டும் ரகரப் புள்ளி
உம்மை நிலையு மிறுதி யான

தம்மிடை வரூஉம் படர்க்கை மேன
நும்மிடை வரூஉம் முன்னிலை மொழிக்கே.
(தொல். எழுத். 191)

என்ற சூத்திரத்தான் அறியப்படும். பிற்காலத்தில் எல்லார் தமக்கும் என்றதற்குப் பிரதியாக எல்லார்க்கும் என வழங்குதலை

நெல்லு நீரு மெல்லார்க்கு மெளிய (புறநா. 58, 10)

என்ற புறநானூற்றடி காட்டும்.

6. முன்னிலையில் நான்காம் வேற்றுமையின் உருவங்கள்.

'நீ' என்றது வேற்றுமையுருபேற்கும்போது 'நின்'[1] எனவும், 'நீயிர்' என்றது 'நும்'[2] எனவும் மாறும் என்றது தொல்காப்பியத்தான் வெளிப்படையாய் அறியப்படினும் பிற்காலத்து நினக்கு என்பது நுனக்கு என்றும் உனக்கு என்றும் மாறியது. நுமக்கு என்றது உமக்கு என மாறியது. இம்மாறுதல்கள் தேவாரம் நாலாயிரப்பிரபந்தம் இவற்றின் காலத்திற்கு முன்னரே நிகழ்ந்திருத்தல் வேண்டும்.

---

## 3. தமிழொலிமாறுகை.

ஒரு மொழியின் பயன் ஒருவர் கருத்தை மற்றொருவருக்கு அறிவித்தல் என்று கூறப்பட்டது. அக்கருத்தை வெளியிடும் போது ஒருவர் சொற்களின் சிறப்புப்பகுதிகளை நன்கு பிறர் அறியுமாறும், சிறப்பில்பகுதிகளை மெதுவாகவும் ஒலிக்க நேரிடும். அப்போது கேட்போருக்குச் சிறப்பில்பகுதி விளக்கமாய் அறிதல் இயலாது. அவ்வாறே ஒருவர் கேட்டதை மற்றவருக்கு அவர் அறிவிக்க, அவர் மற்றவருக்கு அறிவிக்க, இவ்வாறு பத்து மக்களிடம் மாறின், சிறப்பில்பகுதி வரவரக் குன்றும். இது பெரும்பாலும் உரக்கவொலிக்கப்படும் ஆங்கிலம் முதலிய மொழிகளிற் காணலாம். சொல்லுருவம் மாறுதற்கு இவ்வாறு பல காரணங்கள் உள. அன்றியும் நாளடைவில்

(1) தொல். எழுத். 179 (2) தொல். எழுத். 325

மொழிகள் வேறுமொழிகளின் சேர்க்கையாலும் மாறுபடுகின்றன என்று கூறப்பட்டது. ஆகலின் மொழிமாறுதல்களைப் பற்றிய விதிகள் அவ்வக்காலத்தில் மாறும் என்பது திண்ணம். ஆகலினன்றோ மொழிநூல்வல்லோர்கள் மொழிநூல் விதியின்[1] இலக்கணத்தைக் கூறுமிடத்து அஃது ஒரு மொழியில் ஒருகாலத்தில் ஒரு சில வொலிக்கூட்டத்தில் ஓரொலிக்கேனும் பலவொலிக்கேனும் நேரும் மாறுதலே என்றனர். [2]இதற்கு ஈண்டு ஓர் உதாரணங் கூறுவல். ஆசிரியர் தொல்காப்பியனார் 'க, ச, ட, த, ப, ற' என்பனவற்றை வல்லினமாகக் கூறினமையின் 'தங்கை', 'தஞ்சம்', 'பண்டம்', அந்த', 'கம்பம்', முதலிய சொற்களில் க், ச், ட், த், ப், இவை வல்லினமாகவே அவர்காலத்து ஒலிக்கப்பட்டிருத்தல்வேண்டும். இப்போது அவை க̄, ஜ், ட̄, த̄, ப̄ எனத் தமிழகத்தில் பெரும்பாலும் ஒலிக்கப்படுகின்றன. அதனை நோக்கி டாக்டர் கால்ட்வெல் வல்லினமெல்லினமாறுகை[3] என ஒரு விதி கூறினர். அவர்நாளில் மொழிநூல்வல்லோரும் ங், ஞ், ண், ந், ம், இவற்றிற்குப் பின் க̄, ஜ், ட̄, த̄, ப̄ இவை ஒலிக்கப்படுமேயன்றி க், ச், ட், த், ப், இவை ஒலிக்கப்படா என்று நினைத்தனர். அஃது அவ்வாறு இருத்தல் வேண்டும் என்ற நியதி இல்லை என்றது தற்போதுள்ள மொழிநூல்வல்லோரின் துணிபு. அதற்குக் காரணம் தெலுங்கு, கன்னடம் துளு, வடமொழி, ஆங்கிலம் முதலிய மொழிகளில் மூக்கினத்திற்குப் பின்னர் வல்லினமும் ஒலிக்கப்படுகின்றதே ஆகும்[4].

அவ்வொலிகள் மாறுதற்குக் காரணம் எளிதிற் கருத்து வெளியிடவேண்டு மென்றதே[5] யாகும். அஃது ஒலிக்கருவிகளுக்கு மிகத் துன்பந் தாராது வெளிப்படுத்தல் ஒன்று; மனத்தால் எளிதாகக் கருதப்பட்டு அக்கருத்தை வெளிப்படுத்தல் மற்றொன்று.

(1) *Law in linguistic science.* (2) *Tucker's Introduction to the Science of Language pp. 303-312.* (3) *Convertibility of Surds and Sonants.* (4) Telugu, *Inku, Ance;* Kanarese, *Vanki, Ance;* Tulu, *Ancal.* Skt.-*Panka, panca, ghanta, danta, kampa;* Eng.-*Pink, drench, ant, limp.* (5) *Economy of effort.*

ஒலிக்கருவிகளின் முயற்சியிற் சிக்கனம் பற்றிய மாறுதல்களைப் பலவாறாகப் பிரித்தல் கூடும்.

1. உடம்படுமெய்புணர்த்தல்.

உயிர்களின் முயற்சி அங்காத்தலாகலின் இரண்டு உயிர்களைச் சேர்த்து ஒலித்தல் இயலாது. ஆதலின் அவற்றின் இடையே ஓர் மெய் ஒலிக்கப்படுகின்றது. அம்மெய் பெரும்பான்மையும் யகரவகரங்களாகிய இடையெழுத்தேயாகும்.

(உ-ம்) ஆ(ய்) இருதிணை, அ(வ்) அன்.

இவ்வாறு உடம்படுமெய்புணர்த்தல் அவ்விரண்டு உயிர்களையும் இடைவிடாது சேர்த்து ஒலிக்குமிடத்தில்தான் வரும். விட்டு ஒலிப்பின் அது வேண்டுவது இன்று. அவ்வாறு விட்டொலித்தலுமுண்டு என்றது

எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்.

(தொல். எழுத். 141)

என்ற தொல்காப்பியச்சூத்திரத்தாலும், சாஸனங்களில் எழுதப்பட்டுள்ள மலர்மங்கைஒடு, பூவிரிஉம், காவிரிஇன் [1] என்ற சொற்களாலும் விளங்கும். ஆயினும் இக்காலத்தில் உடம்படுமெய்யில்லாது வழங்குதல் பேச்சிலுமில்லை, எழுத்திலுமில்லை.

2. மெய்பிறிதாதல் [2].

ஒரு மெய்யின் பின்னர் எளிதில் ஒலிக்க இயலாத மற்றொரு மெய் வரின், அம்மெய்களுள் ஒன்று மாறும். அம்மாறுதல் பிறக்குமிடம் பற்றியும் முயற்சி பற்றியும் இருத்தல் கூடும். (உ-ம்)

மண் + குடம் = மட்குடம் (முயற்சி மாறுகை)
தம் + தந்தை = தந்தந்தை (இடம் மாறுகை)

மண், குடம் என்ற இரண்டு சொற்களையுங் கூட்டிச் சொல்லவேண்டிய விடத்து மூக்கினமாகிய ணகரத்தை வல்லின

(1) *Epigraphia Indica Vol. XVII Part VII V. G.* (2) *Assimilation.*

மாகிய ககரத்தின் முன்னர் ஒலித்தல் பெரும்பான்மையும் எளிதன்றாகலின், ணகரமும் அவ்வினத்து வல்லினமாகிய டகரமாய் மாறும். தம், தந்தை என்ற இரண்டு சொற்களையுங் கூட்டிச் சொல்லவேண்டிய விடத்து இதழ் இயைந்து பிறக்கும் மகரத்தை அண்ணம் நண்ணிய பன்முதல் மருங்கின் நாநுனி பரந்து மெய்யுற வொற்றப் பிறக்குந் தகரத்தின் முன்னர் ஒலித்தல் எளிதன்றாகலின் மகரம் நகரமாக மாறும்.

அவ்வாறே பின்னருள்ள ஒலியும் மாறலாகும். (உ-ம்)

| | | | | |
|---|---|---|---|---|
| பொன் | + | நன்று | = | பொன்னன்று |
| பொன் | + | தீது | = | பொன்றீது |

ஈண்டும் மெய்பிறிதாதற்குக் காரணம் னகரநகரங்களுக்கும், னகரதகரங்களுக்கும் பிறப்பிடம் வேறாயிருத்தலே யாகும்.

3. மிகுதல் [1].

சிலவிடங்களில் ஓரொலிக்குப் பின்னர் மற்றோரொலி வருமிடத்து இடையில் அவற்றுள் ஒன்றற்கு இயைபுபட்ட மெய்யை மிகுத்துக் கூறுதல் வழக்கம்.

நும் + ஐ = நும்மை.

4. மொழிமுதற்றோன்றல் [2].

சில மெய்களை மொழிகளின் தொடக்கத்தில் தமிழர் ஒலிப்பதில்லை. அப்போது அதற்கு முன்னர் ஒருயிரைச் சேர்த்து ஒலிப்பர். (உ-ம்)

இராமன், அரங்கன், இலங்கை.

5. மொழியிறுதிதோன்றல் [3].

இறுதியிற்றோன்றும் சில மெய்களுக்குப் பின்னர் உயிரொலி தோன்றுகின்றது. (உ-ம்)

ஏழ்—ஏழு.

(1) *Insertion.* (2) *Prosthesis.* (3) *Paragoge.*

தொல்காப்பியர்காலத்தில் 'ஏழ்' என்ற சொல் ழகரவீற்றுச் சொல்லாகும். பின்னர் அஃது 'ஏழு' என மாறிற்று. அங்கு 'உகரம்' முற்றுகரமாயிருந்திருத்தல் வேண்டும். இப்போது குற்றியலுகரம்போல் ஒலிக்கப்படுகின்றது.

6. மொழியிடைதோன்றல் [1].

மொழிகளின் இடையில் சில ஒலிகள் தோன்றுகின்றன. அவற்றுள் சில இலக்கணத்திற்கு மாறாயிருப்பினும், நாளடைவில் வழக்கில் மிகுதியாக வருதல் காணலாம். (உ-ம்)

உரிஞ் + கடிது = உரிஞுக்கடிது
ஆய்தல் — ஆராய்தல்
கோவை — கோர்வை
தேகம் — திரேகம்
கோக்காலி — கோர்க்காலி

மனநிலைகாரணம்பற்றியும் ஒலிமாறுபடுதல் உண்டு. அவையாவன:—

(1) வேறினப்படுதல் [2].

ஓரினமுள்ள பலவொலிகள் ஒருங்குவருமிடத்து, ஒன்றைச் சிலவிடத்தில் வேறினப்படுத்தலும் உண்டு. (உ-ம்)

உப்பின்றி + புற்கை = உப்பின்று புற்கை
இடையின்றி + குறுகி = இடையின்று குறுகி.
புறநா. (54)

(2) ஓரினவொலிகுன்றல்

ஓரினமுள்ள பலவொலிகளேனும் ஒலித்தொகுதியேனும் வருமிடத்து ஒரு பகுதி குன்றுதல் காணலாம். (உ-ம்)

ஆதன் + தந்தை = ஆந்தை
பூதன் + தந்தை = பூந்தை
தெங்கு + அம் + காய் = தேங்காய்

(1) *Epenthesis*. (2) *Dissimilation*. (3) *Haplology*.

இவ்வாறு குன்றுவதற்கு ஒரு காரணங் கூறுதல் கூடும், மனம் முன் வரும் ஒலிகளை ஒலித்தபோது பின்வரும் ஒலிகளை ஒலித்ததாக மயக்குற்று அவைமேலுள்ள ஒலிகளை ஒலிக்குமாறு செய்தது என்னலாம்.

(3) ஒலியிடமாறுதல்[1]. மனம் முன் ஒலியை ஒலிக்கச் செய்யாது, பின்னருள்ள ஒலியை ஒலிக்கச்செய்து, பின்னர் மயக்கத்தையுணர்ந்து விடப்பட்ட ஒலியை ஒலிக்கச்செய்யும். அப்போது இரண்டொலிகள் தம்மிடம் மாறலாகும். (உ-ம்)

தசை — சதை
சிவிறி — விசிறி
குதிரை — குருதை

இதற்குக் காரணம் நாம் எப்போதும் கையிலிருப்பதை நினையாது வரப்போகின்றதை நினைத்தலேயாகும்.

(4) தடுமாறுபுணர்ச்சி[2].

இரண்டு சொற்களின் புணர்ச்சியைத் தவறிப் பிரித்தலு முண்டு. (உ-ம்)

வாதாபி (வ்) இல்வலன் = வாதாபி + வில்வலன்
மிகினுமானம் = மிகினும் + மானம்
(மிகினும் + ஆனம் என்றதே பிழையற்றது)

நுமக்கு — உமக்கு (அவனுமக்கு)
குளாறுதல் — உளாறுதல் உருதிரம் — குருதி
குலுக்குதல் - உலுக்குதல்; கூதல் — ஊதல்

மாற்றுமுயிராற்றல்[3].

ஓருயிர் மற்றோர் உயிரைத் தன்னாற்றலான் மாற்றிவிடும்.

(உ-ம்) தமிழ்—இவர்; தெலுங்கு—வீரு

தமிழ் 'இவர்' என்றது தெலுங்கில் 'இவரு' என்று மாறி, இகரம் அகரத்தைத் தன்னினமாக்கிப் பின்னர் தான்

(1) *Metathesis.* (2) *Metanalysis.* (3) *Harmonic sequence of vowels.*

கெட, அவ்விகாரம் முன்னர் ஓரொலிகெட்டதற்குக் குறியாக நீள, வீரு என்ற உருவம் வந்தது. ஈண்டு இகரத்தின் ஆற்றலால் அகரம் இகரமாய்த் திரிந்தது காண்க. அவ்வாறே தமிழில் எனக்கு, உனக்கு என்றன நேக்கு, நோக்கு என்று மருவி வந்தன.

செய்யுளிற் சொற்கள் முதல் குன்றியும், இடை குன்றியும், கடை குன்றியும் வருதல் கூடும். அவற்றை மொழிமுதற்குறை [1], மொழியிடைக்குறை, மொழிகடைக்குறை என்னலாம். அவற்றிற்கு ஆகாயம்—காயம் (தொல். எழுத். 305), ஓந்தி—ஓதி (குறுந்தொகை 140), நீலம்—நீல் (மதுரைக்காஞ்சி 581) என்பன முறையே உதாரணமாகும்.

மேற்கூறிய ஒலிமாறுகையைக் காரணமுள்ளது, காரணமில்லது என இருவகையாகவும் பிரித்தல் கூடும். ‘கொப்பூழ்’ என்றது, ககரத்திற்குப் பிரதியாக தகரத்தையும் ழகரத்திற்குப் பிரதியாக ளகரத்தையும் ஒலிக்க, ‘தொப்புள்’ என மாறியதைக் காரணமில்லதற்கு உதாரணமாகக் கூறலாகும்.

வடிவெழுத்தின் மயக்கத்தானும் [2] தமிழ்மொழியிற் சொல்லுருவம் மாறின: அதற்கு ஏட்டில் புள்ளியிடாது எழுதலும், ரகரத்திற்கும் நெடிலைக் குறிக்குங் காலிற்கும் வேற்றுமையின்றி எழுதலும், ககரசகரங்கள், அகரசகரங்கள், னகரளகரங்கள் இவற்றினை மயக்கமுண்டாகும்படி எழுதலுங் காரணமாகும்.

| | முன்னுருவம் | பின்னுருவம் |
|---|---|---|
| 1. | கவ்வுதல் | கவவுதல் (சீவக. 1658) |
| | கனனம் (ഖനനം) | கன்னம் (பிங்.) |
| 2. | கவாச்சி (ഗവാക്ഷം) | கவர்ச்சி (மலையகராதி) |
| | பரவுதல் | பாவுதல் |
| | சரணம் (ശരണം) | சாண் |
| | சரகம் (സരകം) | சாகம் |

(1) அக்குறை உயிரயிருப்பின் அம்மாறுதல்கட்கு முறையே *Aphesis, Syncope, Apocope* எனப் பெயரிட்டார் மொழிநூல்வல்லோர். (2) *Confusion of Script.*

| | | |
|---|---|---|
| 3. | சஞ்சயம் (ஸம்ஶய꞉) | சங்கயம் (மணி. 29, 230) |
| | திசை (திஶா) | திகை (தேவா.) |
| | அள்ளல் | சள்ளல் |
| | அம்பரம் | சம்பரம் |
| | கனம் (஘ந꞉) | களம் |
| | ஈழம் | ஈனம் |

## 4. ஸ்வரம்

மொழிமாறுதலுக்குப் பல மொழிகளிற் சிறந்த காரணம் ஸ்வரமாகுமென்பர். ஆங்கிலம் போன்ற மொழிகளில் பல அசைகளிருப்பின் அவற்றுள் ஒன்றை உரப்பியும் ஏனையவற்றை அவ்வாறின்றியும் ஒலிக்கின்றனர். வடமொழியில் பண்டைக் காலத்தில் ஒன்றைத் தூக்கியும், சிலவற்றைத் தாழ்த்தியும் ஒலித்தனர். அவ்வாறு தூக்கிய வொலியை 'உதாத்தம்' என்றும், தாழ்த்திய ஒலியை 'அனுதாத்தம்' என்றுங் கூறினர். அவ்வாறு தமிழ்மொழியி லிருப்பதாகத் தோற்றவில்லை. ஆயினுஞ் சொற்களை ஒலிக்கும்போது ஒவ்வோரசையையும் ஒரே விதமாகத்தான் ஒலிக்கின்றனர் எனக் கூறவும் இயலவில்லை. 'தபு' என்றதைப் படுத்துச் சொல்லின் அது 'நீசா' என்ற பொருளைத் தந்து தன்வினையாகின்றதென்றும், எடுத்துச் சொல்லின் 'நீ ஒன்றனைச் சாவி' என்ற பொருளைத் தந்து பிறவினையாகின்றதென்றுங் கூறினர் இளம்பூரணர்[1]. எடுத்தல், படுத்தல், நலிதல் என்ற மூவகை ஒலித்தன்முறையென்று வீரசோழியவாசிரியரும், அவை முறையே உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் என்றவற்றின் பொருளைத் தருமென்று பிற்காலத்து ஆசிரியருங் கூறுவர். பேச்சில் வழங்கும் மொழி அவ்வாறு உளதா என்றதில் ஐயம் எனக்குத் தோன்றுகின்றது. ஆயினும், சொற்களின் சிலபகுதிகளைச் சிறப்பிக்கின்றனர் என்பது வெளிப்படை. உதாரணமாக இரண்டாம் வேற்றுமை முதலியவற்றின் உருபேற்ற சொற்களில் வேற்றுமையுருபினைக் கொண்ட பகுதி

(1) தொல். எழுத். 76 இளம்.

சிறக்கின்றது. இது 'நாம், தாம்' என்ற சொற்களின் நெடு முதலைக் குறுக்கி நம்மை, தம்மை என வழங்குதலானும், சாரியைகளை வேற்றுமையுருபிற்கு முன்னர்ச் சேர்த்தலானும் விளங்கும். 'போகிறான்' என்றது வழக்கில் 'போறா' என வழங்குதலைப் பார்ப்பின்[1] அதனுள் போ, ற், மூக்குவழி யொலிக்கின்ற 'ஆ' இம்மூன்றுஞ் சிறப்புப்பகுதிகள் எனத் தோற்றுகின்றது. 'போ' என்றது தாதுவாய்த் தொழிலைக் குறிக்கின்றது; 'ற்' என்றது 'கிறு' என்றதன் ஒரு பகுதியாயிருந்து நிகழ் காலத்தைக் குறிக்கும்; மூக்குவழி யொலிக்கப்படும் 'ஆ' ஆண்பாலைக் குறிக்கின்றது எனக் கூறலாகும். ஆகலின் ஒரு சொல்லிற் பல பகுதிகள் சிறப்படைகின்றன. இவ்வாறே ஆப்பிரிக்காவில் சூதனர் தங்கள் சொற்களை ஒலிக்கின்றனர் எனக் கூறினர் கிராப்[2]. ஆகலின் மொழிகளிலுள்ள சொற்களை ஒலிக்கும் முறை பலவகை யாகலாம் எனல் உணர்தற்பாலது.

---

## 5. மொழிவகுமுறை

பண்டைக்காலத்தில் மொழிகளை இருவகையாக நூல்வல்லோர் வகுத்தனர். அவை மொழிகளின் பகுதி, விகுதி இவற்றைக்கொண்டு ஒன்றும், அவ்விரண்டுஞ் சேர்ந்து சொல்லாகும் முறையைக்கொண்டு மற்றொன்றும் ஆகும். முன்னறு கூறியதை இனமொழிவகை[3] யென்றும் பிற்கூறியதைச் சொன் முறைவகை[4] எனவுங் கூறலாம்.

தாதுக்கள், விகுதிகள் இவற்றினது உருவம் பொருள் இவற்றின் ஒற்றுமையானும், மக்கள் சாதாரணமாக வழங்குஞ் சொற்களின் ஒற்றுமையானும், சுட்டுப்பெயர், எண்ணுப் பெயர் இவற்றின் ஒற்றுமையானும், பெயர் வினை இவை விகுதி யேற்கும் முறையின் ஒற்றுமையானும், மொழிகளை ஓரினத்தைச் சார்ந்தன எனச் சொல்லல் தகும். அவ்வினத் தொடக்கத்தில் ஒரு மொழியிலிருந்து பிறந்திருத்தல் கூடுமெனக் கருதி அவ்

(1) அவன் போறு, அவள் போறு, அவர்கள் போறு, அது போறது என்றது வழக்கு. (2) *Graff's Language and Languages pp, 165, 167.* **(3)** *Genealogical classification.* (4) *Morphological classification.*

வகையை 'இனமொழிவகை' எனப் பெயரிட்டனர் பண்டைக் காலத்து நூல்வல்லோர். சரித்திரவாராய்ச்சியினால் ஒவ்வொரு மொழிகளின் முன்னிலையை அறிதல்வேண்டுமாதலானும், தற்போதுள்ள நிலைகளிலிருந்து மொழிகள் ஓரினத்தைச் சார்ந்தனவா இல்லையா வென்று கூறுதல் தகாததானும், தாய்மொழி யாது என்று கூற நம்மால் இயலாததானும் 'இனமொழி வகை' என்றதற்குப் பிரதியாக மொழிசரித்தானுணரும்வகை[1] எனப் பெயரிடலாமென்பர் கிராப்.

சொன்முறைவகையான் மொழிகளைத் தனிமொழி யென்றும், ஒட்டுறிமொழி யென்றும், ஒட்டறியாமொழி யென்றும் பிரித்தனர் பண்டையர். இவ்வாறு பிரித்தற்குக் காரணங்கள், சீன மொழியில் விகுதிகளே இல்லை எல்லாம் பகுதிகளே யென்றதும், மரங்கள் முதலியவற்றில் மரம் என்றது மரத்தையும், கள் விகுதி பன்மையையுங் குறித்தலும், அவை ஒட்டுப்படுமிடமும் வெளிப்படையாய் அறியப்படுகின்றன என்றதும் இதுபோன்ற மற்றவையுமாகும். ஆனால் தற்போது கார்ல்கிரென்[2] என்பவர் சீனமொழியில் விகுதிகள் உள்ளனவென்றும், தன்மைப்பெயரைக் காட்ட நான்கு சொற்கள் உளவென்றுங் கண்டனர். தமிழிலும் கள் விகுதி பண்டைக் காலத்தில் உறழ்ச்சியாய் அஃறிணைப்பெயரின் பன்மையைக் குறிக்கவந்ததே யன்றி, எப்போதும் அது வழங்கப் படுதல் வேண்டுமென்ற நியதி இல்லை என்றதை அவர்கள் அறியாததாகும். 'மரம் செழித்தன' என்றவிடத்து 'மரம்' என்றது சாதிப் பெயராய் நில்லாது பன்மைச் சொல் என்றதை உணர்ந்திருப்பின் அவர் அவ்வாறு கூறார். அன்றியும் வடமொழியில் 'ராமம்' என்ற சொல்லில் 'ரம்' என்றது தாதுப் பொருளையும் 'அ' என்றது ஆணையும் 'அம்' என்றது இரண்டாம் வேற்றுமை யொருமையையும் குறிக்கின்றன. தமிழில் திருடனை என்ற சொல்லில் திருடு, தாதுப் பொருளையும், 'ன்' ஆணொருமையையும் ஐ இரண்டாம் வேற்றுமையையுங் குறிக்கின்றன. இரண்டிடத்தும், ஆண்மை, ஒருமை, இரண்டாம் வேற்றுமை என்ற மூன்றனையுங் குறிக்க இரண்டு

(1) *Historical classification.* (2) *Karlgren.*

விகுதிகள் தாமுள்ளன. ஒருமொழியில் ஆண்மையை மாத்திரங் குறிக்க ஒன்றும், ஒருமையையும் இரண்டாம் வேற்றுமையையுங் குறிக்க மற்றொன்றும் உள; மற்றொன்றில் ஆண்மையையும் ஒருமையையுங் குறிக்க ஒன்றும், வேற்றுமையைக் குறிக்க மற்றொன்றும் உள. இவ்வாறிருக்க வடமொழியை ஒட்டறியாமொழி யென்றும், தமிழ்மொழியை ஒட்டறிமொழியென்றும் எவ்வாறு கூறினரென்பது புலப்படவில்லை. அன்றியும் ஒரே மொழியில் மூவகைப்பட்ட முறைகளுங் காணலாம் என்றும், சொல்லாக்கும் முறைகள் இம்மூன்றுக்குமேல் பல உள்ளன என்றும் முன்னர்க் கூறப்பட்டன. ஆகலின் சொன்முறைவகையைக் கொண்டு மொழிகளை வகுத்தல் இயலாததாகும்.

இனமொழிவகையைக் கொண்டு தமிழ்மொழியைத் திராவிட மொழிகளுள் ஒன்றெனக் கருதுவர் டாக்டர் கால்ட்வெல் முதலியோர்.

## 6. திராவிட மொழிகள்

### i. அவற்றின் வகை

பிராஹுயி[1] என்ற மொழியைத் தவிர்த்து திராவிட மொழிகள் பன்னிரண்டென்பர். அவற்றுள் [2] திருத்தம்பெற்ற மொழிகள் ஆறு, [3] திருத்தம்பெறாதமொழிகள் ஆறும். தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம், குடகு இவை திருத்தம்பெற்றமொழியாகும்; துடவு, கோடா, கோண்டு, கு, ஒராயோன், இராஜ்மஹால் இவை திருத்தம்பெறாதனவாகும்.

தமிழ். முற்கூறியவற்றுள் பண்டைக்காலத்து இலக்கியவிலக்கணங்களைக் கொண்டது தமிழேயாகும். அது பண்டைக் காலத்தில் வடமொழியின் சேர்க்கையால் அடைந்த மாறுதல்கள் சிலவேயாகும்.

(1) *Brahui* (2) *Cultivated dialects* (3) *Uncultivated dialects.*

தெலுங்கு, கன்னடம். இவ்விரண்டனுள் பண்டைக்காலத்திலக்கியவிலக்கணங்கள் இல்லை. ஆயினும் அம்மொழிச் சொற்களுள் சில பண்டைக்காலத்து உருவங்கொண்டன என்றதில் ஐயமில்லை.

மலையாளம். பண்டைக்காலத்தில் தமிழின் ஒரு கிளைமொழியாயிருந்து பிற்காலத்தில் வடமொழிக்கலப்பால் அது வேறுமொழியாயிற்று எனக் கூறுதற்குச் சாஸனங்கள் முதலிய பல சான்றுகள் உள.

துளுவம். இதனில் வடிவெழுத்துக்கள் சிலநாட்களுக்கு முன்னரே கொள்ளப்பட்டன என்பர். இம்மொழியில் இலக்கிய நூல்களில்லை. சிறிது காலத்துக்கு முன்னர்தான் பாதிரிமார்கள் அம்மொழிச்சிறுநூல்களைக் கன்னடவெழுத்தால் வெளியிட்டனர்.

குடகு. இம்மொழியிலுள்ள ஒலிகள் தனிமுறையாக ஒலிக்கப்படுகின்றன. ஹளகன்னடத்திற்கும் துளுவத்திற்குமிடையே இஃதிருத்தலாகும். இதனுள் வடமொழிக்கலப்பில்லை.

துடாவும் கோடாவும். இவை நீலகிரியில் வழங்கப்படுகின்றன.

கோண்டு மத்திய இந்தியாவில் கோந்துவாளு என்ற இடத்திலும், கூ ஒரிஸ்ஸாவின் பக்கத்திலும், ஓிராஜ்மஹால் வங்காளத்து இராஜமஹால் மலைகளிலும், ஒராமோன் சூடியாநாகப்பூரின் அருகாமையிலும் வழங்கப்படுகின்றன.

ப்ராஹூய். இம்மொழி பெலுசிஸ்தானத்துள்ள மலைகளில் வழங்கி வருகின்றது. அதனுட் சில திராவிடச் சொற்களும், திராவிடமொழிவழக்குத் தொடரும் உள்ளன. அதனைத் திராவிடமொழியுளொன்றெனச் சிலர் கூறினும், பஞ்சாபி, ஸிந்தி முதலிய மொழிகளைப் பெரும்பாலுஞ் சார்ந்த மொழியெனவே கூறுவர் பலர்.

### 6. ii. அவற்றின் பொதுத்தன்மை

(1) தமிழில் சொற்கள் தம்மாற்குறிக்கப்படும் பொருள்களைக்கொண்டு உயர்திணை, அஃறிணை என இருவகையாகப்

பிரிக்கப்பட்டன. அவ்வாறே தெலுங்கில மஹத, அமஹத என்றும் பிரிக்கப்பட்டன. இவற்றை நோக்கின் திராவிடத்தாய் மொழியில் சொற்களின் பால்பாகுபாடு பொருளைப்பற்றியே யன்றி இண்டோ—யூரோபியன் மொழிகளிற்போல சொல் லுருவத்தான் அன்று என விளங்கும்.

2. அம்மொழியில் ஒருமை பன்மை என இரண்டே இருந்திருத்தல்வேண்டும்.

3. அம்மொழியில் திணைவேறுபாடு பெயரின் மாத்திரை யேயன்றி வினையிலுமிருந்திருத்தல்வேண்டும்.

4. அம்மொழியில் வினையுருவங்கள் இண்டோ—யூரோபி யன் மொழிகளிற்போல மிகுதியாக இல்லை.

5. திராவிட மொழிகளுக்கும், ஸிதியன்மொழிகளுக்குள் ஒன்றான பெஹிஸ்டீன் சாஸனங்களில் வழங்கப்பட்ட மொழிக் கும் ஒற்றுமைகள் சில என்பர் டாக்டர் கால்ட்வெல். அவை யாவன:—

i. அவை இரண்டும் ஒட்டறிமொழிகள்.

ii. இரண்டின்கண்ணும் 'ட' வருக்கம் உளது.

iii. இரண்டுள்ளும் வல்லினமெல்லினமாறுகை உளது.

iv. இரண்டினும் முன்னிலையொருமை முதல்வேற்றுமை யில் 'நீ' என்றும், ஏனைய வேற்றுமைகளில் அதன்பகுதி 'நின்' என்றும் உள.

v. பெயரெச்சம் இரண்டினும் வழங்கியுளது.

vi. திராவிடமொழிகளில் நான்காம் வேற்றுமையுருபு கு, கி, க என்றிருக்கின்றன. அம்மொழியில் 'இக்கி,' 'இக்க' என்றுள.

6. திராவிட மொழிகளுக்கும், இண்டோ—யூரோபியன் மொழிகளுக்கும் ஒற்றுமைகள் சில என்பர் அவரே. அவை யாவன: —

i. திராவிட மொழிகளினும், இண்டோ—யூரோபியன் மொழிகளுள் ஒன்றாகிய கிரேக் மொழியினும் 'ன்' உடம்படு மெய்யாய் வழங்கப்படுகின்றது.

ii. 'த்' என்றது இருவகை மொழிகளிலும் ஒன்றன்பாலை (அஃறிணையொருமை) (அலிப்பாலை)க் குறிக்கின்றது. (உ-ம்)

தமிழ் — அது
வடமொழி — தத்.

iii. தமிழ்மொழியிற்போல லத்தீன்மொழியில் பலவின் பாலைக் குறிக்க 'அ' என்ற விகுதி உளது.

iv. இருவகைமொழிகளிலும் பெரும்பாலும் அகரச்சுட்டு சேய்மைப்பொருளினையும், இகரச்சுட்டு அண்மைப்பொருளினை யுங் குறிக்கின்றன.

v. திராவிடமொழிகளிலும், பர்ஸியன் முதலிய மொழி களிலும் 'த்' இறந்த காலத்தைக் குறிக்கின்றது.

vi. இருவகை மொழிகளிலும் இறந்த காலத்தைக் குறிக் கச் சிலவிடங்களில் எழுத்திரட்டித்தல் உண்டு.

vii. தாதுக்களின் உயிரை நீட்டின், அவை வினைப்பெயர் ஆகும். உ-ம்.

| | | | |
|---|---|---|---|
| தமிழ் | விடு—வீடு | கெடு—கேடு | படு—பாடு |
| வடமொழி | வஞ்—வாஞ் | வச்—வாச் | |

viii. பலதாதுக்கள் இருவகை மொழிகளிலும் ஒத்தன.

| | | | |
|---|---|---|---|
| வடமொழி | ஸ்ம்ரு | பட் | வாஷ் |
| தமிழ் | மிதி | படி. | வாசி |

இவ்வாறு திராவிட மொழிகளுக்கும் ஸிதியன் இண்டோ-யூரோபியன் மொழிகளுக்கும் ஒற்றுமையிருப்பினும், அவை பெரும்பாலும் ஸிதியன் கூட்டத்தையும், சிறுபான்மை இண்டோ-யூரோபியன் கூட்டத்தையுஞ் சார்ந்தன என்றுங் கூறுவர் டாக்டர் கால்ட்வெல். ஆயினும் அவர் கூறுங் காரணங் களுட் சில பண்டைத்தமிழ்மொழியில் இல்லாமையின் அஃது ஆராய்தற்குரியது.

## 6. iii. அவையும், வடமொழியும்

திராவிடமொழிகள் வடமொழியின் சிதைவு எனக் கருதுவர் சிலர். அவர் கூற்றுப் பொருந்தாதென்பது என் கருத்து. அதற்குக் காரணங்களாவன:—

1. திராவிடமொழிச்சொற்களுள் பெரும்பகுதி வடமொழிச்சொல்லல்ல

2. திராவிடமொழிகளிலுள்ள சுட்டுப்பெயர், எண்ணுப் பெயர், வேற்றுமையுருபு, வினைவிகுதி முதலியன வடமொழியிலுள்ளனவற்றிலிருந்து மாறுபட்டன.

3. திராவிடமொழியுட் பழமையான தமிழ்மொழியில் சொற்கள் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என நால்வகைப்படுமென்பர் ஆசிரியர் தொல்காப்பியனார். அவற்றுள் இயற்சொல்லும், திரிசொல்லும் தமிழிற்கே உரித்தான சொற்களென்றதில் ஐயமில்லை.

4. இன்றும் வடமொழிச்சொற்களைக் கலக்காது தன் கருத்துக்களை வெளியிடக்கூடிய திராவிடமொழிகளும் உள.

5. திராவிடமொழிச் சொல்லிலக்கணத்திற்கும், வடமொழிச் சொல்லிலக்கணத்திற்கும் மாறுபாடு பல உள. அவை யாவன:—

i. பொருள் காரணமாகச் சொற்களை உயர்திணை, அஃறிணையென்றும், மஹத் அமஹத் என்றும் பிரித்தல் வடமொழியில் இல்லை. ஆங்குச் சொல்லுருவத்தைக்கொண்டே புல்லிங்கம் (ஆண்பால்), ஸ்திரீலிங்கம் (பெண்பால்), நபும்ஸக லிங்கம் (அலிப்பால்) என உணர்தல்வேண்டும்.

ii. தமிழில் வேற்றுமை ஓர் உருபானும், பாலும் எண்ணும் மற்றோர் உருபானும் உணர்த்தப்படுகின்றன. வடமொழியில் வேற்றுமையும் எண்ணும் ஓர் உருபானும், பால் மற்றோர் உருபானுமுணர்த்தப்படும்[1]. (உ-ம்)

அவனை ; வடமொழி—ராமம்

(1) தமிழில் பன்மையைக் குறிக்க கள் விகுதியும், வேற்றுமையைக் குறிக்க வேறோர் உருபும் இருக்கின்றன என்று கூறுதல் இக்காலத்து வழங்கும் மொழிகளுள் பசுக்கள், மாடுகள்போன்ற சிலவற்றிற்குத்தான் பொருந்தும்.

iii. தமிழ்மொழியில் அஃறிணைப்பெயர் 'கள்' விகுதி ஏலாது பன்மை வினைகொள்ளும். உ-ம். மாடு சென்றன. அவ்வாறு வடமொழியில் இல்லை.

iv. தமிழ்மொழியில் விசேடணமெல்லாம் பெயரெச்சமாய் நின்று, பெயரைத்தழுவும். அப்பெயர் எவ்வேற்றுமையாயிருப்பினும் எப்பாலாயிருப்பினும் அவை ஒரே உருவங்கொள்ளும். (உ-ம்)

நல்ல மகன், நல்ல மகள், நல்ல மக்கள், நல்ல எருது, நல்ல மகளை......... அவ்வாறு வடமொழியில் இல்லை.

v. தமிழ்மொழியிலுள்ள 'ஏ, ஓ' என்ற எழுத்துக்கள் வடமொழி 'ஏ, ஓ' என்றவற்றைப்போல் சந்தியக்கரமல்ல.

vi. தமிழ்மொழி 'ஐ, ஔ' என்பன 'அய், அவ்' என்று மாறும். வடமொழியில் அவை 'ஆய், ஆவ்' என மாறும்.

vii. தமிழ்மொழியில் புணர்ச்சியில் உடம்படுமெய்வருதல் பெரும்பான்மை. வடமொழியில் அது சிறுபான்மையே.

viii. தமிழ்மொழியில் இரண்டு மொழிகளின் புணர்ச்சியை அறிய, அவற்றின் பொருளை அறிதல் இன்றியமையாதது. அவ்வாறு பெரும்பாலும் வடமொழியில் இல்லை.

ix. தமிழ்மொழியில் வாரான், வந்திலன், வந்தானல்லன் என்ற எதிர்மறைவினைகள் எவ்வாறு வழங்கப்படுகின்றனவோ அவ்வாறு வடமொழியில் இல்லை.

x. வடமொழியில் எவ்வாறு செயப்பாட்டுவினை விகுதியாக வழங்கப்படுகின்றதோ அவ்வாறு தமிழ்மொழியில் இல்லை. தமிழ்மொழியில் 'எனப்படுவ' போன்ற செயப்பாட்டுவினைகள் என, படுவ என்ற இருசொற்களால் ஆக்கப்பட்டிருக்கக் கூடும். அவ்வாறாயின் ஒருகாலத்தில் தமிழ்மொழியில் செயப்பாட்டு வினையே இல்லை என டாக்டர் கால்ட்வெல் கூறுவது பொருந்தும்.

xi. தமிழ்மொழியில் 'மூவேந்தரும் வந்தனர்' என்றது போன்ற இடங்களில் இனைத்தெனவறிந்த சினைமுதற்கிளவிக்கு 'உம்மை' வருதற்போல் வடமொழியில் இல்லை.

xii. வடமொழியில் உபசர்க்கங்கள் பல. தமிழ்மொழியில் அவை சிலவேயாகும்.

xiii. தமிழ்மொழியில் பல செயல்களைக் குறிக்க முற்றினையும் உம்மையையும் வழங்காது ஒன்றனைக் குறிக்க வினைமுற்றும், ஏனையவற்றைக் குறிக்க வினையெச்சங்களும் வழங்கலாகும். வடமொழியில் முற்றும் உம்மையும் வழங்கும்.

xiv. தமிழ்மொழியில் படர்க்கைவினையில் ஆணொருமை, பெண்ணொருமை, அஃறிணையொருமை இவற்றைக் குறிக்கத் தனி விகுதிகள் உள. அவ்வாறு வடமொழியில் இல்லை.

xv. வடமொழியில் 'ய:' என்ற சுட்டுப்பெயர் வழங்குமிடங்களில் தமிழில் பெயரெச்சம் வழங்கப்படுகின்றது. (உ-ம்)

வடமொழி யஃ ஏவம் அகரோத், ஸஃ ஆகச்சதி.

தமிழ் இவ்வாறு செய்த அவன் வருகின்றான்.

மணிமேகலையில் ய: என்றதனிடத்தில் எவன் என்றது வழங்கப்படுகின்றது.

xvi. தமிழ்மொழியில் யாவன், யாவள், யாவர், யாது, யாவை எவ்வாறு வினைப்பெயர்களாக வழங்கப்படுகின்றனவோ அவ்வாறு வடமொழியில் க:, கா, கே, கிம், கானி என்ற சொற்கள் வழங்கப்படுகின்றன.

xvii. தமிழ்மொழியில் தன்மைப்பன்மையைக் குறிக்க நாம், நாங்கள் (யாம் யாங்கள்) என்ற இரண்டு சொற்கள் உள என்றும், அவற்றுள் நாம், யாம் என்பன தன்னையும் முன்னின்றானையுங் குறிக்குமென்றும், நாங்கள், யாங்கள் என்பன தன்னையும் படர்க்கையானையும் உளப்படுக்கும் என்றும், அவ்வாறு வடமொழியில் இல்லையென்றுங் கூறுவர் **டாக்டர் கால்ட்வெல்.**

'நாங்கள், யாங்கள்' என்ற சொற்கள் பண்டைத் தமிழில் இல்லை என்றது முன்னர்க் கூறப்பட்டமையின் அவர் கூற்று இக்காலத்திற்குப் பொருந்துமேயன்றி பண்டைத்தமிழிற்குப் பொருந்தாது.

xviii. வாழிய, வாழியர் முதலிய வியங்கோள்வினை தொல்காப்பியர் காலத்தில் படர்க்கைப்பாலெல்லாவற்றினும், பின்னர் மூவிடங்களினும் எவ்வாறு ஒரே உருவங்கொண்டதோ அவ்வாறு வடமொழியில் இல்லை.

xix. 'செயின்' என்றதைப்போன்ற நிபந்தனையைக் குறிக்கும் வினையெச்சம் வடமொழியி லில்லை.

xx. ஆண் பெண் ஐயந்தோன்றியவழி, தமிழ்மொழியில் பன்மை வினை வழங்கப்படும். அவ்வாறு வடமொழியில் இல்லை.

xxi. பகுதியே தமிழ்மொழியில் முதல் வேற்றுமை யாகும்; ஆங்கு உருபு இல்லை. வடமொழியில் சிலவற்றிற்கு முதல் வேற்றுமையினும் உருபு உண்டு.

xxii. வடமொழியில் வினைவிகுதிகளுட் சில ஆற்பனே பதவிகுதிகளெனவும், சில பரஸ்மைபதவிகுதிகளெனவுமுள. அவ்வாறு தமிழ்மொழியில் இல்லை.

xxiii. தழுவும் வினைக்கு முன்னர் வேற்றுமையுருபேலாது அவ்வேற்றுமைப் பொருளில் பெயர்கள் தமிழில் வருதல் கூடும். வினைக்குப்பின்னரும் இரண்டு, ஏழு இவ்வேற்றுமையுருபுகள் தொக்கு அவை வருதல் கூடும். வேதத்தில் சிலவிடங்களில் அவ்வாறு இருப்பினும் பிற்காலத்து வடமொழியில் அவ்வழக்கு இல்லை.

xxiv. ஒருவன், ஒருத்தி இருவரையுங் குறிக்கப் பொதுவாய் 'ஒருவர்' என்ற சொல் தமிழ்மொழியில் இருப்பதுபோல, வடமொழியிலில்லை.

xxv. தமிழ்மொழியில்

நிற்கண்டனேன்வருவல் (புறநா. 23)

என்றவிடத்திற்போல் பல வினைமுற்றுக்கள் உம்மையின்றி வந்து இறுதியிலுள்ள வினைமுற்றைத்தழுவும். அவ்வாறு வடமொழியில் இல்லை.

xxvi. உயிரளவுமாறுதல்[1] வடமொழியிற் பெரும்பான்மை; தமிழ்மொழியிற் சிறுபான்மை.

xxvii. மொழிமுதலில் உயிரிடையின்மெய்கள்[2], ட, ர, ல—க்கள் இவை வடமொழியில் வரும்; பண்டைத்தமிழ்மொழியில் அவை வாரா.

xxviii. சொல்வகையான் ஆட்டுவித்தல், ஆட்டுவிப்பித்தல் போன்ற ஈரேவல், மூவேவல் இவற்றைக் குறிக்கும் வினைகள் வடமொழியில் இல்லை.

(1) *Vowel-Gradation.* (2) ஸம்யுக்தாக்ஷரங்கள்.

# II. எழுத்தியல்

## 1. எழுத்துக்களின் வகையும், பிறப்புமுறையும்

திராவிடமொழிகளுட் சிறந்த தமிழ்மொழியில் எழுத்துக்கள் முதலெழுத்து, சார்பெழுத்து என இருவகையன. முதலெழுத்து உயிர், மெய் என இருவகையாகப் பிரிக்கப்பட்டன. அவற்றுள் உயிரெழுத்து பண்டைக்காலத்தில் குறில் நெடில் என இருவகைப்பட்டன.

குறில்:—அ, இ, உ, எ, ஒ

நெடில்:—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ.

கி. பி. பத்தாம் நூற்றாண்டு தொடங்கி அவை குறில், நெடில், அளபெடை என மூவகைப்பட்டன.

அளபெடை:—ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ.

அவற்றுள் குறில் ஒரு மாத்திரையும், நெடில் இரண்டு மாத்திரையும், அளபெடை மூன்று மாத்திரையும் ஒலிக்கும்.

[1] மெய்யெழுத்து பண்டைக்காலத்தில் வல்லினம், மெல்லினம், இடையினம் என மூவகைப்படும். அவை அரைமாத்திரை யொலிக்கும்.

வல்லினம்:—க், ச், ட், த், ப், ற்

மெல்லினம்:—ங், ஞ், ண், ந், ம், ன்

இடையினம்:—ய், ர், ல், வ், ழ், ள்

இக்காலத்தில் அவை நால்வகைப்படுமென்று கூறல்வேண்டும். அவை வல்லினம், மெல்லினம், மூக்கினம், இடையினம் என்பனவாகும்.

(1) திராவிடத்தாய்மொழியில் பண்டைத்தமிழிலுள்ளவாறே மெய் பதினெட்டே இருத்தல் கூடும்

வல்லினம்—க், ச், ட், த், ப், ற்.
மெல்லினம்—ம்(g), ஜ்(j), ட்(d), த்(d), வ்(b), ஹ்(h).
மூக்கினம்—ங், ஞ், ண், ந், ம், ன்.
இடையினம்—ய், ர், ல், வ், ழ், ள், ஶ், ஷ், ஸ்.

*சார்பெழுத்து பண்டைக்காலத்தில் இ, உ, ஃ ஆகிய மூன்று என்றும், பிற்காலத்தில் ஒன்பது அல்லது பத்து என்றுங் கூறுவர்.*

எழுத்துக் கருவிகள்.

*தொண்டைக்குழி, ஒலிநரம்புகள், உண்ணாக்கு, அண்ணம், நா, பல், இதழ், மூக்கு முதலியன சிறப்பாக எழுத்துக்கருவிகளாகும்.*

எழுத்துக்களின் பிறப்புமுறை.

*மூச்சை வெளிவிடும்பொழுது காற்று நுரையீரல் இரண்டினுமிருந்து கிளம்பி, தொண்டைவழியாக மூக்கிற்குச் சென்று வெளியிற்செல்லும். வாய் வழியாகவுஞ் செல்லலாகும். அப்போது அக்காற்று ஒலிநரம்புகள், அண்ணம், நா முதலிய ஒலிக் கருவிகளால் ஒரு செய்கையும் பெறாது வெளியிற்செல்லுகின்றது. அக்காற்றே அவற்றால் செய்கை செயப்படின் எழுத்தாக மாறும்.*

*அவ்வெழுத்துக்களுட் சிலவற்றை ஒலிக்கும்பொழுது வாய் முழுதுந்திறந்தும், சிலவற்றை ஒலிக்கும்பொழுது வாய் சிறிது திறந்தும் சிறிது மூடியும் இருக்கும். சிலவற்றைப் பின் வரும் உயிரோடின்றி ஒலித்தல் இயலாது; ஆகலின் அவ்வொலிகள் உண்டாகும்பொழுது வாய் முழுதும் மூடியிருக்கும்.*

*வாய் முழுதுந் திறந்தொலிக்கும் எழுத்துக்கள் உயிரேயாம். சிறிது திறந்துஞ் சிறிது மூடியு மொலிக்கு மெழுத்துக்கள் இடையினவெழுத்துக்களாம். முழுதும் மூடியுண்டாகுமெழுத்துக்கள் வல்லினமெல்லினமூக்கினவெழுத்துக்கள் ஆகும். சார்பெழுத்துக்களுள் 'ஃ' உண்டாம்போது வாய் பெரும்பாலும் மூடியிருக்கும். இ, உ இவற்றை ஒலிக்கும் போது வாய் திறந்திருக்கும்.*

---

## 2. எழுத்துக்களின் பிறப்பிடம்

அ, ஆ இவற்றின் பிறப்பிடம் வாய்முழுதுமென்பர் சிலர். அவருள் ஆசிரியர் தொல்காப்பியரும் ஒருவரென அவற்றுள்

அ ஆ ஆயிரண் டங்காந் தியலும் (தொல். எழுத். 85)

என்ற சூத்திரத்தான் அறியக்கிடக்கின்றது. ஏனையோர் அவை தொண்டையிற் பிறக்கின்றன என்பர்.

இ, ஈ, எ, ஏ, ஐ. அண்பல்முதலும் நாவிளிம்பும் உற இவை பிறக்கும்.

உ, ஊ, ஒ, ஓ, ஔ. இதழ் குவிய இவை பிறக்கும்.

இ, ஈ இவ்விரண்டனையும், எ, ஏ இவ்விரண்டனையும் ஐகாரத்தையும் ஒலிக்கும்போது இடத்திற் சிறு மாறுபாடுகள் உள்ளன. அவற்றை

தந்தந் திரிபே சிறிய வென்ப (தொல். எழுத். 88)

என்ற சூத்திரத்தில் ஆசிரியர் குறித்தனர். அவ்வாறே உ, ஊ இவ்விரண்டனையும், ஒ, ஓ இவ்விரண்டனையும், ஔகாரத்தையும் ஒலிக்கும்போது சில மாறுபாடுகள் உள்ளன.

க, ங, ஙு. முதல்நாவும் முதலண்ணமும் ஒட்டி நிற்க இவை பிறக்கும்.

ச, ஜ, ஞ. இடைநாவும் இடையண்ணமும் ஒட்டி நிற்க இவை பிறக்கும்.

ட, ஶ, ண. நுனிநாவும் நுனியண்ணமும் ஒட்டி நிற்க இவை பிறக்கும்.

த, ஸ, ந. அண்ணத்தின் அருகிலுள்ள பல்முதற்கண் நாநுனி பரந்து ஒற்ற இவை பிறக்கும்.

ப, வ, ம. ஈரிதழ்களும் இயைய இவை பிறக்கும்.

ய. இடைநா இடையண்ணத்தையடைய இது பிறக்கும்.

ர. நுனிநா அண்ணத்தின் நுனியை நெருங்கித் தடவ இது பிறக்கும்.

ல. நாவிளிம்பு அண்பன்முதலை ஒற்ற இது பிறக்கும்.

வ. மேற்பல் கீழுதடுடன் இயைய இது பிறக்கும்.

ழ. நாநுனி வளைந்து அண்ணத்தின் முற்பகுதியைத் தடவ இது பிறக்கும்.

ள. நாநுனி வளைந்து அண்ணத்தின் முற்பகுதியைத் தடவ இது பிறக்கும்.

ற, ன. நாநுனி அணர்ந்து அண்ணத்தின் இடையை ஒற்ற இவை பிறக்கும்.

சார்பெழுத்துக்கள் அவற்றிற்குச் சார்பான எழுத்துக்களின் பிறப்பிடத்திற் பிறக்குமென்பர் ஆசிரியர் தொல்காப்பியனார். அவ்வாறு கூறிற்றிலர் பின்னோர். அது பின்னர்க் கூறப்படும்.

---

## 3. உயிரெழுத்து

**அ.** தமிழ்மொழியில் அகரத்தை ஒலித்தல் எளிதன்றெனவும் அதுகாரணமாக அவ்வெழுத்து வேறெழுத்தாக மாறுதற்கு இடனிருக்கின்றதெனவுங்கூறி, அதற்கு உதாரணமாக வலம்[1] வேலம், ஜபம்—சேபம் என்பனவற்றைக் கூறினர் டாக்டர் கால்டுவெல். இவ்வாறு மாறுதற்கு உதாரணமாக இயற்சொற்களைக் கூறாது வருக்கத்தின் மூன்றாமெழுத்தின் பின்னர் வந்த அகரத்தைக்கொண்ட தற்பவச்சொற்களைக் கூறினமையானும், ம, ஜ, ய, ஷ, வ இவ்வெழுத்துக்கள் ஒலிக்கப்படும்போது அகரச்சாரியையயில்லாது எகரத்தைப்போன்ற ஒலியைச் சாரியையாகக்கொள்ளுதலானும் அவர்கூற்றுப் பண்டைத்தமிழிற்கும், இயற்சொற்களுக்கும் ஒவ்வாததாகும். ஆயினும் இக்காலத்தில் அவ்வாறு வருதலுண்டு.

(1) *C. D. G. p. 133*

| (உ-ம்) வடமொழி | தமிழ் | |
|---|---|---|
| 𑌗𑌂𑌗𑌾𑌤𑍀𑌰𑌃 | கெங்காதிரம் | (பெருங்கதை 33, 220) |
| 𑌗𑌰𑍁𑌡𑌃 | கெலுழன் | (சீவகசிந், 1926) |
| 𑌗𑌤𑌾𑌯𑍁𑌃 | கெதாயு | (வில்லி. பா. 405, 37) |
| 𑌗𑌜𑌃 | கெசம் | (தாயுமான. 33, 6) |
| 𑌶𑌵𑌃 | செவம் | (சேதுபு. 319, 2) |
| 𑌬𑌹𑍁𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌃 | வெகுவிரியன் | (பிரயோ. விவே. 24) |

அவ்வாறு திரியாதிருத்தலுமுண்டு. (உ-ம்)

| | | |
|---|---|---|
| 𑌗𑌗𑌨𑌮𑍍 | ககனம் | (கந்தபு. 1. 493, 13) |
| 𑌗𑌂𑌗𑌾 | கங்கை | (பெரியாழ். திரு. 80, 1) |

அன்றியும் திராவிடத்தாய்மொழியீற்றிலுள்ள அகரம் தமிழில் ஐகாரமாயும், கன்னடத்தில் எகரமாயும் மாறும் என அவரே கூறினர்.

தமிழ்மொழியில் அகரவீற்றுச்சொற்கள் சில என்றதில் ஐயமில்லை. அவை பல்ல, பல, சில, உள்ள, இல்ல முதலியன. ஆயினும் அகரம் ஐகாரமாக மாறிற்று என்ற கூற்று ஆராய்தற்பாலது. அவர் கூறியதற்குக் காரணம் தமிழ்மொழியில் ஐகார வீற்றுச்சொற்களுக்கு இனமாகிய தெலுங்குமலையாளமொழிச் சொற்கள் ஈற்றில் அகரத்தைக்கொண்டன என்பதுபோலும்.

| | தமிழ் | தெலுங்கு | மலையாளம் | கன்னடம் |
|---|---|---|---|---|
| (உ-ம்) | கடை | கடு | கடு | கடெ |
| | கரை | கர | கர | கரெ |
| | களை | | கள | களெ |
| | கறை | கர | கற | கறெ |

டாக்டர் கால்ட்வெலே தமிழ்மொழி திராவிடமொழிகளுள் மிகப் பழமையானது எனக் கூறியிருத்தலானும், பானை முதலிய ஐகாரவீற்றுச்சொற்கள் பேச்சில் எகாரவீற்றுச் சொற்களாக வழங்குகின்றமையானும், ஐகாரம் 'அய்' என ஒலித்தலுங்கூடு மென ஆசிரியர் தொல்காப்பியனார்

அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயே னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும். (தொல். எழு. 56)

எனக் கூறுதலானும், அவ்வீற்று யகரப்புள்ளி நாளடைவில் ஒலிக்காதிருத்தல்கூடுமாதலானும், அகரம் ஐகாரமாக மாறிற்று எனக் கூறுதலினும், ஐகாரம் அகரமாக மாறிற்று எனக் கூறுதல் பொருந்துமென்பது என் கருத்து. ஆயினும் பிற்காலத்தில் சகரத்திற்கு முன்னருள்ள அகரம் ஐகாரமாக மாறியிருத்தல் காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| அரசன் | — | அரைசன் | |
| மஞ்சு | — | மைஞ்சு | (நன்னூல் 123) |
| மயல் | — | மையல் | |

ஒற்றுமைப்போலிகாரணமாக ழகரளகரத்திற்கு முன்னரும் அகரம் ஐகாரமாக மாறியதுமுளது. (உ-ம்)

| | | |
|---|---|---|
| பழமை | — | பழைமை |
| இளமை | — | இளைமை |

அகரம் வாயடி சிறிது குறுகிப் பிறக்குமென வடமொழி இலக்கணங்களில் கூறியிருப்பினும், தென்னாட்டில் அஃது அங்காந்து ஒலித்தற்குக் காரணம் தமிழ்மொழியில் அகரம் அவ்வாறு ஒலித்தலே என்னலாம்.

ஆ. தமிழ்மொழியில் இரண்டு அகரக்குறில் சேர 'ஆ' உண்டாயிற்று என்பர் டாக்டர் கால்ட்வெல். இரண்டு அகரம் சேர்ந்துவரின் இடையில் உடம்படுமெய் வருதலே தமிழ்மொழியின் இயல்பாகும். ஆகலின் அவர் அவ்வாறு கூறுதல் பொருந்தாது.

ஆயினும் அவ்வாறு அவர் கூறுதற்குக் காரணம் 'இராமாயணம்' முதலிய சொற்கள் இராம, அயனம் என்ற இரு தமிழ்ச் சொற்களால் ஆக்கப்பட்டதென்ற மயக்கமேயாகும். 'இராமாயணம்' என்ற சொல் வடமொழி 'ராமாயண' என்ற தொகைச் சொல்லின் தற்பவமேயன்றி இராமன், அயனம் என்ற இரு தற்பவச்சொற்களாலாகிய தொகையன்று. ஏனெனின் அவை தொகையாம்போது இராமனயனம் என்றே ஆதல் கூடும்.

வடமொழியின் பெண்பாற்சொற்களிலுள்ள ஈற்றுகாரம் தமிழ்மொழியில் ஐகாரமாக ஆகும் என்றனர் டாக்டர்

கால்ட்வெல். பெரும்பான்மையும் அவ்வாறு இருப்பினும் சில விடங்களில் அவ்வாறு இல்லை. (உ-ம்)

அநுகம்பம்......உடையாரே சிறந்தார் (சிவதரு. பல. 39)

இ. பண்டைத்தமிழில் மொழியீற்றிலுள்ள யகாரமும் இகரமாக மாறுமென ஆசிரியர் தொல்காப்பியனார் கூறும்

இகர யகர மிறுதி விரவும் (தொல். எழுத். 58)

என்ற சூத்திரத்தான் விளங்கும்.

(உ-ம்) நாய் — நாஇ

லகரமுதலாகிய வடமொழிச்சொற்கள் தற்பவமாம்போது தொடக்கத்தில் இகரம் தோன்றுகின்றது.

(உ-ம்) இலக்குமி.

வடமொழிச்சொற்களின் இடையில் ஸம்யுக்தாக்ஷரமிருப்பின், அச்சொற்கள் தற்பவமாம்போது அவற்றினிடையில் இகரந்தோன்றுகின்றது.

| | வடமொழி | தமிழ் |
|---|---|---|
| (உ-ம்) | ஶுக்லம் | சுக்கிலம் |
| | வாத்யம் | வாத்தியம் |
| | பத்ரம் | பத்திரம் |

'நின்' என்ற பகுதியின் இகரம் பண்டைத்தமிழில் நினக்கு முதலிய சொற்களிலிருப்பினும் 'நமக்கு' என்றவிடத்துள்ள உகரத்தை நோக்கி ஒற்றுமைப்போலியான் உகரமாக, நுனக்கு என்ற வழக்கு வந்திருத்தல்வேண்டுமென்றது

நுன சீரடி நோவ (சீவகசிந். 1517)
நுன்பதிப் பெயர்க்கும் (பெருங்கதை i—32, 93)

முதலிய விடங்களில் நுன, நுன் என்ற பகுதிகளான் அறியப்படுகின்றது. பின்னர் 'நுனக்கு' என்றது தடுமாறுபுணர்ச்சியால் 'உனக்கு' என வந்துளது.

ஈ. நீயென்கிளவியின் ஈகாரம் வேற்றுமையுருபேற்குங்கால் குன்றி அதன்பின்னர் னகரப்புள்ளியை யேற்கும்.

(உ-ம்) நீ—நின்னை, நின்னால்

பிற்காலத்தில் அஃது உகரமாகவும் மாறிற்று. வடமொழிச் சொல்லீற்றிலுள்ள ஈகாரம் தற்பவத்தில் இகரமாகின்றது.

(உ-ம்) வடமொழி—மாணீ தமிழ்—குணி

உ. உயிர்களுள் உகரம் வெகு இலேசான எழுத்தென்றும், அது சொல்லிறுதியில் மாத்திரையிற் குன்றுமென்றும், வல்லினவெழுத்துக்கள் சொற்களின் ஈற்றில் வரின், அது அவற்றின் பின்னர்த் தோன்றுமென்றும், மொழிகளின் இடையிலும், வல்லினத்திற்கும், அதனோடு இயையாத மற்றெழுத்திற்கும் இடையில் தோன்றுமென்றுங் கூறுவர் டாக்டர் கால்ட்வெல்.

ஈண்டுக் குறிக்கத்தக்க செய்திகள் சில. குற்றியலுகரத்திற்கும் உகரத்திற்கும் மாத்திரையில் மாத்திரம் வேறுபாடுளது என்ற நன்னூலார் கொள்கையை டாக்டர் கொண்டனரேயன்றி, குற்றியலுகரத்தின் பிறப்பிடம் அதன் சார்பின் பிறப்பிடமேயென்று கூறிய ஆசிரியர் தொல்காப்பினார் கொள்கையை நோக்கிலர். தமிழ்மொழியில் இயற்சொற்கள் வல்லினத்தை ஈறுகக் கொள்ளா. அன்றியும், 'வாக்கு' முதலிய தற்பவங்களிலுள்ள 'உகரம்' முற்றியலுகரமென்பர் சிலர். செய்யுளீட்டச் சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனப் பிரித்த ஆசிரியரது கொள்கையில் வடசொல்லாகிய 'வாக்கு' என்றதன் ஈற்றிலுள்ளது குற்றியலுகரம் என்றுற் குற்றமென்னை என்றது ஆராய்தற்பாலது. 'அத்துவைதம்' போன்ற தற்பவங்களில் இடையில் உகரம் வந்தது. ஆயினும் இவ்வுகரம் முற்றுகரமென உணர்தற்பாலது.

ஊ. பெரும்பாலும் இது மாறாதிருக்கின்றது. ஆயினும் மொழிமுதலாக வரும்போது சிலவிடங்களில் அதன் முன்னர் வகரத்தைக் கூட்டி ஒலிக்கின்றனர்.

(உ-ம்) ஊக்கம் — வூக்கம் (வின்ஸான்)[1]

எ. ஒ. இவ்வொலிகள் வடமொழியில் இல்லையென்று டாக்டர் கால்ட்வெல் துரையும், 'சாமவேதமுடையாருள் ஒரு சாரார் இசைப்பற்றிக் குழூஉக்குறிபோலக் கொண்டோதுபவா

(1) *M. J. Vinson*

கலானும்'' என்று சிவஞானமுனிவருங் கூறுதல் காண்க. அவர் குறித்த சாமவேதத்தின் ஒருசாரார் ஸாத்யமுக்ரி, ராணாயனீயம் என்ற இருசாகையைச் சார்ந்தாரென்பர் வட மொழி மஹாபாஷ்யமியற்றிய பதஞ்சலிமுனிவர்[2]. இவ்வெழுத் துக்கள் மொழிமுதலாய் வரின், அவற்றின் முன்னர் முறையே யகரவகரங்கள் ஒலிக்கப்படுகின்றன என்பர் வின்ஸான்[3]. இவ் வாறு ஒலித்தல் தமிழ் ஜில்லாக்களில் சில பகுதிகளிலிருப்பி னும் யாழ்ப்பாணத்தில் இல்லை என்பர் அவ்வூரார்.

ஏ, ஓ. பிரயோகவிவேகவாசிரியரும், சிவஞானமுனிவரும், டாக்டர் கால்ட்வெல்லும் இவற்றைச் சந்தியக்கரமென்பர். அவ்வாறு கூறுதற்குக் காரணம் இவையும், வடமொழி ஏ, ஓ என்ற எழுத்துக்களும் ஒருவகைப்பட்டன என்ற எண்ணமே யாகும். அவ்வாறு எண்ணுதல் பொருந்தாதென்றது என் கூற்று. வடமொழியில் அகரத்திற்கும் இகரத்திற்குமேனும் அகரத்திற்கும் ஈகாரத்திற்குமேனும், ஆகாரத்திற்கும் இகர ஈகாரங் களுக்கேனும் புணர்ச்சி வரின், அவை பெரும்பான்மையும் ஏகாரமாகவே மாறும். அவ்வாறே அகர ஆகாரங்களுக்கும் உகர ஊகாரங்களுக்கும் புணர்ச்சி வரின், அவை ஓகாரமாக மாறும். இரண்டு எழுத்துக்கள் சேர்ந்து ஏகாரஓகாரங்கள் வருதலின் அவற்றை வடமொழியில் சந்தியக்ஷரமென்பர். தமிழ்மொழியிலோ அவை முறையே அ(ய்)இ, அ(ய்)ஈ; ஆ(ய்)இ, ஆ(ய்)ஈ; அ(வ்)உ, அ(வ்)ஊ; ஆ(வ்)உ, ஆ(வ்)ஊ என ஆகும். ஆகலின் தமிழ்மொழியிலுள்ள ஏகாரஓகாரங்கள் சந்தியக்கரமாகா. இண்டோ-யிரோபியன் தாய்மொழியிற்போல அவை தனியெழுத்துக்களே யாகும்.

ஐ. ஐகாரம் எவ்வாறு ஒலிக்கப்பட்டதென்றது ஒருவாறு

அகர விகர மைகார மாகும் (தொல். எழுத். 54)

என்ற சூத்திரத்தான் விளங்கும். ஐகாரத்திற்குப் பிரதியாக 'அய்' என எழுதப்பெறும் என்றதும் விளங்கும். வடமொழி யிலோ ஐகாரத்திற்குப் பிரதியாக 'ஆய்' வருமேயன்றி 'அய்'

(1) தொல்காப்பிய முதற்சூத்திரவிருத்தி பக். 26. (2) மஹாபாஷ்யம் I-22. (3) *A temporary fact of Phonetics in Dravidian—Dixieme Serie Tome 5, 1911 (J. A.)*

வாராது. ஆயினும் இக்காலத்தில் வடமொழி ஐகாரம் தமிழ் மொழியிற்போல ஒலிக்கப்படினும், ஒருகாலத்தில் 'ஆஇ' என்றும், மற்றொருகாலத்தில் 'அஈ' என்றும் ஒலிக்கப்பட்டதென தைத்திரீயப்ராதிசாக்கியம், மஹாபாஷ்யம் முதலிய நூல்களிலிருந்து அறியக்கிடக்கும். ஆகலின் அஃது இப்போது 'அஇ' என ஒலித்தற்குக் காரணம் தமிழ்மொழி ஐகாரம் அவ்வாறு ஒலித்தலே ஆகலாம் என்பது என் கொள்கை.

டாக்டர் கால்ட்வெல் "தமிழ் ஐகாரம் வடமொழி ஐகாரத்தைப்போல் அகரஇகரங்களால் ஆகாது, எகரஇகரங்களாலாதல் வேண்டும். ஏனெனில் கிரந்தம், மலையாளம் இம்மொழிகளின் வடிவெழுத்துக்களில் ஐகாரம் இரண்டு எகரங்களாலாயிருக்கின்றது; அன்றியும் தமிழ்மொழியில் ஐகாரமிருக்குமிடத்து மலையாளம், கன்னடம் இம்மொழிகளில் எகரங் காணப்படுகின்றது" எனக் கூறினர். இக்கொள்கை ஆசிரியர் தொல்காப்பியனாரது கொள்கைக்கு மாறுபட்டிருத்தலானும், வடிவெழுத்தைக்கொண்டு ஒலியெழுத்தின் தன்மையைக் கூறுதல் எங்கும் பொருந்துமெனக் கொள்ளுதல் பொருந்தாமையானும், அவர் கூற்றுப் பொருந்தாதென்பது என் கருத்து.

ஔ. 'ஔ' என்ற ஒலி திராவிடமொழிகளில் முன்னர் இல்லையென்றும், வடமொழியிலிருந்தே கொள்ளப்பட்டதென்றும், அவை சௌக்கியம் முதலிய தற்பவச்சொற்களில் தான் காணப்படுகின்றதென்றும், அவற்றிற்குப் பிரதியாகச் சவுக்கியம் முதலிய சொற்களை வழங்குகின்றார்களென்றுங் கூறுவர் டாக்டர் கால்ட்வெல். அவ்வாறே கூறுவர் வின்ஸானும் டாக்டர் போப்பும். அவ்வெழுத்து ஔவை, பௌவம், கௌவுதல் முதலிய இயற்சொற்களில் காணப்படுகின்றமையானும், அவ்வியற்சொற்களிலுள்ள ஔகாரம் 'அவ்' எனத் திரியுமேயன்றி, தற்பவச்சொற்களிற்போல் 'அவு' எனத்திரியாமையானும், வடமொழியிலுள்ள 'ஔ' முன்காலத்தில் 'ஆஉ' என ஒலித்திருத்தல்வேண்டுமென்றது அம்மொழியில் அஃது 'ஆவ்' என மாறுதலான் அறியப்படுகின்றதானும், ஒரு காலத்தில் 'ஆஉ' என்றும், மற்றொருகாலத்தில் 'அஊ' என்றும் அஃது ஒலிக்கப்பட்டது என தைத்திரியப்ராதிசாக்கியம், மஹா

பாஷ்யம் முதலிய வடமொழிநூல்களால் விளங்குதலானும், அதற்கு 'அஉ' என்ற ஒலி தமிழ்மொழிஔகாரத்தைப் பார்த்து வந்திருத்தல் கூடுமென்றது

'அகர உகர மௌகார மாகும்.' (தொல். எழுத். 55)

என்ற தொல்காப்பியச்சூத்திரத்தாற் கொள்ளப்படலா மாகலானும், டாக்டர் கால்ட்வெல் முதலாயினோர் கூற்றுப் பொருந்தாதென்க.

உயிரளவுமாறுதல்[1].

ஒரு தாதுவினின்றும் பிறந்த சொற்களுட் சிலவற்றில் உயிர் நீண்டும் ஏனையவற்றில் குறுகியும் உள. அவற்றிக்குக் காரணம் அச்சொற்களின் அசைகளுள் சிறந்தமையுஞ் சிறவாமையு மாகலாம்.

| | | |
|---|---|---|
| (உ-ம்) | விட்டான் | வீடு |
| | பட்டான் | பாடு |
| | இட்டான் | ஈடு |
| | பகுத்தான், பகுதி | பாதி[2] |
| | சுட்டான் | சூடு |
| | எண்ணினான் | ஏணி |
| | கடி | காடு |
| | கெடுவான் | கேடு |
| | கொடுமை | கோடு |
| | மின்னும் | மீன் |
| | காண்கிறான் | கண்டான் |

இவ்வாறு தன்மைப்பெயர் முதலியவற்றிலும் உள.

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்) | தான் | தன்னை | தன்னால்... |
| | நாம் | நம்மை | நம்மால்... |
| | தாம் | தம்மை | தம்மால்... |
| | நீ | நின்னை | நின்னால்... |

(1) *Vowel gradation.* (2) பகுதி என்பதில் குகரக்கேடு காரணமாக உயிர் நீண்டது எனின் பொருந்தும்.

சிலவிடங்களில் ஓருயிரின் நெடிலும் மற்றோருயிரின் குறிலுங் காணப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்) | செத்தான் | சாவு | |
| | நீவிர் | நும்மை, | நும்மால்... |
| | நீ | நுனக்கு, | உனக்கு... |

சிலவிடங்களில் யாகாரமும் சிலவிடங்களில் எகரமும் காணப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்) | யான் | என்னை, | என்னால்... |
| | யாம் | எம்மை, | எம்மால்... |
| | யாவன் | எவன் | |
| | யாது | எது | |

வந்தான், வா; தந்தான், தா இவற்றையும் உதாரணமாகக் கொள்ளலாமோவெனின், கொள்ளலாகும்; ஆயினும் ஆங்கு ஓராராய்ச்சியுளது. வா, வந்தான் என்றவற்றைத் தவிர்த்து அத்தாதுவினின்றும் பிறந்த சொற்களில் ரகரம் காணப்படுகின்றது. (உ-ம்)

வரல், வருவான், வருகின்றான்

அவ்வாறே தா, தந்தான் என்றவற்றைத் தவிர்த்து அத்தாதுவினின்றும் பிறந்த சொற்களில் ரகரம் உளது.

(உ-ம்) தரல், தருவான், தருகின்றான்

அன்றியும் 'வா' என்ற பொருளில் தெலுங்கில் 'ரா' என்றுளது. எப்போழ்தும் தமிழ்ச்சொல்லின் முதலெழுத்து குன்றி தெலுங்கிற் சொற்கள் காணப்படுகின்றன.

| | தமிழ் | தெலுங்கு |
|---|---|---|
| (உ-ம்) | அவன் | வாடு |
| | அவர் | வாரு |
| | இவர் | வீரு |

அதனை நோக்கின் தொடக்கத்தில் 'வர்' என்றது தாதுவாயிருந்து பின்னர் ரகரம் புள்ளியிடாமல் எழுதப்பெற, ரகரத்திற்கும் நெடிலைக்குறிக்குங் காலிற்கும் மயக்கம் வர 'வா' என்ற

தாகக் கருதப்பட்டதோ என்ற ஐயமுண்டாகின்றது. அவ்வாறாயின் 'வந்தான்' என்றது எவ்வாறு நிகழும் எனின் வர்ந்தான் என்றது 'வந்தான்' என மாறிற்று எனக் கூறல் வேண்டும். இவ்வாறே 'தா' என்றதும் 'தர்' என்ற தாதுவோ என ஐயமுண்டாகின்றது.

இவ்வுயிரளவுமாறுதல் இண்டோ-யூரோபியன் மொழிகளில் எவ்வாறு மிகுதியாய்க் காணப்படுகின்றதோ அவ்வாறு திராவிடமொழிகளில் இல்லை என்னலாம்.

வீடு என்றதுபோன்ற இடங்களில் நெடிலும், விட்டான் என்றதுபோன்ற இடங்களில் குறிலும் ஏனிருத்தல்வேண்டுமெனின், விட்டான் முதலியவிடங்களில் பின்னர்வரும் பால் குறிக்கும் பகுதிகளுக்குஞ் சிறப்பு உண்டு; அவ்வாறு வீடு என்ற சொல்லில் இல்லை எனக் கூறலாம். அவ்வாறே 'தன்னை' முதலிய சொற்களில் ஐகாரவுருபு செயப்படுபொருளைக் குறித்தலால் தான் என்ற பகுதிக்கு எவ்வளவு சிறப்பு உண்டோ அவ்வாறே ஐகாரப்பகுதிக்கும் உண்டு. ஆனதுபற்றியே ஆசிரியர் தொல்காப்பியனார்

கூறிய முறையி னுருபுநிலை திரியா
தீறுபெயர்க் காகு மியற்கைய வென்ப. (தொல். சொல். 69)

என்றவிடத்து உருபு தன்னிலையினின்றுந் திரியாது என்றனர்; ஆகலின் ஆங்குக் குறிலும், பகுதிப்பொருளையும் எழுவாய்ப் பொருளையுங் காட்டுகின்ற 'தான்' போன்ற சொற்களில் நெடிலுமுள்ளது என்னலாம்.

'வாரான்,' 'தாரான்' போன்றவற்றையும் உயிரளவுமாறுதற்கு உதாரணமாகக்கொள்ளலாமோ வெனின், ஆங்கு எதிர்மறையைக் குறிப்பது ரகரத்தின்பின்னருள்ள ஆகாரமெனின், கொள்ளலாகும்; இல்லையாயின் கொள்ளல் கூடாது.

---

## 4. மெய்யெழுத்து.

**வல்லினம்.**

ஆசிரியர் தொல்காப்பியனார் காலத்து க், ச், ட், த், ப், ற் என்பன k, c, t̥, t, p, r என்றே ஒலிக்கப்பட்டன என்றது அவரது எழுத்ததிகாரத்து நூன்மரபிலுள்ள சூத்திரங்களைப் படிப்பின் நன்கு விளங்கும். அவை இப்போது பலவகையாக ஒலிக்கப்படுகின்றன.

ககரம் ஙகரத்திற்குப் பின்னர் 'ഗ' (g) எனவும், இரண்டு உயிர்களுக்கிடையில் சில ஜில்லாக்களில் 'ஹ' எனவும் சில ஜில்லாக்களில் 'ഗ' எனவும் ஒலிக்கப்படுகின்றது.

(உ-ம்) தங்கை—(தங்ഗை)
அகம்—(அஹம்) அல்லது (அഗம்)

சகரம் ஞகரத்திற்குப் பின்னர் 'ஜ' (j) எனவும், மொழிக்கு முதலில் சில ஜில்லாக்களில் 'ஶ' (s') எனவும், சில ஜில்லாக்களில் வல்லினமாகவும், இரண்டு உயிர்களுக்கிடையில் 'ஶ' எனவும் ஒலிக்கப்படுகின்றது.

(உ-ம்) தஞ்சை — தஞ்ஜை
சட்டி — ஶட்டி (தஞ்சை, திருச்சி ஜில்லாக்கள்)
— வட்டி (திருநெல்வேலி)
அசை — அஶை

டகரம் ணகரத்திற்குப் பின்னர் 'ഡ' (d̥) எனவும், மொழிக்கு முதலின் சில விடங்களில் 'ഡ' எனவும், இரண்டு உயிர்களுக்கிடையில் 'ഡ' எனவும் ஒலிக்கப்படுகின்றது.

(உ-ம்) ஆண்டு — ஆண்ഡു
டங்கா — ഡங்ഗா
அடை — அഡை

தகரம் நகரத்திற்குப் பின்னரும் உயிரிடையிலும் 'ദ' என ஒலிக்கப்படுகின்றது.

(உ-ம்) தந்தை — தந்ദை
அதனை — அദனை

பகரம் மகரத்திற்குப் பின்னர் 'ஃப' (b) என ஒலிக்கப்படுகின்றது.

(உ-ம்) தம்பி — தப்ஃபி

இவ்வாறு ஒரு வடிவெழுத்திற்குப் பல ஒலிகள் இருத்தலை டாக்டர் கால்ட்வெல் வல்லினமெல்லினமாறுகை என்ற பெயரான் வழங்கினர். இஃது எக்காலத்தும் தமிழிற்கு உரித்து எனவுங் கூறினர். அவரே தான் படித்த தமிழிலக்கணங்களுள் பண்டையது நன்னூல் எனக் கூறியிருத்தலின், அவர் அவ்வாறு கூறினர். ஆயினும் அக்கொள்கை பண்டைத்தமிழிற்கு ஒவ்வாது. 'ங், ஞ், ண், ந், ம்' இவ்வொலிகளுக்குப் பின்னர் ம, ஜ, ஃட, ஃத, ஃப, இவையே ஒலிக்கப்படுமேயன்றி, வல்லினவெழுத்துக்கள் ஒலிக்கப்படா எனச் சில மொழிநூல்வல்லோர் கொள்கை இருந்தது. தற்போதுள்ள மொழிநூல்வல்லோர் பலமொழிகளையும் ஆராய்ந்துபார்த்து அவ்வாறு கூறுதல் பொருந்தாது, அவற்றின் பின்னரும் வல்லினங்களை ஒலிக்கின்றனர், ஆகலின் ஒவ்வொரு மொழியையும் வழங்குவோரின் ஒலிக்கருவிகளுக் கேற்றவாறு ஒலிகள் ஒலிக்கும் என்றனர். உதாரணமாக ஙகரத்திற்குப்பின்னர் ககரத்தை ஒலித்தல் வடமொழியிலும் ஆங்கிலமொழியிலுங் காணலாம்.

(உ-ம்) வடமொழி ஶங்க, அங்க.
ஆங்கிலம் pink, ink, think, link.

அவ்வாறே ஞகரத்தின் பின்னர் சகரம் ஒலிக்கும்.

(உ-ம்) வடமொழி பஞ்ச, வாஞ்சா
ஆங்கிலம் pinch, launch, inch

ணகரம், நகரம், மகரம் இவற்றின் பின்னரும் இனவல்லினம் ஒலிக்கும்.

வடமொழி வீணா, ஸந்த, ஶம்பா
ஆங்கிலம் ant, lamp

அவ்வாறே தெலுங்குச் சொற்களாகிய இங்கு (iṅku), அஞ்சே (añcê), எந்த (enta), ஆட (âṭa) இவற்றிலும், கன்னடச்

சொற்களாகிய அஞ்சே (añcê), ஆடிகே (âṭikê) முதலியவற்றி லும் வழங்குதல் காணலாம்.

இவ்வாறு வல்லினமெல்லாம் ஒலிமாறியதற்குக் காரணம் பின்வருமாறு கூறலாகும். கங்கை முதலிய தற்பவங்களில் ஙகரத்தின்பின்னர் ககரம் எழுதப்படினும் அது வடமொழியி லுள்ளவாறே ஒலிக்கப்பட்டிருத்தல்கூடும். அவற்றைப்பார்த்து இயற்சொற்கள் முதலியவற்றிலும் ஒற்றுமைப்போலியால் அவ் வாறே வழங்கியிருத்தல்கூடும். இவ்வாறு கூறுது இயற்கை யாகவே நாளடைவில் திராவிடமொழிகளில் வல்லினங்கள் ம, ஜ முதலியனவாக ஒலித்திருத்தல்கூடாதாவெனின், கூடும்; ஆயி னும் தற்போது தெலுங்குமொழியில் கிடைக்கும் பண்டை நூலாகிய நன்னையபாரதம் கி. பி. பதினொன்றும் நூற்றுண்ட தாயிருத்தலானும், தற்போது கிடைக்கும் சாஸனங்களுள் பழ மையானது கி. பி. ஆறும் நூற்றுண்டதாயிருக்கும் குப்ஜ விஷ்ணுவர்த்தனன் சாஸனமாயிருத்தலானும், கன்னடமொழி யில் தற்போது கிடைக்கும் பழைய நூல் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டதாகிய கவிராஜமார்க்கமாதலானும், பண்டைய மலை யாளமொழி தமிழாகவேயிருத்தலானும், அக்காலங்களுக்கு வெகுநாள் முன்னரே தமிழ்மொழிக்கு வடமொழிக் கலப்பு உண்டாகி, தமிழ்ச்சொற்கள் நால்வகையுள் ஒன்று வடசொல் லென ஆசிரியர் தொல்காப்பியனாரே கூறியிருத்தலானும், ஏழா வது நூற்றுண்டில் வடமொழிக்கலப்பு தமிழ்மொழியில் மிகுதியா யிருந்ததென்பது தேவாரம், நாலாயிரப்பிரபந்தம் இரண்டா லும் அறியப்படுகின்றமையானும் முற்கூறியவாறு கூறலாமோ வென்பது என் கருத்து.

இடையினம். வல்லினத்திற்கும் மெல்லினத்திற்கும் இடை நிற்பது இடையினம் என்பர் சிவஞானமுனிவர்[1] இடை யினத்தை ஒலிக்கும்போது வாய் சிறிது மூடியுஞ் சிறிது திறந் தும் இருக்கின்றமையானும், வல்லினமெல்லினவெழுத்துக்கள் உண்டாம்போது வாய் முழுவதும் மூடியிருத்தலானும், உயிர்

(1) தொல்காப்பிய முதற்சூத்திரவிருத்தி பக். 23

களை ஒலிக்கும்போது வாய் முழுவதுந் திறந்திருத்தலானும், இடையினம் என்றவை வல்லினமெல்லினங்களுக்கும் உயிர்களுக்கும் இடையிலுள்ளன என்று கூறுதலே சாலும். ஆங்கிலத்திலும் அவற்றை 'அரையுயிர்' (Semivowels) என்ற குறியானே வழங்குவர்.

டவருக்கம்.

திராவிடமொழிகளில் டவருக்கம் இயற்கையாய்த் தொடக்கத்திலிருந்து இருந்தது எனவும், அஃது திராவிடமொழிகளிலிருந்து வடமொழியில் கடன் வாங்கப்பட்டதெனவும் டாக்டர் கால்ட்வெல் கூறி அதற்கு நான்கு காரணங்கள் உணர்த்தினர். அவையாவன:—

(1) திராவிடமொழிதாதுக்களில் டவருக்கம் இன்றியமையாப் பகுதியாயுளது. அஃதாவது தமிழ்மொழியில் குடி-த்தல் குதி-த்தல் என்ற தாதுக்களுக்குப் பொருளில் வேறுபாடுண்டு. அவ்வாறு வடமொழியில் அட், அத் என்ற தாதுக்களுக்குப் பொருளில் வேறுபாடில்லை. (2) வடமொழிக்கு இயைபுபட்ட கிரேக், லத்தீன், ஆங்கிலம் முதலிய மொழிகளுள் ஒன்றிலேனும் டவருக்கமில்லை. (3) டவருக்கத்தைக்கொண்ட வடமொழிச்சொல் தமிழ்மொழியில் தற்பவமாகும்போது தமிழ்மொழிக்குரிய இலக்கணங்களான் மாற்றப்படும் (4) வடமொழியான் தெலுங்குமொழியில் மாறுதல் மிகக் காணப்படினும் டவருக்கம் தெலுங்கைக்காட்டிலுந் தமிழ்மொழியில் மிகுதியாக வழங்கப்படுகின்றது.

டாக்டர் கூறுங் காரணங்களுள் மூன்றுவதும் நான்காவதுஞ் சிறந்த காரணங்களாகா. முதலிற்கூறப்பட்ட இரண்டு காரணங்களும் உண்மைதான். ஆயினும் அவர் கொள்கைக்கு மாறுபாடாக நான்கு காரணங்கள் உள. அவையாவன:—

(1) பண்டைத் தமிழிலுள்ள 'ட, ண' இவற்றின் பிறப்பிடமும் வடமொழி டவருக்கத்தின் பிறப்பிடமும் வேறுபட்டன. ஆசிரியர் தொல்காப்பியனார்

டகார ணகார நுனிநா வண்ணம் (தொல். எழுத். 61)

என்ற சூத்திரத்தான், நுனிநா அண்ணத்தின் நுனியைத்தொட, டகாரமும் ணகாரமும் பிறக்கு மென்பர். அவ்வாறு டகார ணகாரங்கள் இப்போதும் மலையாளமொழியில் ஒலித்தல் காண லாம். வடமொழியிலோ நாநுனி வளைந்து அண்ணத்தின் உயர் பகுதியைத் தொட, டவருக்கம் பிறக்கும். வடமொழி டவருக் கம் திராவிடமொழிகளிலிருந்து கொள்ளப்பட்டிருப்பின் ஏன் பிறப்பிடம் அம்மொழியில் மாறியது என்றற்குக் காரணங் கூறு தல்வேண்டும்.

(2) ஆரியர்கள் வெளியிலிருந்து இந்தியாவிற்குள் வந்து ஸிந்துநதிக்கரையிற் குடியேறியபொழுது ருக்வேதத்தை இயற் றினர் என்பர். அவ்வேதத்தில் டவருக்கம் மிகுதியாய்க் காணப் படுகின்றது. கடவுளால் தங்களுக்குக் கொடுக்கப்பட்டது என நினைத்திருக்கும் நூலில் தங்கள் மொழியில் முன்னரில்லாத எழுத்துக்களை யேற்றுவரா என்ற ஐயமுண்டாகின்றது.

(3) பார்ச்சுநேடொவ் [1] என்பவரான் வடமொழியில் டவருக்கம் வந்ததற்குக் காரணங் கூறப்பட்டுளது. அஃது, இண்டோ-யூரோபியன்மொழியில் எங்கு லகரப் புள்ளியை யடுத்துத் தவருக்கம் வருகின்றதோ அச்சொற்களுக்கு இயைபு பட்ட வடமொழிச்சொற்களில் அந்த லகரப்புள்ளி கெட்டு தவருக்கம் டவருக்கமாகும் என்பதே இக்கொள்கையை டாக்டர் ஊலன்பெக் [2] முதலியோர்கள் ஏற்றுக்கொண்டனர்.

(4) ஆட்டோ யெஸ்பர்ஸன் தவருக்கம் நாளடைவில் ஒலிக் கும் மக்களின் ஒலிக்கருவிபற்றி டவருக்கமாக மாறுதல் அமெ ரிக்காவிலுள்ள பலமொழிகளிற் காணப்படுகின்றமையின், வட மொழியிலும் திராவிடமொழியினின்றும் டவருக்கம் ஏற்றுக் கொள்ளப்பட்டது எனக்கூறவேண்டும் நியதி இல்லையென்றும், தாமாகவே வரவரச் சிற்சில எழுத்துக்களோடு வருமிடத்து தவருக்கம் டவருக்கமாய் மாறியிருத்தல்கூடுமென்றுங் கூறுவர்.

## மொழிமுதன்மெய்யும், மொழியீற்றுமெய்யும்.

மொழிமுதலில் இரண்டு புள்ளி மெய்கள் சேர்ந்துவாரா வெனவும், க, த, ந, ப, ம-க்கள் எல்லாவுயிரொடுந் தொடர்ந்து

(1) *Fortunatov.* (2) *Dr. Uhlenbeck.*

மொழிமுதலாகுமெனவும், மொழிமுதற்சகரம் அ, ஐ, ஔ இவற்றாற்றொடராதெனவும், மொழிமுதன்வகரம் உ, ஊ, ஒ, ஓ இவற்றாற்றொடராதெனவும், மொழிமுதல் ஞகாரம் ஆ, எ, ஒ இவற்றாற்றான் தொடரப்படுமெனவும், மொழிமுதல் யகரம் ஆகாரத்தாற்றான் தொடரப்படுமெனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுவர்[1]. வீரசோழியவாசிரியர் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுமெழுத்துக்களைக் கூறி மேலுஞ் சிலவற்றைச் சேர்ப்பர். அவர் ஞகரம் அகரத்தானுந் தொடருமெனவும், சகரம் எல்லாவுயிரானுந்தொடருமெனவும், யகரம் அ, உ, ஊ, ஒ, ஔ இவற்றானுந் தொடருமெனவுங் கூறுவர். நன்னூலார் வீரசோழியவாசிரியர் கொள்கையோடு உடன்படுவதுமன்றி, ஙகரத்தையும் மொழி முதலாக வருமென்றனர். அதற்கு 'அங்ஙனம்' என்ற உதாரணத்தை உரைகாரர் கூறுகின்றார்கள். ஆங்கு 'ஙனம்' என்றது தனிமொழியாக வருமா என்பது ஆராய்தற்குரியது.

மொழியீற்றில் வருமென்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய எழுத்துக்களுள் ஞ், ந், வ் இவை வாரா என்றனர் வீரசோழியவாசிரியர். அவர்காலத்து உரிஞ், பொருந், தெவ் முதலிய சொற்கள் இறந்தனபோலும். அவ்வாறு அவர் கூறியிருப்பினும், நன்னூலார் அவர் கொள்கையை யேலாது ஆசிரியர் கொள்கைக்குடன்பட்டனர்.

ஆசிரியர் தொல்காப்பியனார்கொள்கைக்கும் ஏனையோர் கொள்கைக்கும் சில மாறுபாடுகள் உளவாதலின், வரவரப் புதுச்சொற்கள் மொழியில் வந்தன என்றது நோக்கற்பாலது.

அன்றியும் மொழிமுதலில் வரும் மெய்களைக்கொண்டே தமிழ்மொழியும் வடமொழியுந் தொடக்கத்தில் ஓரினமொழிகள் அல்ல எனக் கூறலாகும். வடமொழியில் உயிரிடையின் மெய்களும்[2] ரகரலகரங்களும் மொழி முதலாக வரலாகும்; அவ்வாறு தமிழ்மொழியில் இல்லை.

(உ-ம்) வடமொழி க்ஷணம், ராம:, லங்கா
தமிழ்மொழி கணம், இராமன், இலங்கை

அவ்வாறே தமிழ்மொழிச்சொற்களின் ஈற்றில் ஞ், ய், ர், ல், வ், ள் இவை வரினும், அவை வடமொழிச்சொற்களினீற்

(1) தொல். எழுத். 60—65 (2) ஸம்யுக்தாக்ஷரம்

றில் வாரா. வடமொழிச்சொற்களின் ஈற்றில் க். ஞ். ட். த். ப். இவை வரினும், அவை தமிழ்மொழிச்சொற்களின் ஈற்றில் வாரா.

இதனானும் அவ்விருமொழிகளும் ஓரினமொழிகளல்ல என்று கூறுதல் சாலும்.

இக்காலத்தில் டங்கா, டமாரம், யந்திரம், யமன், ராமன், லங்கை முதலிய சொற்களும் தமிழ்மொழியில் வழங்குதலான் அவற்றையு மடக்கி இலக்கணமெழுதுதல் வேண்டும்.

---

## 5. சார்பெழுத்து.

இலக்கணம்.

ஆசிரியர் தொல்காப்பியனார் குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆய்தம் இம்மூன்றுமே சார்பெழுத்தென்றும் 1 அவற்றிற்குப் பிறப்பிடம் அவற்றின் பற்றுக்கோடாயிருக்கும் எழுத்தின் பிறப்பிடமே யென்றுங் 2 கூறுவர். ஆகலின் அவர் கொள்கைப்படிச் சொல்லின்கண் ஓரெழுத்தைச் சார்ந்து வரும் எழுத்தே சார்பெழுத்து என்பது இலக்கணமாகும். ஆய்தம் குற்றியலுகரம் இரண்டும் வல்லின மாறினையும் பற்றுக் கோடாகக் கொள்ளுதலின், அவ்விரண்டற்கும் அறுவகையொலி யிருந்திருத்தல் வேண்டும். ஆகவே முற்றியலுகரத்திற்குங் குற்றியலுகரத்திற்கும் வேறுபாடு மாத்திரையான் மட்டுமின்றி, பிறப்பிடத்தானுமென்றது வெளிப்படை. இதனை யறியாது மாத்திரையான் மாத்திரம் அவற்றிற்கு வேறுபாடெனக்கொண்டு, அவற்றோடு அவ்வாறே மாத்திரையான் வேறுபட்ட ஐகாரக் குறுக்கம், ஔகாரக்குறுக்கம் முதலியவற்றையுஞ் சார்பெழுத்தாகக் கொண்டனர் நன்னூலார். அதனிலக்கணத்தை நன்னூற்குப் பழைய உரைகாரராகிய மயிலைநாதர் 'முதலெழுத்தாந் தன்மை அவற்றிற்கின்மையானும் சார்பிற்றோன்றுதலானும் இப்பத்துஞ் சார்பாகவே கொள்ளவேண்டுமென்பது 3 என்றும், பழைய உரைகாரரொருவர் 'தம்மோடு தாம் சார்ந்தும், இடஞ் சார்ந்தும், பற்றுக்கோடு சார்ந்தும், விகாரத்தால் வருத

(1) தொல். எழுத். 2. (2) தொல். எழுத். 101. (3) நன். 59. மயிலை.

வின் சார்பெழுத்தாம்' என்றும், சங்கரநமச்சிவாயப்புலவர் 'உயிர்மெய் உயிரும் மெய்யுங்கூடிப் பிறத்தலானும், ஆய்தம்... அவற்றிடையே சார்ந்து வருதலானும், ஏனைய தத்தம் முதலெழுத்தின் றிரிபுவிகாரத்தாற் பிறத்தலானும் சார்பெழுத்தாயினவாகக் கொள்க......' என்றுங் கூறுவர். இலக்கணவிளக்கவாசிரியர் மயிலைநாதரின் கொள்கைக்குடன்பட்டனர். இவற்றையெல்லாஞ் சிவஞானமுனிவர் தொல்காப்பியமுதற்சூத்திரவிருத்தியில் நன்கு மறுத்து ஆசிரியர் தொல்காப்பியரது கொள்கையையே நிலைநிறுத்தினர்.

வகை:

சார்பெழுத்துக்கள் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என மூன்றென்று தொல்காப்பியனாரும்; குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம், ஏழ் உயிரளபெடை, 216 உயிர்மெய், ஆக இருநூற்றிருபத்தாறெனா இளம்பூரணரும்; குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகார ஔகாரக்குறுக்கங்கள், ஏழ் அளபெடை ஆகப் பதினொன்றெனா வீரசோழிய வாசிரியரும்; குற்றியலிகரம், குற்றியலுகரம் ஐகார ஔகாரக்குறுக்கங்கள், ஏழ் உயிரளபெடை, 216 உயிர்மெய், அறுவகை வல்லினக்குறுக்கம், அறுவகை மெல்லினக்குறுக்கம், ய, ல, வ, ள, ஆய்தம் இவற்றின் குறுக்கம் ஆக இருநூற்று நாற்பத்து நான்கெனா நேமிநாதவாசிரியரும், முற்றாய்தம் 8, உயிரளபெடை 21, ஒற்றளபெடை 42, குற்றியலிகரம் 37, குற்றியலுகரம் 36, ஐகாரக்குறுக்கம் 3, ஔகாரக்குறுக்கம் 1, மகரக்குறுக்கம் 3, ஆய்தக்குறுக்கம் 2, உயிர்மெய் 216, ஆக முந்நூற்றறுபத் தொன்பதெனா நன்னூலாரும்: குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம், உயிர்மெய் 216, உயிரளபெடை 7, ஒற்றளபெடை 11, ஐகார ஔகார மகரக் குறுக்கங்கள் ஆகிய இருநூற்றுநாற்பதெனா இலக்கணவிளக்கவாசிரியருங் கூறுவர்.

சிவஞான முனிவர் அவர்தங் கொள்கைகளை மறுத்தாங்கின் வருமாறு கூறினர்:—

'இனி இம்மூன்றுமேயன்றி உயிர்மெய் முதலியவற்றையுஞ் சார்பெழுத்தென்பாரு முளரோவெனின்...ஒற்றுமை நயம் பற்றி ஒன்றென்பதனால் ஒரு பயனின்மையானும்....அள

பெடை சார்பெழுத்தென வேறாகாமை முன்னர்க் காட்டப் பட்டதாகலானும், ஐகாரக்குறுக்க முதலியன.....வேறெழுத் தெனப்படாவாகலானும், வடநூலாரும்...உயிர்மெய், உயிரள பெடை, ஐகாரக்குறுக்கம் முதலிய எழுத்துக்களைச் சிறிது திரிந்தமைபற்றி வேறெழுத்தென யாண்டுஞ் சொல்லாமையா னும் அது பொருந்தாதென மறுக்க' 1

இம்மறுப்பு மிகப் பொருந்தும். அன்றியும் நன்னூல் உரை காரர்கள் கூறிய 'தம்மொடு தாம் சார்ந்தது' என்ற சார்பெழுத் திலக்கணம் நேரிதன்று. 'க' என்றவிடத்து அகரத்தைப் பற்றுக்கோடாக்கி, ககரப்புள்ளியைச் சார்பெழுத்தெனவும், ககரப்புள்ளியைப் பற்றுக்கோடாக்கி, அகரத்தைச் சார்பெழுத் தெனவும் அவ்விலக்கணத்தான் கூறலாகுமேயன்றி 'க' என்ற உயிர்மெய்யைச் சார்பெழுத்தாகக் கொள்ளல் பொருந்தாது.

அவ்வாறாயின் உயிர்மெய்யைச் சார்பெழுத்தாக அவர்கள் மயங்கியதற்குக் காரணம் என்னை? ககரப்புள்ளியைக் குறிக்க, அகரச்சாரியையோடு ககரத்தைக் குறித்தலானும் 2 கி, கீ, கு முதலிய உயிர்மெய்யெழுத்துக்களைக் குறிக்க ககரத்தின் வடி வத்தின்மேல் இ, ஈ, உ இவற்றைக் குறிக்கக் குறியிடுதலானு மென்னலாம்.

குற்றியலிகரம்.

இவ்வெழுத்து தமிழ்மொழியின் சிறப்பெழுத்துக்களுள் ஒன்று. இது 'கேண்மியா' போன்ற சொற்களிலுள்ள 'மியா' என்ற அசைச்சொல்லின் இகரமும், புணர்ச்சியில் நாகியாது போன்ற சிலவிடங்களில் குற்றியலுகரத்தின் திரிபாகவுமிருக் கும். யகரத்தின் முன்னர் அஃது இருத்தலான் குற்றியலுகரத் திரிபென்றே அதனைக் கூறுதல் தகும்.

குற்றியலுகரம்.

இவ்வெழுத்தும் தமிழ்மொழியின் சிறப்பெழுத்துக்களு ளொன்று. இது பிறப்பிடத்தானும் மாத்திரையானும் முற்றுக

(1) தொல்காப்பிய முதற்சூத்திரவிருத்தி பக். 29—30. (2) மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும் (தொல். எழுத். 46)

ரத்தோடு மாறுபட்டதெனமுன்னர்க் கூறப்பட்டது. இவ்வெழுத்து ஆசிரியர் தொல்காப்பியனார்காலத்து நெட்டெழுத்தைக்கொண்ட ஈரெழுத்தொருமொழியிலும் தொடர்மொழியிலும் ஈற்றில் வல்லெழுத்தைச் சார்ந்தும், 'நுந்தை' என்ற ஒரு சொல்லில்மாத்திரம் நகரத்தின் பின்னரும் வந்ததென அவரது நூலான் அறியக்கிடக்கின்றது. அது, இது, உது முதலிய இடங்களிலுள்ள உகரம் அவரது இலக்கணப்படி முற்றுகரமாகவிருப்பினும், அஃது, இஃது, உஃது என்ற விடங்களிலுள்ள உகரத்தின் ஒலியைப் பார்த்து ஒற்றுமைப்போலியால் அதனை குற்றியலுகரமாகவே தற்போது ஒலிக்கின்றார்கள். அவ்வாறே 'ஏழு' என்ற சொல்லின் உகரமும் தற்போது குற்றியலுகரமாக ஒலிக்கப்படுகின்றது. தொல்காப்பியர்காலத்து அச்சொல் 'ஏழ்' என்ற உருவத்தையே கொண்டதென்றது

ஏழென் கிளவி யுருபிய னிலையும். (தொல். எழுத். 389)

என்ற புள்ளிமயங்கியற் சூத்திரத்தான் விளங்கும். பிறகு 'எழு கலம், எழுநான்கு' முதலிய சொற்களைக் கண்டு ஒற்றுமைப் போலியால் ஏழென்ற சொல் 'ஏழு' எனத் திரிந்தது. அக்காலத்தில் அவ்வுகரத்தை முற்றுகரமாக ஒலித்திருத்தல் கூடும். பிற்காலத்தில் அது குற்றியலுகரமாகவே ஒலிக்கப்படுகின்றது. ஆகலின் தற்போது ஒலிக்கப்பட்ட குற்றியலுகரத்திற்கு இலக்கணக்காரர்கள் கூறும் இலக்கணம் பொருந்தாததாகும்.

அக்குற்றியலுகரம் புணர்ச்சியில் முற்றியலுகரத்தினின்றும் வேறுபட்டசெய்கையையடைதலின் அது அரைமாத்திரையாகிய முற்றியலுகரமெனக் கூறுதல் பொருந்தாது. புணர்ச்சியில் அதன்பின்னர் உயிர்வரின், அது கெடும்.

(உ-ம்) நாக்கு + இங்கே = நாக்கிங்கே

முற்றியலுகரம் அவ்வாறு கெடாது; அதன்பின்னர் உடம்படுமெய் பெறும். (உ-ம்)

அது + இங்கே = அதுவிங்கே

இக்காலத்தில் சிலவிடங்களில் முற்றியலுகரமுங் குற்றியலுகரச்செய்கை பெறுகின்றது. ஆகலின் குற்றியலுகரந் தொடக்

கத்தில் வல்லினங்களை ஒலித்தற்குக் கருவியாகிய ஒலியாயிருத்தல்வேண்டும்.

உயிரளபெடை.

வீரசோழியம், நேமிநாதம், நன்னூல், இலக்கணவிளக்கம், பிரயோகவிவேகம் இந்நூல்களை இயற்றிய ஆசிரியர்களனைவரும் ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ என்ற ஏழனையும் அளபெடையெனக் கொண்டு ஒவ்வொன்றும் மூன்று மாத்திரை ஒலிக்குமென்றனர். அவர் இவ்வாறு கூறியதற்குக் காரணம் வடமொழியில் மூன்று மாத்திரை ஒலிக்கும் ப்லுதமும், இவையும் ஒருவகையின என்ற மயக்கமேயாகும். ஆசிரியர் தொல்காப்பியனாரது கொள்கையில் மேற்கூறப்பட்டவற்றின் அ, இ, உ, எ, இ, ஒ, உ இவையே அளபெடையாற் குறிக்கப்பட்டிருத்தல்வேண்டும். அதற்குக் காரணங்களாவன:—

(1) மூவள பிசைத்த லோரெழுத் தின்றே (தொல். எழுத். 5)

என்ற சூத்திரத்தான் தமிழ்மொழியில் ஓரெழுத்து மூன்று மாத்திரை ஒலியாது என்பது வெளிப்படை.

(2) நீட்டம் வேண்டி னவ்வள புடைய
கூட்டி எழூஉத லென்மனார் புலவர். (தொல். எழுத். 6)
குன்றிசை மொழிவயி னின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே. (தொல். எழுத். 41)

என்ற சூத்திரங்களால் இசைநிறைக்குமெழுத்து குற்றெழுத்தெனவும், எவ்வளவு மாத்திரை நீளவேண்டுமோ அவ்வளவு குற்றெழுத்துக்கள் சேர்க்கவேண்டுமெனவும் அறியலாகும்.

எஎன வருமுயிர் மெய்யீ றாகாது
எகர வோகரம் பெயர்க்கீ றாகா. (தொல். எழுத். 71)
முன்னிலை மொழிய வென்மனார் புலவர்
தேற்றமுஞ் சிறப்பு மல்வழி யான. ( ,, 273)
தேற்ற வெகரமுஞ் சிறப்பி னோவும்
மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகுமே. ( ,, 274)

என்ற சூத்திரங்களான் ஏஎ என்றது எகரவீறாகக் கொள்ளப்பட்டது.

ஏயே னிறுதிக் கேகரம் வருமே (தொல். எழுத். 278)

என்றதனுன் எகரம் ஏகாரத்தினின்றும் வேறுபட்டதென விளங்கும். ஏ என என்றது ஓரெழுத்தாயின்

ஏயே னிறுதி நீட லுரித்தே

என ஆசிரியர் சூத்திரித்திருப்பர். அவ்வாறே

குறியதன் முன்னரு மோரெழுத்து மொழிக்கும்
அறியத் தோன்று மகரக் கிளவி.. (தொல். எழுத். 227)

என்றவிடத்து "அறியத் தோன்று மகரக் கிளவி" என்றது "நீடல் வேண்டு மென்மனுர் புலவர்" என ஆசிரியர் கூறியிருத்தல்கூடும்.

அளபெடை மிகூஉ மிகர விறுபெயர்
இயற்கைய வாகுஞ் செயற்கைய வென்ப.
(தொல். சொல். 125)

அளபெடை யசைநிலை யாகலு முரித்தே (தொல். செய். 17)

என்ற சூத்திரங்களானும் அளபெடை ஆஅ, ஈஇ முதலியவற்றி லுள்ள அகர இகரங்களே என்றது ஆசிரியர் தொல்காப்பியனர் கொள்கை என நன்கு புலப்படும்.

ஐகாரக் குறுக்கமும் ஔகாரக் குறுக்கமும்.

ஆசிரியர் தொல்காப்பியனர்

ஓரள பாகு மிடனுமாருண்டே. (தொல். எழுத். 57)

என்ற சூத்திரத்தில் ஐகாரஔகாரங்கள் இரண்டு மாத்திரை ஒலியாது ஒரு மாத்திரை ஒலிக்குமெனக் கூறியிருப்பினும், அவற்றைச் சார்பெழுத்தாகக் கொள்ளவில்லை. வீரசோழிய வாசிரியர் அவற்றிற்கு ஒன்றரைமாத்திரை யென்பர். நேமி நாதவாசிரியர் அக்கொள்கையைக் கொள்ளுவதோடு, அவை சார்பெழுத்தெனவுங் கூறினர். நன்னூல், இலக்கணவிளக்கம், தொன்னூல்விளக்கம் இந்நூல்களின் ஆசிரியர்கள் அவற்றிற்கு அளவு ஒரு மாத்திரையே எனக்கொண்டு அவற்றைச் சார் பெழுத்தென்பர். ஐகாரக்குறுக்கம் மொழிமுதலிடைகடைகளிற் ருேன்றுமென்ற காரணம்பற்றி மூவகைப்படு மென்றது பொருத்தமாகத் தோன்றவில்லை.

மெய்களுள் சார்பெழுத்து உள என்று ஆசிரியர் தொல்காப்பியனாரும் வீரசோழிய வாசிரியருங் கூறுதிருப்பினும், நேமிநாதவாசிரியர் மெய்களுள் பதினாறு சார்பெழுத்து உள எனவும், அவை வல்லினக் குறுக்கம் ஆறு, மெல்லினக் குறுக்கம் ஆறு, ய, ல, வ, ள இவற்றின் குறுக்கம் நான்கு ஆம் என்பர். நன்னூலார் ஒற்றளபெடை 42 என்றும், மகரக்குறுக்கம் மூன்று என்றும், அவற்றுள் முற்கூறப்பட்டன அரை மாத்திரை ஒலிக்குமென்றும் பிற்கூறப்பட்டன கால் மாத்திரை ஒலிக்குமென்றுங் கூறுவர். இலக்கணவிளக்கவாசிரியர் ஒற்றளபெடை பதினொன்று, மகரக்குறுக்கம் ஒன்று என்பர். மகரக்குறுக்கம் கால் மாத்திரை ஒலிக்குமென ஆசிரியர் தொல்காப்பியனார் கூறினும், அதனைச் சார்பெழுத்தாகக் கொள்ளவில்லை.

ஆய்தம்.

சார்பெழுத்து மூன்றனுள் ஒன்றாக ஆய்தத்தை ஆசிரியர் தொல்காப்பியனார் கூறினரேயன்றி, அதனை உயிரெனவேனும் மெய்யெனவேனுங் கொள்ளவில்லை. அதனை ஒலிக்கும்போது வாய்முழுதுந் திறக்கவுமில்லை முழுதும் மூடவுமில்லை. ஆகலின் ஒலிக்குமுறையில் அஃது ஒருவாறு இடையெழுத்துக்களை ஒத்திருக்கின்றது. ஆசிரியர் தொல்காப்பியனார் அதற்குத் தனியாக பிறப்பிடமில்லையென்றும், அதன் பற்றுக்கோட்டின் இடமே அதற்கும் இடமென்றுங் கூறி, அவை க், ச், ட், த், ப், ற் என்ற ஆறு என்றும் கூறியிருத்தலானும் 'முள்', 'தீது' என்ற சொற்கள் புணர்ச்சியில் 'முஃடீது', 'முட்டீது' எனவும், 'கல்', 'தீது' என்பன 'கஃறீது' 'கற்றீது' எனவும் ஆகலாமென்று கூறியிருத்தலானும், அவ்வாய்தம் அறுவகையாக ஒலித்திருத்தல் கூடுமென்றது வெளிப்படை.

அவ்வாறிருக்க, தற்போது ககரத்தின் முன்னர் அஃகு எவ்வாறு ஒலித்திருத்தல் கூடுமோ அவ்வாறே ஏனை வல்லினத்தின் முன்னரும் ஒலிக்கப்படுகின்றது. ஆகலின் டாக்டர் கால்ட்வெல்லும் அதற்கு இடம் கழுத்தென்பர். 1 நன்னூலார் காலத்தே அதற்கு ஒரே ஒலிதானிருந்தது என்றது அதற்கு இடம் தலை என்று அவர் கூறுதலான் விளங்கும் 2

(1) C. D. G. p. 353 (2) நன். 87

ஆய்தம் தெலுங்கு கன்னடம் முதலிய திராவிட மொழிகளிலின்மையான், அது வடமொழி விஸர்க்கத்தின் சிதைவு எனவே கொள்ளல் வேண்டுமென்பர் வின்ஸான். ஆயினும் நன்னூலார் அதற்கு இடந்தலை எனக் கூறுதல் அதற்குப் பொருத்தமின்று எனவுங் கூறுவர். அவர் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ள

சார்ந்துவரி னல்லது தனக்கியல் பிலவேன
(தொல். எழுத். 101)

என்ற சூத்திரத்தை அறிந்திருப்பின் தன்கொள்கையை நிலை நிறுத்தியிருப்பர் என்பது வெளிப்படை. டாக்டர் போப்பும் வின்ஸானின் கொள்கையைத்தான் கொண்டனர். திரு. பண்டித மு. இராகவையங்கார் அவர்கள் எழுதிய 'தொல்காப்பியனாரும் புள்ளியெழுத்தும்'[1] என்ற கட்டுரையில் ஆய்தம் பண்டைக் காலத்தில் விஸர்க்கவடிவமாகவே எழுதப்பட்டுளது என்பர். வடமொழியில் விஸர்க்கமும் ககரத்தின் முன்னர் ஒருவகையாகவும் பகரத்தின் முன்னர் மற்றொரு வகையாகவும் ஒலித்தல் இந்நாளுங் காணலாகும்.

சென்னை யூனிவர்ஸிடியில் பதிப்பித்துள்ள அகராதியில் ஆய்தவெழுத்து ஒருகால் உயிராகவும் ஒருகால் மெய்யாகவும் ஒலிக்கப்படுமென ஆங்கிலத்தில் கூறப்பட்டுளது. அது பொருத்தமில்கூற்றெனவும், அதன் தன்மையை வீரமாமுனிவர் நன்கு அறிந்தனர் என்றதும் பின்னுள்ள அவர் சொற்றொடரான் விளங்கும்.—" ஆய்தமென்றது இடுகுறிப்பெயர். முதலெழுத்து முப்பதின் ஒன்றல்லது வேறாய் நிற்றலானும் உயிர் போலத் தனித்தொலியாதுமாய் மெய்போல உயிர் ஏறப் பெறாதுமாய் முதலெழுத்தாந்தன்மை எய்தாமையானும் இருமருங்கும் வருமெழுத்தைச் சார்ந்தொலித்தலானும் சார்பெழுத்தின் ஒன்றாயிற்று. 2

(1) செந்தமிழ். 25 தொகுதி பக்கம் 153. (2) தொன்னூல் விளக்கம் 13, உரை

## 6. புணர்ச்சி

புணர்ச்சியின் பயன் சொற்களைக் கூட்டிக் கூறும்போது கூறுவோனுக்குத் துன்பம் வாராது அவற்றை வெளிப்படுத்தலே யாகும். அஃது ஈருயிர்களை ஒருங்கு ஒலிக்கா திருத்தலானும், ஒருங்குநின்ற மெய்களைப் பிறப்பிடத்தானேனும் முயற்சியாலேனும் இரண்டானேனும் ஒற்றுமைப்படுத்தலானும் நிகழும். அவை மெய்பிறிதாதல், மிகுதல், குன்றல் என்பனவற்றானாகும். தமிழ்மொழிச்சொற்களைப் புணர்த்தற்குமுன் அவற்றின் பொருளை அறிதல்வேண்டும். ஆகலினன்றே புணர்ச்சியை வேற்றுமைப்புணர்ச்சி, அல்வழிப்புணர்ச்சி என இருவகையாக்கினர் இலக்கணநூலார்.

ஒரு சொல் மற்றொரு சொல்லோடு புணரும்போது நேரும் மாறுதல்கட்கும், ஒரு பெயர் வேற்றுமையுருபோடு புணரும்போது நேரும் மாறுதல்கட்கும் உள்ள வேறுபாட்டினைக் கருதி, பின்னர்க் கூறியதை 'உருபியல்' என ஒரு தனியியலிற் கூறினர் ஆசிரியர் தொல்காப்பியனார். அவர் புணர்ச்சியைப் பற்றி ஆறு இயல்களிற் கூறினர். நாளடைவில் மொழி சிறிது வேறுபாட்டினை யடைந்தமையின் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய புணர்ச்சிவிதிகளினின்றும் நன்னூலார் கூறிய விதிகள் சிறிது வேறுபட்டன. அவை வருமாறு:—

1. அல்வழிப்புணர்ச்சியில் நிலைமொழியீறு யகரமாயிருப்பின் இயல்பு புணர்ச்சியென்பர் தொல்காப்பியனார். அவ் யகரத்தின்முன் குறினும் வருமொழி முதலின் மெல்லினமுமிருப்பின், அம்மெல்லினம் மிகும் என்பர் நன்னூலார்.

(உ-ம்.) மெய்ஞ்ஞான்றது.

2. சுட்டின்பின்னர் மெய்வர, அம்மெய் இரட்டிக்குமென்பர் தொல்காப்பியனார். சுட்டுடன் எகரத்தையுங் கூட்டினர் நன்னூலார்.

(உ-ம்.) எக்கொற்றன்.

3. வருமொழிமுதலில் உயிர்வர நிலைமொழியீற்றுக் குற்றியலுகரங் கெடுமெனத் தொல்காப்பியனார் கூறாராயினும்,

அதுதான் "குற்றிய லுகரமு மற்றென மொழிப" (தொல். எழுத். 106) என்ற சூத்திரத்திற்குப் பொருளெனக் கூறுவர் இளம்பூரணர். நன்னூலார் அதனைச் சூத்திரத்திற் கூறினர்.

4. 'பல' என்ற சொல்லின் பின்னர் அஃதே வரின் பலபல, பலப்பல, பற்பல ஆகுமென்பர் தொல்காப்பியனார். இளம்பூரணர் 'சில' என்றதும் அவ்வாறு வருமென்று கூறுதலுடன், பல சில என்ற சொற்களின்பின்னர் வேறு சொற்கள் வரினும் பலகலை, பல்கலை, சிலகலை, சில்கலை போன்ற மாறுதல்கள் வருமென்பர். இவற்றையெல்லாஞ் சூத்திரத்திற் கூறினர் நன்னூலார்.

5. 'இன்றி' என்ற சொல்லின் இகரஞ் செய்யுளில் உகரமாக மாறுமென்றார் தொல்காப்பியனார். 'அன்றி' என்ற சொல்லையுங் கூட்டினர் நன்னூலார்.

6. 'உரி'யின் பின்னர் சில சொற்கள் வரின் இடையில் 'ய' வருமென்பர் நன்னூலார்.

(உ-ம்.) உரி-யபயறு இதனைத் தொல்காப்பியரேனும் வீரசோழியவாசிரியரேனுங்கூறவில்லை

7. பண்டு, இன்று முதலிய குற்றியலுகரவீற்றுச்சொற்கள் நிலைமொழியாயிருக்கும்போது ஐகாரச்சாரியை பெறுமென்பர் நன்னூலார். (உ-ம்)

பண்டைக்காலம், இற்றைநாள்.

இதனைக் கூறிற்றிலர் தொல்காப்பியனார்.

8. உடம்படுமெய்யைப்பற்றி விரிவாய்ச் சூத்திரத்துட் கூறாதுபோயினர் தொல்காப்பியனார். ஆயினும் அவர் வழங்கிய சொற்களான் அ, உ, ஊ, ஒ, ஔ இவற்றின் பின்னர் வகரமும், இ, ஈ, ஏ, ஐ இவற்றின் பின்னர் யகரமும், ஆவின் பின்னர் யகர வகரங்களும் வருமென அறிதல் கூடும் [1] அவற்றை வீரசோழிய வாசிரியர் விரிவாய்க் கூற அதனைப் பின்பற்றினர் நன்னூலார்.

(1) *Cf*. தொல். எழுத். 141 குறிப்புரை.

9. தெங்கு + காய் என்றது 'தேங்காய்' எனவாகு மென்று கூறினர் நன்னூலார். தொல்காப்பியனார் அதனைக் கூறவில்லை.

10. 'பத்து' என்ற நிலைமொழியின் பின்னர் ஒன்று, மூன்று, நான்கு முதலியன வரின், இன் சாரியை வருமென்பர் தொல்காப்பியனார். 'இற்று' ச்சாரியையும் வரும் என்பர் இளம்பூரணர். நன்னூலார் இரண்டனையுங் கூறினர்.

11. வருமொழிமுதல் 'யா' ஆகவிருக்க, நிலைமொழியீறு யகரமொழிந்தமெய்யாயிருக்க, இடையில் இகரந்தோன்றுமென்பர் நன்னூலார். தொல்காப்பியனார் இதனைக் கூறிற்றிலர்.

12. 'எகின் + கால்' என்றது 'எகினக்கால்' என்றாகு மென்பர் தொல்காப்பியனார். 'எகினங்கால்' என்று மாறு மென்றார் இளம்பூரணர். இளம்பூரணர் கொள்கையைப் பின் பற்றினர் நன்னூலார்.

13. நிலைமொழியீறு யரழக்களாயிருக்க, வருமொழி முதல் கசதபக்களாயிருக்க, அவ்வழியில் இயல்புபுணர்ச்சியே யாகுமென்பர் தொல்காப்பியனார். கசதபக்கள் மிகலாமென்ற னர் வீரசோழியவாசிரியர். நன்னூலார் வீரசோழியவாசிரிய ரைப் பின்பற்றினர்.

14. 'தெவ் + முனை' என்றது 'தெம்முனை' என ஆகலாமென்றனர் நேமிநாதவாசிரியர். இதனைப் பின்பற்றினர் நன்னூலார். அவ்வாறு கூறவில்லை தொல்காப்பியனார்.

வீரமாமுனிவர் புணர்ச்சிவிதிகளில் பெரும்பாலும் நன்னூ லாரைப் பின்பற்றினர். எகரத்தின்பின்னர் யகரம் மாத்திரம் உடம்படுமெய்யாகலாம் என்ற கூற்றில் அவரோடு வேறுபட்ட னர். அன்றியும் தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி என்ற மூன்றனையுந் 'திரட்டு' என்ற சொல்லான் வழங்கினர். இச் சந்திகள் தமிழ்மொழிக்கு இல்லை என்றது திண்ணம். தனுதி பன், கங்கோதகம், வனௌகஸர் முதலிய சொற்களில் அவை வந்திருத்தலின் அவரும், அவருக்குமுன் வீரசோழியவாசிரியர் நேமிநாதவாசிரியர் இவ்விருவரும் அவற்றைக் கூறியிருத்தல்

வேண்டும். அச்சொற்கள் தொகைச்சொற்களாகவே தமிழ் மொழியில் வந்திருத்தல்வேண்டுமேயன்றித் தனிச்சொற்களாக வந்து தொகையாயினவல்ல. ஏனெனில் தனுதிபன் என்ற தொகைச்சொல்லினுள்ள சொற்களாகிய தனம், அதிபன் என்பன தமிழ்மொழியிலக்கணப்படி தொகையாமாயின் 'தனத்ததிபன்' என்றேயாகும். அவ்வாறு கங்கோதகம், வனௌகஸர் என்பதற்குப் பிரதியாக கங்கையுதகம், வனத்திஞெகஸர் என்றிருத்தல்வேண்டும். ஆகலின் தனுதிபன் முதலிய சொற்கள் யநாயிவஃ, மமொழாஊகஃழ, வநளாகவஃ என்ற வடமொழித் தொகைச்சொற்களின் தற்பவமேயன்றி தனம், அதிபன்: கங்கை, உதகம்: வனம், ஓகஸன் இவற்றின்புணர்ச்சியால் வந்தனவல்ல.

---

# III. சொல்லியல்

## 1. சொற்பாகுபாடு

சொல் எழுத்துக்களான் ஆக்கப்பட்டமையான் எழுத்தியலின் பின் சொல்லியல் கூறப்பட்டது. சொற்களுக்குப் பொருள், அவை ஒரு தொடரின்கண்ணேயிருப்பினல்லது இல்லை யென்பர் பெரியோர். தொடர், பெயர் வினை இவ்விரு வகைச்சொற்களான் ஆக்கப்பட்டதெனக் கருதினர் ஆசிரியர் தொல்காப்பியனார். ஆகலினன்றே

சொல்லெனப் படுப பெயரே வினையென்று
ஆயிரண் டென்ப வறிந்திசி னோரே. (தொல். சொல். 158)

எனச் சூத்திரித்தனர்.

உரிச்சொல்லும் இடைச்சொல்லும் சொல்லாகாவோ வெனின், அவை முறையே பெயர், வினை இவற்றின் பகுதியும் விகுதியுமாய் இருக்குமேயன்றித் தனியாய் நில்லா என

இடைச்சொற் கிளவியு முரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கிற் றோன்று மென்ப (தொல். சொல். 159)

என்ற சூத்திரத்தான் உணர்த்தினர். ஆயினும் பிற்காலத்தில் சொல் பெயர், வினை, இடை, உரி யென நான்குவகைப்படு மென்ற வழக்கு வந்துளது.

---

## 2. பெயர்

இலக்கணம்.

ஆசிரியர் தொல்காப்பியனார் 'எல்லாச்சொல்லும் பொருள் குறித்தனவே' (தொல். சொல். 155) எனச் சொல்லின் இலக்கணங்கூறினும், பெயரின் இலக்கணங் கூறவில்லை. அதற்குக் காரணம் அச்சொல்லே தன்பொருளால் அதனிலக்கணத்தைக் குறிக்குமென்ற எண்ணத்தாற்போலும். அவ்வாறிருந்தும் அதன் உரைகாரர்கள்

கூறிய முறையி னுருபுநிலை திரியா
தீறுபெயர்க் காகு மியற்கைய வென்ப. (தொல். சொல். 69)

என்ற சூத்திரத்தான் உருபேற்றலாகிய பெயரிலக்கணம் பெறப்பட்டது என்றும்,

போருண்மை சுட்டல் வியங்கோள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகோள வருதல் பெயர்கோள வருதலென்று
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே. (தொல். சொல். 66)

என்ற சூத்திரத்தான் பயனிலைகோடல் பெயர்க்கிலக்கணம் என்றும்,

பெயர்நிலைக் கிளவி காலந் தோன்றா
தொழினிலை யொட்டு மொன்றலங் கடையே.
(தொல். சொல். 70)

என்ற சூத்திரத்தான் காலந்தோன்றாமையாகிய பெயரிலக்கணமும் ஈண்டே கூறினார் என்றுங் கூறினர்.

உருபேற்றல் பெயர்க்கிலக்கணமென்று கூறுதற்குக் காரணம் வடமொழியில் இலக்கணப்பேராசிரியரான ஆசிரியர் பாணினி அவ்வாறு[1] கூறியதெனத் தோன்றுகின்றது. அவர் கூற்றில் வேற்றுமையுருபை ஈற்றிற்கொண்டது பெயராகும். ஆசிரியர் தொல்காப்பியனாரோ சொல்லிலக்கணங் கூறும்போது ஆசிரியர் பாணினியின் கொள்கையைக் கொள்ளாது, ப்ராதிசாக்கியத்தில் 'பொருளுள்ளது பதம்' என்று கூறப்பட்டதுபோல 'எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே' எனக் கூறினர். பெயரை 'நாம' என்ற குறியான் வழங்கி 'சத்துவத்தைக் குறித்தல்' அதனிலக்கணமாக ப்ராதிசாக்கியநூலோர் வழங்கியிருத்தலின் தொல்காப்பியனார் பெயர் என்ற குறியானே மக்கள் விலங்கு என்றவற்றைக் குறித்தனர் என்னலாகும்.

வகை.

பெயர் உயர்திணை, அஃறிணை என இருவகைப்படும். மக்களைச் சுட்டுவது உயர்திணையென்றும், மக்களல்லாத பிறவற்

(1) பதம் என்றது ஸுப்பையும் திங்கையும் ஈற்றில் கொண்டது என்பது அவர் கொள்கை.

றைச் சுட்டுவது அஃறிணை யென்றும், தெய்வத்தைச் சுட்டும் பெயர் உயர்திணை யாகு மென்றும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறினர். நேமிநாதவாசிரியர் நரகரைக் குறிக்கும் பெயரையும் உயர்திணையென்பர். அவரது கொள்கையினையே பின்பற்றினர் நன்னூலார். இலக்கணவிளக்கவாசிரியர் தொல்காப்பியனாரது கொள்கையே கொண்டனர். சில பெயர்கள் உயர்திணை, அஃறிணை இரண்டாகவும் வழங்கும். அவற்றை விரவுத்திணை யென்பர். தொல்காப்பியனார்காலத்தில் முன்னிலைப்பெயர்களும், சாத்தன் முதலிய படர்க்கைப்பெயர்களுமே விரவுத்திணையாகக் கொள்ளப்பட்டன; தன்மைப்பெயர்களோ உயர்திணையேயாம்.[1] நன்னூலார் தன்மைப்பெயர்களையும் விரவுத்திணையாகக் கொண்டனர்.

உயர்திணை, ஆண்பால் பெண்பால் பலர்பால் என மூவகைப் படுமெனவும், அஃறிணை, ஒன்றன்பால் பலவின்பால் என இருவகைப்படுமெனவும் ஆசிரியர் கூறியுள்ளார். ஓர் ஆணைக்குறிப்பது ஆண்பாலாகும்; ஒரு பெண்ணைக்குறிப்பது பெண்பாலாகும்; இரண்டு முதலிய ஆணையோ, பெண்ணையோ குறிப்பதும், ஓர் ஆண், ஒரு பெண் இவர்களைக் குறிப்பதும் பலர்பாலாகும்; மக்களல்லாப் பிற பொருள்களுள் ஒன்றைக் குறிப்பது ஒன்றன்பாலாகும்; அவற்றுள் பலவற்றைக் குறிப்பது பலவின்பாலாகும். தமிழ்மொழியில் சாதி எண் இவ்விரண்டனையுங் குறித்தற்கு ஒரே விகுதியிருத்தல் காண்க. அன்றியும் பெயரின் பொருளையறியாது, ஈற்றால் அவற்றின் பாலையறிதல் பெரும்பாலும் இயலாது.

னஃகா னொற்றே யாடூஉ வறிசொல் (தொல். சொல். 5)
ளஃகா னொற்றே மகடூஉ வறிசொல் ( ,, 6)
ரஃகா னொற்றும் பகர விறுதியு
மாரைக் கிளவி யுளப்பட மூன்று
நேரத் தோன்றும் பலரறி சொல்லே ( ,, 7)
ஒன்றறி கிளவி தறட வூர்ந்த
குன்றிய லுகரத் திறுதி யாகும் ( ,, 8)
அஆவ என வரூஉ மிறுதி
யப்பான் மூன்றே பலவறி சொல்லே ( ,, 9)

(1) தொல். சொல். 162.

எனத் தொல்காப்பியனார் கூறியிருப்பினும், பெயருள் அவ்விதி நியதியாயில்லையென்றதை

> இருதிணை மருங்கி னைம்பா லறிய
> வீற்றினின் றிசைக்கும் பதினோ ரெழுத்துந்
> தோற்றந் தாமே வினையொடு வருமே (தொல் சொல். 10)

என்ற சூத்திரத்திலுள்ள 'வினையொடு' என்ற சொல்லாற் குறித்தனர். ஆகலின் 'பெண்மகன்' 'அலவன்' என்றன னஃகானீற்றாயினும் முறையே பெண்பாலும் ஒன்றன்பாலுமாகும், 'மக்கள்' என்றது ளஃகானீற்றாயினும் பலர்பாலாகும்.

எண்.

பால் என்றதனுள் சாதி, எண் இவை இரண்டும் அடங்கியிருப்பினும், எண்ணைத் தனியா யெடுத்துக்கூறின், அஃது ஒருமை பன்மை என இருவகைப்படு மென்றதில் ஐயமில்லை. வடமொழியிற்போல இருமை ஈண்டு இல்லை. 'நாம்' என்றது தன்னையும் முன்னின்றானையுமே குறித்தலின் அஃது ஒருவகை யிருமையாகுமென்பர் டாக்டர் கால்ட்வெல்[1]. அவ்வாறு கூறுதற்குக் காரணம் இப்போது 'நாம்' என்றதைத் தன்னையும் முன்னின்றானையுங் குறிக்க வழங்குதலும், 'நாங்கள்' என்றதனைத் தன்னையும் படர்க்கையாரையுங் குறிக்க வழங்குதலுமாகும். இக்கூற்று தொல்காப்பியனார்காலத்திற் பொருந்தாதென்றதற்குக் காரணங்கள் இரண்டு உள:—அவர்காலத்து 'கள்' விகுதி அஃறிணையியற்பெயரிலே வந்ததன்றி உயர்திணையில் வாராமையின், நாங்கள் என்ற சொல்லே வழக்கிலில்லை என்றதொன்று. 'நாம்' என்ற சொல் தன்னையும் படர்க்கையாரையுங் குறித்தல் சங்கவிலக்கியங்களுட் பலவிடங்களிற் காணலாம் என்றது மற்றொன்று.

வேற்றுமை.

ஒரு பெயர் ஒரு பொருளைக்குறிப்பினும், அது வினையைத் தழுவுங்கால், அவ்வினையாற் குறிக்கப்படுஞ் செயப்படுபொருளாகவும், கருவியாகவும், கொள்வோனாகவும், காரணமாகவும்,

(1) C. D. G. 222, 223.

நிகழ்ச்சியிடமாகவும் இருத்தல் கூடும். 'மரம்' என்ற சொல்லை மாத்திரஞ் சொல்லின், அச்சொல்லாற் குறிக்கப்படும் பொருள் மேற்கூறியவா றெல்லாவகையாகவும் இருத்தற்கு உரித்தாயிருக்க, 'ஐ' விகுதி ஏற்று 'மரத்தை' எனக் கூறின், அது செயப்படுபொருளாகவே ஆய்விடும். ஆகவே 'ஐ' முதலியவற்றிற்கு வேறுபடுத்தல்தன்மை யுளது. ஆகலின் ஐ, ஒடு, கு, இன், அது, கண் இவற்றை வேற்றுமை [1] யென்றனர் ஆசிரியர் தொல்காப்பியனார். ஆகலின் வேற்றுமை என்றற்கு வேறுபடுக்க ஆற்றலுள்ள உருபு எனப் பொருளாகும்.

வேற்றுமையின் பெயர் தொல்காப்பியனார்காலத்துக்கு முன்னர் பெயர் வேற்றுமை, ஐ வேற்றுமை, ஒடு வேற்றுமை, கு வேற்றுமை, இன் வேற்றுமை, அது வேற்றுமை, கண் வேற்றுமை என இருந்திருத்தல் வேண்டுமென்றது

அவைதாம்.
பெயர் ஐ, ஒடு, கு
இன்அது கண்விளி யென்னு மீற்ற. (தொல். சொல். 64)

என்ற சூத்திரத்தான் விளங்கும். ஐ முதல் கண் இறுதியாயுள்ள வேற்றுமையை இரண்டாம் வேற்றுமை, மூன்றும் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறும் வேற்றுமை. ஏழாம் வேற்றுமை எனப் பெயரான் வழங்கினர் தொல்காப்பியனார். விளிவேற்றுமையை எட்டாம் வேற்றுமை யெனக் கூறினர் நன்னூலார். பெயர் வேற்றுமையை இக்காலத்தார் முதல் வேற்றுமை யென்பர். [2]

வேற்றுமையுருபுகள் தொல்காப்பியனார்காலத்து ஐ, ஒடு, கு, இன், அது, கண் என்பன எனக் கூறப்பட்டது. 'ஆன்' என்றதையும் உருபாகக்கொண்டனர் என்பது

குஐ ஆனென வரூஉ மிறுதி
அவ்வொடு சிவணுஞ் செய்யுளுள்ளே. (தொல். சொல். 108)

என்ற சூத்திரத்தான் விளங்கும். அவ்வுருபு அவரது சூத்திரங்களினுங் காணப்படுகின்றது. ஆங்குப் பெரும்பாலும் ஏழாம்

(1) தொல். எழுத். 114. (2) இரண்டாம் வேற்றுமை, மூன்றும் வேற்றுமை...என்பன வடமொழியில் த்விதீயா, த்ருதியா...என்பவற்றை ஒத்திருந்தல் காண்க.

வேற்றுமைப்பொருளில் வந்துளது. இருப்பினும் சங்கவிலக்கியங்களிற் பலவிடங்களில் மூன்றும்வேற்றுமைப்பொருளில் வழங்கப்பட்டிருத்தலானும், அதனை மூன்றும் வேற்றுமையுருபாகவே பின்னுள்ளோர் கொண்டமையானும், அதனை மூன்றும் வேற்றுமையுருபாகக் கொள்ளுதலே சாலும்.

சிலவேற்றுமையுருபுகள் நாளடைவில் உருவம் மாறுபட்டன. உதாரணமாக 'ஆன்' 'ஆல்' என்றும், 'ஒடு' 'ஓடு' என்றும், 'இன்' 'இல்' என்றும், 'அது' 'ஆது' என்றும் ஆயின.

ஒடு—ஓடு ஆகவும், அது—ஆது ஆகவும் ஆயினமைக்குச் செய்யுளில் 'நீட்டும்வழி நீட்டலும்' (தொல். சொல். 403) என்ற சூத்திரங் காரணமாகும். ஒடு—ஓடு ஆகவும், அது—ஆது ஆகவும் நீட்டப்பட, 'ஓடு' 'ஆது' என்றவையே முறையே மூன்றும்வேற்றுமையுருபு ஆறும்வேற்றுமையுருபு எனப் படிப்போர் மயங்கினர்போலும்.

'ஆன்' 'ஆல்' ஆகவும், 'இன்' 'இல்' ஆகவும் ஆயினமைக்குக் காரணம் புணர்ச்சியைத் தவறாகப் பிரித்தலேயாகும்.

வணக்கத்தானல்லன், அரசனினல்லன் என்றவற்றை வணக்கத்தான் நல்லன், வணக்கத்தால் நல்லன் என்றும், அரசனின் நல்லன், அரசனில் நல்லன் என்றும் பிரித்தல் கூடும்.

வணக்கத்தான் நல்லன், அரசனின் நல்லன் எனப் பிரித்தற்குப் பிரதியாக வணக்கத்தால் நல்லன், அரசனில் நல்லன் எனப் பிரித்து ஆல், இல் இவற்றை முறையே மூன்றும்வேற்றுமை ஐந்தாம் வேற்றுமை இவற்றின் உருபாகக் கொண்டிருத்தல் வேண்டும்.

புதிதாய்த் தோன்றிய வேற்றுமையுருபு.

ஆறும்வேற்றுமையுருபேற்ற பெயரான் தழுவப்பட்ட பெயர் உயர்திணையாயிருக்கும்போது 'அது' என் உருபு கெட, 'கு'வ்வுருபு வருமென்றும், அஃறிணையாயிருக்கும்போது 'அது' வருமென்றுங் கருதினர் தொல்காப்பியனார். தழுவப்பட்ட பெயர் அஃறிணைப்பன்மையாயிருப்பின் 'அ' என்ற உருபு வரும்

என்றனர் நன்னூலுரைகாரர். அவ்வாறு கொண்டதற்குக் காரணம்,

நின்ன கண்ணியும் (புறநா. 45, 3)
அவர காப்புடைய கயம் (புறநா. 15, 9)

போன்றவிடங்களில் 'நின்ன' 'அவர' என்பனவற்றை ஆறும் வேற்றுமையுருபேற்ற பெயராகக் கொண்டதாகும். உண்மையில் அவற்றைப் பலவின்பாலில் வந்த வினையாலணையும்பெயரெனக் கொள்ளல் தகும். தழுவப்பட்ட பெயர் பலவின்பாலி விருப் பினும் ஆறும்வேற்றுமையுருபு 'அது' என வழங்கியிருத்தல் அதற்கு ஒரு சான்றாகும். (உ-ம்)

நினது இருதிருவடி (சிலப். 24 பக். 518)
இறைவனது அடியிணை (தேவா. 127, 5)
உனது அடியார் மனத்தாயோ (பெரி. திருமொழி 150, 7)

சொல்லுருபு.

வேற்றுமையுருபுகளின் பொருள் சில சொற்களாலுங் குறிக்கப்பட்டன. அவற்றிற்குச் சொல்லுருபெனப் பெயர். சொல்லுருபுகள் வரலாமென்பதற்கு

யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.
(தொல். சொல். 112)

என்ற சூத்திரம் பிரமாணமாகுமென்பர் தெய்வச்சிலையார். கொண்டு, பொருட்டு, நின்று, உடைய என்பன முறையே மூன்று, நான்கு, ஐந்து, ஆறும்வேற்றுமைப்பொருளில் வந்தது காண்க. (உ-ம்)

ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றி (புறநா. 55)
இழித்தற் பொருட்டு (குறள் 784)
வானின்று உலகம் வழங்கி வருதலான் (குறள் 11)
செய்தவனுடைய... தேவிக்கு (தேவா. 106, 3)

ஏழாம்வேற்றுமைப்பொருளில் இடப்பொருளை யுணர்த் தும் பெயரெல்லாம் சொல்லுருபுகளாகக் கொள்ளப்பட்டன.

அவை கண், கால், இடம், அகம், புறம் முதலியனவாகும். இப்பொருளை

> கண்கால் புறமக முள்ளுழை கீழ்மேல்
> ..........................................
> அன்ன பிறவு மதன்பால வென்மனார். (தொல். சொல். 82)

என்ற சூத்திரம் உணர்த்துகின்றதென்பர் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் முதலியோர். இவையெல்லாம் ஏழாம்வேற்றுமையுருபாகிய 'கண்'ணின் பொருளினையே விளக்கிற்று என்பர் சேனாவரையர். இவர் கூறுங் காரணங்கள் போற்றத் தக்கன.

வீரசோழியவாசிரியர் வடநூலிலக்கணத்தைப் பின்பற்றி 'சு' என்றது முதல்வேற்றுமையொருமையுருபென்றும், மற்ற வேற்றுமைகளில் ஐ, ஒடு, ஓடு, ஆல், கு, பொருட்டு, இன்னின்று, கண்ணின்று, உடையான், உடையாள், உடையது, கே, உழை, இல், கண் முதலியன 'சு' வைப் பின்தொடருமென்றும், பிறகு 'சு' கெடுமென்றும், பன்மையில் முதல்வேற்றுமையில் அர், ஆர், ஆர்கள், கள், மார் என்பன பலர்பாலின்கண்ணும், 'சு' பலவின்பாலின்கண்ணும் வரும் என்றும், மற்ற வேற்றுமைகளில் இவற்றின்பின்னர் ஐ முதலியன வருமென்றும், ஆறும் வேற்றுமையில் பலர்பாலின்கண் உடையார், உடையார்கள் என்பனவும், பலவின்பாலின்கண் உடையின என்பதும் வருமென்றுங் கூறினர்.

இங்குக் குறிக்கவேண்டிய செய்திகள் சிலவாகும்: —

(1) ரகரத்தைப் பலர்பாலெழுத்தாக ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியிருக்க, இவர் 'அர்' 'ஆர்' என்றவற்றை அவ்வாறு கூறினர். ஆங்கு அ, என்றது சுட்டெழுத்து என்பது பின்னர்க் கூறப்படும்.

(2) அர்கள், ஆர்கள் என்பன பலர்பால்விகுதிகள் என்றனர். தொல்காப்பியனார்கொள்கைப்படி கள்விகுதி அஃறிணையியற்பெயரில் வரலாமேயன்றி உயர்திணைப்பெயரில் வாரா,

அஃறிணைப்பெயரிலிருந்து உயர்திணைப்பெயரின்கண்ணும் ஒற்றுமைப்போலியான் கள்விகுதி வந்திருத்தல்வேண்டும். ஆகலின்

நோன்பிகள் (மணிமே. 3, 75)
வசுக்கள் (தேவா. 42, 5)

என்ற சொற்கள் வழக்கில் வந்தன.

பெண்டிர்காள் (சிலப். 469, 4)

முதலிய சொற்கள் இருபன்மைவிகுதிகளை யேற்றன எனக் கூறுதல் தகும். அவை மிகுதியாய்த் தேவாரம், நாலாயிரப் பிரபந்தம் இவற்றில் வழங்கத்தொடங்கின. (உ-ம்)

பத்தர்கள் பயிலவைத்தார் (தேவா. 27, 2)
இவை பாடுந் தவமுடையார்கள் (பெரிய திரு. 96, 10)

அவ்வழக்கு புறநானூறு முதலிய சங்கவிலக்கியங்களில் இல்லையெனத் தோற்றுகின்றது.

(3) உடையான், உடையாள், உடையார், உடையார்கள், உடையது, உடையின என்பன குறிப்புவினைமுற்றாய் வரலாமேயன்றி ஆறும்வேற்றுமையுருபாகா. உடைய என்றதுமாத்திரம் அவருக்கு முன் ஆறும்வேற்றுமையுருபாக வழங்கியுளது.

(உ-ம்) செய்தவனுடைய.........தேவிக்கு (தேவா. 106, 3)
பவிழிய சாணத்தாருடைய (T. A. S. i. H. O. P. 5)

(4) வின்ஸானின் கூற்று.

'கள்' அல்லது 'மள்' தான் திராவிடமொழிகளில் பன்மைவிகுதியாகத் தொடக்கத்தில் இருந்திருத்தல்கூடுமென்றும் பிற்காலத்திலே ரஃகான் பன்மைவிகுதியாக வந்திருத்தல் கூடுமென்றும் வின்ஸான் கூறினர். அவர்கூற்றுப் பொருந்தாதெனத் தோற்றுகின்றது. அதற்குக் காரணங்களாவன :—

i. தொல்காப்பியனார் 'கள்' விகுதியை அஃறிணையியற்பெயர்களுள் உறழ்ச்சியாய் வருமென்று கூறுகின்றமையின் ஒருகால் தமிழ்மொழியில் 'கள்' விகுதி இல்லாமலிருத்தல் கூடும். ரஃகானொற்றே பலர்பால்விகுதியாக இருந்தது என அவரே கூறுகின்றார்.

ii. அரசர்கள் முதலிய சொற்களில் ரஃகாரெறுற்றின் பின்னரே கள் விகுதி சேர்க்கப்பட்டதேயன்றி, ரஃகாரெறுற்றின் இடத்தில் 'கள்' விகுதி வந்திலது.

iii. தமிழ், தெலுங்கு கன்னடம் முதலிய மொழிகளின் வினைகளில் ரஃகாரெறுற்றே பண்டைக்காலங்களில் காணப்படுகின்றதே யன்றி, கள் விகுதி காணப்பட்டிலது.

iv. திராவிடமொழிகளுக்கும் இண்டோ யூரோபியன் மொழிகளுக்கும் ரஃகாரெறுற்றுப் பொதுப்பன்மைவிகுதியாக இருந்திருத்தல் கூடும்.

v. நன்னூலார் வீரசோழியவாசிரியரைப் பின்பற்றி உயர்திணைப்பன்மையில் கள் விகுதி வருமென்றும், ஒடு, ஆன் இவற்றுடன் ஓடும், ஆலும் மூன்றும் வேற்றுமையுருபாக வருமென்றும், 'இல்' ஏழாம் வேற்றுமையுருபாகலாமென்றுங் கூறினும், அவர்போல் 'சு' என்ற உருபினைக் கூறுதிருத்தல் போற்றத்தக்கது.

## பெயர்கள் உருபேற்கும்போது நேருஞ் செய்தி

1. பெயர்கள் உருபேற்கும்போது உருபிற்கு முன் சாரியைகளைக் கொள்ளுகின்றன.

(உ-ம்) மரத்தை.

அவற்றை மிகுதியாய் அஃறிணையிலுஞ் சிறுபான்மை உயர்திணையிலுங் காணலாம்.

2. உருவத்தில் முற்றுவினையாயிருக்குஞ் சொற்கள் வினையாலணையும்பெயராய் வரும்போது உருபேற்கும்.

(உ-ம்) நாயேனைப் பொருட் படுத்து (தேவா. 31, 3)
நெடுமாலுக் கருள்செய்தானை (தேவா. 217, 2)

3. யான், நீ முதலிய தன்மைமுன்னிலைப்பெயர்களும் தான், தாம் முதலிய பெயர்களும் உருபேற்கும்போது முதலெழுத்து உருவம்மாறும்.

(உ-ம்) யான் — என்னை
யாம் — எம்மை
நாம் — நம்மை

| | |
|---|---|
| நீ | நின்னை, நுன்னை, உன்னை |
| நீயிர் | நும்மை, உம்மை |
| தான் | தன்னை |
| தாம் | தம்மை |

ஈண்டு சில சொற்களின் சரிதையைக் கவனித்தல் வேண்டும்.

நான்.

தற்போது தன்மையொருமையில் யான், நான் என்ற இரண்டு சொற்கள் உள. ஆயினுந் தொல்காப்பியனார் 'நான்' என்றதைக் கூறவில்லை. வீரசோழியவாசிரியரும் நன்னூலாரும் அதனைக் கூறுகின்றனர். அவர்கள் கூறுதற்குக் காரணம் அச் சொல் தேவாரம் நாலாயிரப்பிரபந்தம் இவற்றிலும் அவற்றிற் குப் பிற்பட்ட நூல்களிலும் வழங்கியிருத்தலேயாகும். 'நான்' என்றது எவ்வாறு வந்திருக்கலாமெனின் தன்மைப்பன்மையில் யாம், நாம் என இருசொற்களிருக்கவும், யாம் என்றதற்கு ஒருமையாக 'யான்' என்றது இருக்கவும் 'நாம்' என்றதற்கு ஒருமையாக 'நான்' என இருந்திருத்தல் வேண்டுமென்ற திரி புணர்ச்சியேயாகும். ஆக 'நாம்' என்ற சொல்லை நோக்கி ஒற்றுமைப்போலியான் 'நான்' வந்திருத்தல் வேண்டும்.

யாங்கள், நாங்கள்.

தொல்காப்பியனார்காலத்து இச்சொற்களில்லை யென்றதற் குக் காரணம், யாம் நாம் என்ற தன்மைப்பெயர்கள் உயர்திணை யேயன்றி விரவுத்திணையாக இல்லாமையும், கள் விகுதி அஃ றிணையிபற்பெயராதாக இருந்ததும் என்க. வீரசோழியவாசிரி யர் நாம் என்றதனை உயர்த்தற்கண் வந்த தன்மையொருமை யென்றும் நாங்கள் யாங்கள் என்பனவற்றை தன்மைப்பன்மை யென்றுங் கூறுவர். டாக்டர் கால்ட்வெல் யாம், நாம் என்பன கூறுவோனையும் முன்னின்றுரையு முளப்படுக்குமென்றும், யாங் கள் நாங்கள் என்பன கூறுவோனையும் படர்க்கையாரையும் உளப்படுக்குமென்றுங் கூறுவர்[1] இவ்வாறு அவர் கூறுதல் பிற்காலத்து வழக்கு நோக்கிப்போலும். நன்னூலார் வினை விகுதியுள் சில தன்னையும் முன்னின்றுரையும், சில தன்னையும்

(1) C. D. G. 414, 415.

படர்க்கையாரையும், சில இருபாலாரையுங் குறிக்குமெனக் கூறி னும், நாம் நாங்கள் இவற்றைப்பற்றி இவ்வாறு கூறிற்றிலர். யாங்கள், நாங்கள் என்பன இருபன்மைவிகுதியேற்ற சொற்க ளென்பது வெளிப்படை.

நேக்கு.

'எனக்கு' என்ற சொல் உலகவழக்கில் 'நேக்கு' என மருவி வழங்கப்படுகின்றது. இங்கு எகரம் மாற்றுமுயிராற்ற லால் னகரப்புள்ளியின் பின்னருள்ள அகரத்தை எகரமாக்கித் தான் கெட்டது. ஒரு மாத்திரைகொண்ட எகரங் கெட்டதற் குப் பிரதியாக எகரம் நீண்டது. மொழிமுதலில் னகரம் வாரா மையின் அது நகரமாய்த் திரிந்தது.

என், நம்

முதலல்வேற்றுமைகளில் தன்மையொருமையின் பகுதி 'என்' ஆகவும், தன்மைப்பன்மைப்பகுதிகளுள் ஒன்றாகிய 'நம்' அதனினின்று முற்றும் வேறுபட்டதற்கு ஜோஸப் ரைட்[1] என்பவர் பின்வருங் காரணங் கூறினர் :—'உண்மையாகத் தன்மையொருமை தான் தன்மையாகும். ஏனெனின் ஒரே காலத்தில் ஒருவன் தான் பேசக்கூடும். தன்மைப்பன்மையோ பேசுகின்றவனையும் பேசாத சிலர்களையுங் குறிக்கின்றது. ஆத லின் அஃது உண்மைத் தன்மையாகாது'.

எலாம், எல்லாம்.

தொல்காப்பியனார்காலத்தில் எல்லாநம்மையும், எல்லா நம்மானும் என வழங்கியிருத்தல்

எல்லா மென்னு மிறுதி முன்னர் (தொல். எழுத். 187)
உயிர்திணை யாயி னம்மிடை வருமே (தொல். எழுத். 190)

என்ற சூத்திரங்களான் விளங்கும். எல்லாநம்மையும் முதலிய வழக்கு தொல்காப்பியத்தைத் தவிர்த்து ஏனைய நூல்களிற் காணப்படவில்லை. இக்காலத்து அவற்றுக்குப் பிரதியாக நம்மையெல்லாம் முதலிய வழக்கே யுள. நன்னூலார் 'எலாம்' என்றுந் தன்மைச் சொல்லுண்டு என்றனர்.

(1) *Joseph Wright.*

நீயிர், நீவிர், நீர், நீர்கள், நீம்.

தொல்காப்பியனார்காலத்து 'நீயிர் என்ற ஒரு சொல்லே முன்னிலைப்பன்மையைக் குறித்தது. அதனை அவர் 'நும்மின் றிரிபெயர்' எனக் கூறினர். அவர்கொள்கையில் 'நும்' என்றது முதல் வேற்றுமையில் நீயிர் எனத் திரியுமென்றதே. முன்னிலையொருமையாகிய 'நீ' என்றதற்கு முன்னிலைவிகுதியாகிய 'இர்' என்றதைச் சேர்த்து 'நீயிர்' என ஆயிற்று எனக் கூறலாமெனத் தோற்றுகின்றது. வீரசோழியவாசிரியரும் அதனுரைகாரரும் நீர், நீர்கள், நீயிர், நீயிர்கள், நீவிர் நீவிர்கள் இவற்றைக் கூறினர். 'நீம்' என்றது முன்னிலைப்பன்மையாக சீவகசிந்தாமணியில் வழங்கப்பட்டுளது. அதனைத் திசைச் சொல் லென்பர் உரைகாரர். அது கன்னடத்திலிருந்து தமிழில் வந்திருத்தல் கூடுமென்றேனும், நாம், தாம் என்ற சொற்களின் ஒற்றுமைப்போலியால் நீர் என்றது அவ்வாறு மாறியிருத்தல் கூடுமென்றேனுங் கொள்ளல் தகும்.

நீங்கள்.

இது 'நீம்' என்றதற்குக் கள்விகுதி சேர்த்து வந்திருத்தல்வேண்டும். இச்சொல் சீவகசிந்தாமணிக்கு முன்னருள்ள நூல்களில் வழங்கப்படவில்லை. இக்காலத்தோ இஃதே முன்னிலையொருமையுயர்சொற்கிளவியாகவும், முன்னிலைப்பன்மையாகவும் வழங்கப்படுகின்றது. இச்சொல் இருபன்மைவிகுதி யேற்ற சொல்லென்பது வெளிப்படை.

உன்னை, உனக்கு...

முதலல்வேற்றுமைகளில் 'நின்' என்றதே பகுதியாகத் தொல்காப்பியனார் காலத்தில் வழங்கப்பட்டதென்பது

நீயெ னொருபெயர் நெடுமுதல் குறுகும்
ஆவயி னகர மொற்ற ரும்மே (தொல். எழுத். 179)

என்ற சூத்திரத்தான் விளங்கும். அவ்வாறிருக்க, சீவகசிந்தாமணியிலும், பெருங்கதையிலும் 'நுன்' என்றது பகுதியாக வழங்கப்பட்டதென்பது

*நுனசீரடி நோவ* (சீவக. 1517)
*நுன்பதிப் பெயர்க்கும்* (பெருங். 1, 32, 93)

என்ற உதாரணங்களால் அறியப்படும். 'நும்' மிலுள்ள உகரத்தைப்பார்த்து ஒற்றுமைப்போலியான் 'நின்'னும் நுன்னுக மாறியிருத்தல் கூடும். பிறகு 'நுன்கோனுன்னை' முதலிய இடங்களில் 'நுன்கோன் நுன்னை' எனச் சந்திபிரியாது 'நுன்கோன் உன்னை' எனச் சந்தி பிரித்திருத்தல் வேண்டும். பின்னர் 'உன்' என்றதே பகுதியெனக்கருதி 'உன்னை, உனக்கு முதலிய சொற்கள் வழங்கப்பட்டிருத்தல்வேண்டும். இச்சொற்கள் மணிமேகலைகாலத்தே வந்துள்ளன.

உம்மை, உமக்கு.

இவை முதலியனவும் நும்மை, நுமக்கு முதலியவற்றின் மரூஉ ஆகும். இங்குந் தவறிச் சந்திபிரித்தலே காரணமாயிருத்தல் வேண்டும். உங்களை, உங்களான் முதலிய சொற்கள், 'உம்' என்ற பகுதிக்குக் 'கள்' விகுதி சேர்த்துப் பிறந்தனவாகும்.

நோக்கு.

'உனக்கு' என்ற சொல் உலகவழக்கில் 'நோக்கு' என மருவி வழங்கப்படுகின்றது. இங்கு உகரம் மாற்றுமுயிராற்றலால் அகரத்தைத் தனக்கினமாகிய ஒகரமாக்கித் தான் கெட்டது. ஒருமாத்திரை கொண்ட ஒகரம் அகரங் கெட்டதற்குப் பிரதியாக ஓகாரமாக நீண்டது. மொழிமுதலில் னகரம் வாராமையின் அது நகரமாய்த் திரிந்தது.

எல்லீரும், எல்லீர்நும்மையும்...

தொல்காப்பியனார்காலத்தில் முதல் வேற்றுமையில் 'எல்லீரும்' என்பதும் ஏனைய வேற்றுமைகளில் எல்லீர்நும்மையும் எல்லீர்நும்மானும் முதலியனவும் வழங்கப்பட்டன. பிற்காலத்தில் அவை இறந்து, எல்லாரும், எல்லோரும் என்பன முதல் வேற்றுமையிலும், எல்லாரையும் எல்லோரையும் முதலியன ஏனைய வேற்றுமைகளிலும் வழங்கப்பட்டுள்ளன.

சுட்டுப்பெயர்கள். தொல்காப்பியனார்காலத்தில் அவன், இவன், உவன், அவள், இவள், உவள், அஃது, அது, இஃது,

இது, உஃது, உது, அவர், இவர், உவர், அவ், அவை, இவ், இவை, உவ், உவை என்பன ஆகும். பின்னர் அவர்கள், இவர்கள், உவர்கள், அவைகள், இவைகள், உவைகள் இவையும் வழக்கில் வந்தன.

வினாப்பெயர்கள். தொல்காப்பியனார்காலத்தில் யாவன், யாவள், யாவர், யாஅர், யார், யாவது, யா, யாவை, எவன் என்பனவாகும். பிற்காலத்தில் அவற்றோடு எவன், எவள், எவர், எது, எவை, எவைகள், எவர்கள் என்பனவும் வழக்கில் வந்தன.

எண்ணுப்பெயர்களுள் தொல்காப்பியனார் காலத்து வழங்கிய 'ஏழ்' என்றது தற்போது 'ஏழு' என வழங்குகின்றது. இலக்கணப்படி அதனீற்றிலுள்ள உகரம் முற்றுகரமாயினும் குற்றியலுகரம்போன்றே அஃது ஒலிக்கப்படுகின்றது என முன்னரே கூறப்பட்டது.

## 3. வினை

இலக்கணம்.

ஆசிரியர் தொல்காப்பியனார் வினையியற்றொடக்கத்தில்

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும் (தொல். சொல். 198)

என்ற சூத்திரங் கூறினர். இச்சூத்திரம் வினையின் இலக்கணத்தை யுணர்த்துகின்றதென்றனர் உரைகாரர்கள். ஆயினும் 'காலமொடு' என்ற சொல்லை நோக்கின் வினை மற்றொன்றையுங் குறித்தல் வேண்டுமென்றது புலப்படுதலானும் 'நினையுங் காலை' என்றதனால் எல்லா வினையும் வெளிப்படையாய்க் காலத்தைக் குறிக்கவேண்டிய நியதி இல்லையெனப் பெறப்படுதலானும், இச்சூத்திரம் அதன் இலக்கணத்தைக் கூறவில்லையென்றது என் கருத்து. அவ்வாறாயின் அதன் இலக்கணம் எவ்வாறு புலப்படுமெனின், வினை என்ற குறியானே என்னலாகும். வேற்றுமை, பெயர் முதலிய குறிகள் தொல்காப்பியனார்க்கு முன்னருள்ள இலக்கணவாசிரியர்கள் இட்ட குறியாகலானும்,

அக்குறிகளானே அவற்றின் இலக்கணத்தைக் குறித்தல் பண்டையோர் வழக்காகலானும், வேற்றுமை, பெயர் இவற்றிற்கு ஆசிரியர் இலக்கணங் கூறாமையானும், வினைக்கும் இலக்கணங் கூறாது விட்டனர் எனக் கூறலாகும். அவ்வாறாயின் வினை என்ற சொல்லாற் குறிக்கப்பட்ட இலக்கணம் யாதெனின் 'செயலைக் குறிப்பது வினையாகுமென்றதே.' ஆகலினன்றோ இலக்கண விளக்க நூலாசிரியர் 'வினையெனப்படுவது ...' என்ற சூத்திரத்தினிறுதியில்

பொருட்புடை பெயர்ச்சி புலப்படுப் பதுவே

எனச் சேர்த்தனர். வீரசோழியவாசிரியர் வினையின் இலக்கணத்தைக் கூறாது, அதனைத் தொழிற்பதம் என்ற சொல்லாற் குறித்தனர். நன்னூலாரோ

செய்பவன் கருவி நிலஞ்செயல் காலம்
செய்பொரு ளாறுந் தருவது வினையே (நன். 320)

எனச் சூத்திரித்தனர். அது வினைக்கு இலக்கணங் கூறியதாக உரைகாரர்கள் கருதினர். இச்சூத்திரம்

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
இன்னதற் கிதுபய னாக வென்னும்
அன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழின்முத னிலையே
(தொல். சொல். 112)

என்ற தொல்காப்பியச்சூத்திரத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆங்கு, செய்வது முதலாயின தொழில் நிகழ்தற்குக் காரணமென்று கூறப்பட்டமையின் நன்னூற்சூத்திரத்துள்ள 'தருவது' என்ற சொற்குக் 'கொண்டது' என்ற பொருள் கொள்ளவேண்டும். அவ்வாறு அச்சொற்குப் பொருள் புறநானூறு முதலிய இலக்கியங்களிற் காணலாம். அவ்வாறாயின் நன்னூலார் இச்சூத்திரத்தான் வினையின் இலக்கணத்தைக் கூறினர் என்று கூறுவது இயலாது.

வகை.

வினை தெரிநிலைவினை குறிப்புவினை என இருவகைப்படும். 'தெரிநிலைவினை' என்ற குறி பிற்காலத்தில் வந்ததெனவும், அதற்குப் பிரதியாக வினையென்றே வழங்கியிருத்தல்வேண்டுமென்றும்

குறிப்பினும் வினையினு நெறிப்படத் தோன்றி
அம்மூ வுருபின தோன்ற லாறே. (தொல். சொல். 201)

என்ற சூத்திரத்துள்ள 'வினையினும்' என்ற சொல்லான் அறியக்கிடக்கின்றது. அவ்வாறு வினையின் ஒரு பகுதியை 'வினை' என்ற சொல்லானே வழங்குதல் பிராம்மணவஸிஷ்டநியாயத்தால் * என்னலாம்.

குறிப்புவினை.

இன்றில வுடைய வென்னுங் கிளவியும்
அன்றுடைத் தல்ல வென்னுங் கிளவியும்
பண்புகொள் கிளவியு முளவென் கிளவியும்
பண்பி னாகிய சினைமுதற் கிளவியும்
ஒப்போடு வருஉங் கிளவியோடு தொகைஇ
அப்பாற் பத்துங் குறிப்போடு கொள்ளும்.
(தொல். சொல். 220)

என்ற சூத்திரத்தான் ஆசிரியர் குறிப்புவினைகளை உணர்த்தினர். பண்புகொள்கிளவி என்றதற்கு 'ஆற்றலேன்' முதலியவற்றையும் பண்பினாகிய சினைமுதற்கிளவிக்கு 'நெடுஞ்செவியன்' முதலியவற்றையும், ஒப்பொடு வருஉங் கிளவிக்குப் பொன்னன்னன் (புறநா. 84, 2) முதலியவற்றையு முதாரணமாகக் கொள்ளல் வேண்டும். ஈண்டு 'உண்டு' என்றதைக் கூறுவிடினும்

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகு மிடனுமா ருண்டே (தொல். சொல். 461)
உம்முந் தாகு மிடனுமா ருண்டே ( ,, 292)

* பிராம்மண வஸிஷ்ட நியாயம்.

பிராம்மணர்கள் வந்தனர் வஸிஷ்டரும் வந்தனர் என்ற தொடரில் வஸிஷ்டரின் சிறப்பினைக்கருதி அவரது பெயர் தனியாய்க் குறிக்கப்பட்டது. அவரும் பிராம்மணராயிருந்தலான் 'பிராம்மணர்கள்' என்ற சொற்கு வஸிஷ்டரைத் தவிர்த்த பிராம்மணர்கள் என்றது பொருளாகும். இந்நியாயத்தை 'தென்புலத்தார் தெய்வம்' என்ற திருக்குறட்பகுதியிடத்துங் காண்க.

முதலிய இடங்களில் தொல்காப்பியனாரே வழங்கியிருத்தலின் அதனை ‘உள’ என்றதற்கு ஒருமையாகக் கொள்ளல்வேண்டும்.

வீரசோழியவாசிரியர் வினைக்குறிப்பும் வடமொழிபாவே ப்ரயோகமும் ஒன்றென்கின்றனர். வடமொழியில் அப்பிரயோகம் படர்க்கையொருமையில் மாத்திரம் வழங்கப்படுமாதலானும், அதற்கு அத்தாதுவான் குறிக்கப்படுஞ் செயலே பொருளாதலானும் வினைக்குறிப்பு, தன்மை, முன்னிலை படர்க்கை ஆகிய மூவிடத்தின்கண்ணும் ஒருமை பன்மை இரண்டிலும் வழங்கப்படுமாதலானும், அது செயலோடு இடத்தையுங் குறிக்குமாகலானும் இரண்டுமொன்றெனக் கூறுதல் பொருந்தாது.

நன்னூலார் தொல்காப்பியனார் கூறியவற்றோடு ‘ஊணத்தான்’, ‘கானகநாடனை’ போன்ற காலம், இடம் இவற்றினடியாகப் பிறக்கும் வினைகளையும் ‘உண்டு’ என்றதனையுஞ் சேர்த்துக் கூறினர். ஆங்கு ‘உண்டு’ என்றது எல்லாவிடத்திலும் எல்லாப்பாலிலும் வரும் என்றனர். தொல்காப்பியத்திலோ ஒருமையில் தான் வழங்கப்பட்டுளது எனத் தோற்றுகின்றது. பிற்காலத்தில் ஒருமை பன்மை இரண்டிலும் வழங்கியிருத்தலைக் கண்டு நன்னூலார் அவ்வாறு கூறினர் போலும்.

பிரயோகவிவேகநூலார் குறிப்புவினையும் வடமொழி நாமதாதுவும் ஒன்றெனக் கருதினர். இரண்டும் பெயரடியாகப் பிறப்பினும் பொருளில் இரண்டற்கும் மாறுபாடுண்டு. ‘புத்ரீயதி’ என்றதற்கு மகனைப்போல் நடிக்க விரும்புகின்றானென்றேனும், மகனைப் பெற விரும்புகின்றானென்றேனும் பொருளாகும். ‘மாலாதி’ என்றதற்கு மாலையைப் போலுள்ளது என்பது பொருளாகும். அன்றியும் அப்பிரயோகங்களில் தாதுவிற்கும் வினைவிகுதிகளுக்கும் இடையில் ஒரு விகுதி சேர்க்கப்படுகின்றது. அவை எல்லாக்காலத்தையுங் குறிக்க வெவ்வேறு உருவமெடுக்கும். தமிழ்மொழிக் குறிப்பு வினையில் தாதுவிற்கே வினைவிகுதிகள் சேர்க்கப்படுதலானும், எல்லாக் காலத்தையுங் குறிக்கவேண்டினும் ஒரே உருவத்தோடு இருத்தலானும் ‘மகனேன்’ என்றதற்கு மகனுடையேன் என்றே பொருளாதலானும், அவரது கூற்றுச் சொன்மாத்

திரையால் பொருந்துமேயன்றி, பொருள்வகையான் பொருந்தா தென்க.

நன்னூலார்

'பொருள்முத லாறினும்..........' (நன். 321)

என்ற சூத்திரத்துள் குறிப்புவினை செயப்படுபொருள் முதலிய வற்றைக் கொள்ளாதென்பர். "வினையே வினைக்குறிப்பவ் விருமுதலிற் றோன்றும்" எனத் தொல்காப்பியனார் கூறியிருத்த லானும்,

இவ்வேன வழியு மந்நந் தமக்கில (தொல். சொல். 4)
எந்தையுமிலமே (புறநா. 112)

முதலியவிடங்களில் செயப்படுபொருள் வருதலானும், பெரும் பான்மைபற்றிக் கூறினர் என்க.

ஆகலின் குறிப்புவினை தமிழ்மொழிக்கு ஒரு சிறப்புப் பகுதியென்றே கூறலாகும். அவை தொடக்கத்தில் வினையா லணையும்பெயராய் நின்று அதன்பின்னர் 'ஆகும்' போன்ற வினையைக்கொண்டு, பின்னர் அவ்வினையின்றி அவையே முடிக் குஞ்சொல்லெனக் கருதப்பட்டு அது வினையின் ஒரு பகுதி யெனக் கொண்டிருத்தல்வேண்டுமென்பது என் கருத்து.

தெரிநிலைவினை.

தெரிநிலைவினையைத் **தன்வினை பிறவினை** என இருவகை யாகப் பிரித்தல்கூடும். அச்சொற்கள் சொன்மாத்திரத்தில் வட மொழியிலுள்ள ஆத்மனேபதம், பரஸ்மைபதம் என்றவற்றை ஒத்துள்ளன எனக் கருதி, தன்வினையும் ஆத்மனேபதமும் ஒன் றெனவும், பிறவினையும் பரஸ்மைபதமும் ஒன்றெனவுங் கூறினர் டாக்டர் கால்ட்வெல் [1]. வினையாற்குறிக்கப்படுஞ்செய்கை வினை முதலாற்செய்யப்படின் அது தன்வினையென்றும், வினைமுத லன்றி வேறொருவராற் செய்யப்படின் அது பிறவினையென்றுங் கொள்ளப்படுதலானும், வினையாற் படும் பயன் வினைமுதலைச்

(1) *C. D. G. 449*

சேரின் ஆங்கு ஆத்மனேபதமும், வினைமுதலன்றி வேறொருவரைச் சேரின் பரஸ்மைபதமும் வழங்கப்படுதலானும் அவர் கூற்றுப் பொருந்தா தென்க. உதாரணமாக, 'தச்சன் சிறுமாவையஞ் செய்தான்' என்றவிடத்து, 'செய்தான்' என்றது தன்வினை, ஏனெனில் அதனாற் குறிக்கப்படுஞ் செயல் அதன் வினைமுதலாகிய தச்சனிட மிருக்கின்றது. 'அரசன் மாளிகையைச் செய்வித்தான்' என்றவிடத்து 'செய்வித்தான்' என்றது பிறவினை, ஏனெனில் செய்வித்தான் என்றவிடத்துள்ள 'செய்' என்ற தாதுவினாற் குறிக்கப்படுஞ்செய்கை 'செய்வித்தான்' என்றதன் வினைமுதலாகிய அரசனிடம் இல்லை, தச்சன் முதலியோரிடமே இருக்கின்றது. வடமொழியில் 'ராம: கரோதி' என்ற வழக்கு, செயலின் பயன் இராமனைத் தவிர்த்து ஏனையோரிடஞ் செல்லுகின்றவிடத்தே உளது; 'ராம: குருதே' என்ற வழக்கு அதன் பயன் அவனிடஞ் செல்லுகின்றவிடத்தே உளது.

தன்வினை, பிறவினை என்ற குறிகளைத் தொல்காப்பியனார் வழங்காவிடினும்

இதுசெயல் வேண்டு மென்னுங் கிளவி
இருவயி னிலையும் பொருட்டா கும்மே
தன்பா லானும் பிறன்பா லானும் (தொல். சொல். 243)

என்ற சூத்திரத்திலுள்ள தன்பாலானும் பிறன்பாலானும் என்ற சொற்களாற் குறித்தனர் என்க. வீரசோழியவுரைகாரராகிய பெருந்தேவனார் தன்வினை பிறவினை இவற்றை முறையே கேவலதாது, காரிததாது இவற்றாற் குறிப்பர். நன்னூலார் பிறவினையை ஏவல்வினை என்பர். 1

தன்வினை எப்போழ்தும் செயப்படுபொருள்குன்றியவினையென்றும், பிறவினையும் செயப்படுபொருள்குன்றாவினையுமொன்றென்றும் வீரமாமுனிவரைத் தவிர்த்த தமிழ்மொழியிலக்கணவாசிரியர்கள் கூறினரென்று டாக்டர் கால்ட்வெல் கூறியது பொருந்தாக் கூற்றாகும். 2

(1) நன். 138. (2) C. D. G. 450 & 455.

பிறவினை யுண்டாம் விதம்.

தாதுவின் ஈற்றெழுத்தை இரட்டித்தும், ஈற்றயல்மெல்லினத்தை வல்லினமாக்கியும், காலவெழுத்தின் முதன்மெய்யை இரட்டித்தும், சாரியையின் மெய்யை இரட்டித்தும், தாதுவிற்கு 'த்து' என்ற சாரியைச் சேர்த்தும், தாதுவிற்கு வி, பி இவற்றிலொன்றைச் சேர்த்தும் ஆக ஐந்துவகையான் பிறவினை உண்டாகும். (உ-ம்.)

1. நீடிரும் பித்தை பொலியச் சூட்டி (பெரும்பாண். 482)
நாவா யோட்டிய வவ்வழி (புறநா. 126)

2. கோல் திருத்தி (புறநா. 17, 5)

3. வினை முடித்து (முல்லைப்பாட்டு, 19)
பற்றுவழிச் சேர்த்தி (சிலப். 337, 108)

3. நட்டவர் குடி யுயர்க்குவை (பத்து. 217, 131)
கைவேல் களிற்றொடு போக்கி (குறள் 774)

4. அதன்றுள் வாழ்த்தி (பத்து. 220, 222)

5. நயப்பித்தார் நல்காமை (குறள். 1190)
உருகுவித்தாலா ரொருவ ருருகாதாரே. (தேவா. 1229, 3)

'ஓட்டுவித்தாலா ரொருவ ரோடாதாரே' 'ஆட்டுவித்தாலாரொருவ ராடாதாரே' முதலிய இடங்களிலுள்ள, ஓட்டுவித்தல், ஆட்டுவித்தல் முதலியன ஈரேவலாகும். 'காட்டுவித்தாலா ரொருவர் காணாதாரே' என்ற இடத்திலுள்ள 'காட்டுவித்தல் மூவேவலாகும். காட்டுவிப்பித்தல் என்றது நாலேவலாகும். இவ்வாறு வடமொழி ஆங்கிலம் முதலியவற்றில் ஈரேவல், மூவேவல், நாலேவல் இவற்றைக் குறிக்கச் சொற்களைக் காணோம். இது தமிழ்மொழிக்குள்ள சிறப்புக்களில் ஒன்றாகும்.

சிலவிடங்களில் சிலவினைகள் உருவத்தில் தன்வினையாகவும் பொருளிற் பிறவினையாகவு மிருத்தல்கூடும். இதற்கு உதாரணமாகத் தொல்காப்பியனார் கூறும் 'இவ்வெனை வறியு மந்தந் தமக்கில' (தொல். சொல். 4) என்றவிடத்துள்ள அறியும் என்றதே ஆகும், அஃது அறிவிக்கும் என்ற பொருள் படுதலின். பிறவினை

யாக்கும் விகுதியாகிய 'வி' 'பி' இவை குறளுக்கு முன்னருள்ள இலக்கியங்களிற் பார்த்தவரை காணப்படவில்லை. அவை எவ்வாறு பிறவினையைக் காட்ட வந்திருத்தல்கூடு மெனின், பண்டையிலக்கியங்களில் வழங்கப்பட்ட கழிப்பி (பத்து. 236, 653), கோளுவி (பத்து, 353, 324) முதலிய சொற்களில் இடைநிலையாக வந்திருக்கும் பகரவகரங்களை வடமொழிச்சொற்களாகிய மாபித:, ஸ்ஹாவித: முதலிய சொற்களிலுள்ள பகரவகரங்களை யொத்தனவாகக் கருதி வந்திருக்கலாமோ வென்ற ஐயமுண்டாகின்றது. வடமொழியிலும் இகரம் பிறவினைப் பொருளைக் குறிக்குமே யன்றி பகரவகரம் குறிக்கா. அவை ஆங்கு இடைநிலையாகவே வந்துள்ளன.

அசைஇ, கவைஇ முதலிய வினையெச்சங்களில் பிறவினைப் பொருளைக் காட்டற்கு தாதுக்களின் ஈற்றெழுத்தாகிய 'ஐ' அளபெடுத்தது என்பர் சிலர். ஆங்கு ஈற்றிலுள்ள இகரம் ஐகாரத்தின் அளபெடையன்று, உறங்கி, பாடி முதலிய வினையெச்சவீற்றினைப் போன்ற வினையெச்சமாக்குங் குறியே என்பது என் கருத்து. அவை சில விடங்களில் பிறவினைப்பொருளில் வருகின்றனவே யெனின், உருவத்தில் தன்வினையாகவும் பொருளிற் பிறவினையாகவும் இருத்தல் தமிழ்மொழியினது சிறப்பென மறுக்க. அவ்வாறாயின் கோளீஇ, நிறீஇ, அறீஇ, இரீஇ முதலியன பிறவினையாவது எவ்வாறெனின், கொள், நில், அறி, இரு முதலிய தாதுவின் பின்னர் வந்த 'ஈ' என்ற துணைவினையா லென்க. 'ஈ' என்றது துணைவினையாய் வருதல் பல விடங்களிலுங் காணலாம்.

(உ-ம்) சொல்லுருத்தீவாயே (கலித். II 420, 19);
வந்தீயான்கொல் (கலித். II 429, 10)

'ஈ' போன்று 'தரு', 'வரு' என்ற தாதுக்களும் துணைவினையாய் வருதல் காணலாம்.

(உ-ம்) திரி தரு...... (திருமுரு. 1, 1)
சிதைதர (பரிபா. 76, 48)
வந்தீத்தந்தாய் (கலித். II 583, 4)

## தன்வினை, பிறவினை இவற்றின் பாகுபாடு.

*தன்வினை, பிறவினை இரண்டும் முற்றாகவும் எச்சமாகவும் இருத்தல் கூடும். முற்று வினைநிலையுரை[1] வியங்கொளவருதற்கண்ணும்[2] ஏவுதற்கண்ணும்[3] நிகழுலாகும்.

வினைநிலை யுரைக்கும் முற்று, செய்வினையாகவும் செயப்பாட்டுவினையாகவுமிருத்தல் கூடும். ஒவ்வொன்றும் விதியிலும் எதிர்மறையிலும் வருதல் இயலும். வினைநிலையுரைக்கும் வினையும், எச்சவினையும் மூன்று காலத்தைக் குறிக்கும். ஏவல்வினையும் வியங்கோள்வினையும் ஒரு காலத்தினையே குறிக்கும்.

வினைநிலை யுரைக்குந் தன்வினையில் மூன்று பகுதிகள் உள: அவை செயலைக் குறிப்பதும், காலத்தைக் குறிப்பதும், இடத்தைக் குறிப்பதும், ஆம். செயலைக் குறிக்கும் பகுதி போ, நில் போன்ற தாதுவே; இடத்தைக் குறிப்பது போயினன், போனான், போயினள், போனாள் என்றவற்றிலுள்ள அன், ஆன், அள், ஆள், முதலியன. காலத்தைக் குறிக்கும் பகுதியைக் கூறாதுபோயினர் ஆசிரியர் தொல்காப்பியனார். அதற்குக் காரணம் 'வருதி' போன்ற சொற்கள் நிகழ்காலத்தில் புறநானூறு முதலிய நூல்களில் வழங்கியதே யாகும். ஆயினும் இறந்தகாலம் எதிர்காலப்பொருளில் வரும், எதிர்காலம் இறந்த காலப்பொருளில் ஒருபயனோக்கி வரும் என அவரே கூறுதலின், காலத்தைக் காட்டுங் குறி ஏதேனும் இருந்திருத்தல் வேண்டும். பின்னர் வந்த இலக்கணக்காரர்கள் அதனைப்பற்றி விரிவாய்க் கூறினர். இடத்தைக் குறிக்கும் விகுதியைப்பற்றிக் கூறி அதன் பின்னர் அது கூறப்படும்.

### இடவிகுதிகள்.

தொல்காப்பியர்காலம்

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| தன்மை. | என், ஏன், அல், கு, டு, து, று. | அம், ஆம், எம், ஏம், கும், டும், தும், றும். |
| முன்னிலை. | இ, ஐ, ஆய், ஓய். | இர், ஈர், மின். |

(1) *Indicative mood* (2) *Optative mood* (3) *Imperative mood*

படர்க்கை.

| | |
|---|---|
| ஆண்பால். | அன், ஆன், ஒன். |
| பெண்பால். | அள், ஆள், ஒள். |
| ஒன்றன்பால். | டு, து, று. |
| பலர்பால். | அர், ஆர், ஓர், ப, மார். |
| பலவின்பால். | அ, ஆ, வ. |

பிற்காலம்

| | | |
|---|---|---|
| தன்மை. | என், ஏன், அல், அன், கு, டு, து, று. | அம், ஆம், எம், ஏம், ஏங்கள், ஓம், கும், டும், தும், றும். |
| முன்னிலை. | இ, ஐ, ஆய், ஓய். | இர், ஈர், ஈர்கள், மின், மின்கள், உங்கள். |

படர்க்கை.

| | |
|---|---|
| ஆண்பால். | அன், ஆன், ஒன். |
| பெண்பால். | அள், ஆள், ஒள். |
| ஒன்றன்பால். | து, று. |
| பலர்பால். | அர், ஆர், ஓர், ஆர்கள், ப, மார். |
| பலவின்பால். | அ, ஆ. |

என், ஏன்.

இவ்விரண்டனுள் சங்கவிலக்கியங்களுள் 'என்' என்றதே விகுதியாக வழங்கப்பட்டுளது. அஃது எப்போதும் தன்முன் 'அன்' சாரியையைப் பெற்றுளது. (உ-ம்)

கண்டனென் (புறநா. 23, 17)
வந்தனென் ( ,, 158, 20)

பிற்காலத்தில் 'ஏன்' விகுதியே பெரும்பாலும் வழங்கப்படுகின்றது. (உ-ம்)

உகந்தேன் நான் (பெரியதிரு. 169, 4)
நின்னடைந்தேன் நான் ( ,, 169, 5)

சிலவிடங்களில் 'என்' விகுதி சாரியையின்றியும் வழங்கப்பட்டுளது. (உ-ம்)

காப்பென் (கம்பரா. அயோத். 232, 28)

அல்.

இவ்விகுதி துணிவுப்பொருளில் வருமென்பர் வீரசோழிய வுரைகாரர்[1]. இது தன்முன் பகரவகரங்களுள் ஒன்றனைக் கொண்டு எதிர்காலத்தில் வருமென்பர் சேனவரையர். 'உண்ணு நிற்பல்' போன்ற இடங்களில் நிகழ்காலத்தும் வருமென்பர் நச்சினார்க்கினியர்.

கண்டனென் வருவல் (புறநா. 23, 17)
உவகையொடு வருவல் ( ,, 165, 14)

முதலியவிடங்களில் அது இறந்தகாலத்தும் வந்துளது. எல்லா விடத்தின்கண்ணுந் துணிவுப்பொருளிருத்தலின் பெருந்தேவனார்[2] கொள்கையே சிறக்குமென்பது என் கருத்து.

அன்.

ஆசிரியர் தொல்காப்பியனார் இதனை ஒரு விகுதியாகக் கூற வில்லை. ஆயினும்

உரைத்தனன் யான் (புறநா. 136, 22)
யானும்.........வந்தனன் ( ,, 154, 7)
செய்குவன் தவமென (மணிமே. 50, 182)

என்ற வழக்கினை நோக்கி வீரசோழியவாசிரியர் பன், வன் இவற்றை விகுதியாகக் கொண்டனர்போலும். அவற்றுள்ள பகரவகரங்கள் காலத்தைக் குறிக்குமெனக் கருதி நன்னூலார் 'அன்' என்றதை விகுதியாகக் கூறினர். இலக்கணவிளக்கநூலார் 'அன்' எதிர்காலத்தில்தான் வருமென்பர். முற்கூறப்பட்ட 'உரைத்தனன்' முதலியவற்றை நோக்கின், அஃது இறந்தகாலத்தும் வரும் என்றது புலப்படுகின்றமையின் வீரசோழியவாசிரியர் கூற்றே சிறக்கும்.

இவ்வன்னின் உற்பத்தியை மூவகையாகக் கூறலாம். பேசுவோன், அடக்கம் முதலியவற்றைக் காட்ட நினைத்து, தன்னைப் படர்க்கையில் கூறியிருத்தல் கூடும். சின்னாட் பின்னர் அது தன்மைவிகுதியெனக் கொண்டிருத்தல் கூடும். குழவிகள் தன்மைச்சொல்லை யுணர்த்த வெகுநாளாகின்றமை யின் தமிழ்மொழியின் தொடக்கக்காலத்தில் படர்க்கை, தன்மை

(1) வீரசோ. கிரி. 10 உரை. (2) வீரசோழியவுரைகாரர்.

இரண்டினும் அன் விகுதி இருந்திருத்தல் கூடும். அன்றியும் ஆன், இன் என்ற வேற்றுமையுருபுகள் எவ்வாறு ஆல், இல் என மாறினவோ, அவ்வாறு அல்விகுதி தடுமாறுபுணர்ச்சியான் அன் விகுதியாக மாறியிருத்தலுங் கூடும்.

கு, டு, து, று.

இவற்றுள் டு, து, று தன்மையொருமைக்குமாத்திரம் விகுதியாயிராவாய், படர்க்கையொருமைக்கும் விகுதியாயுள் ளன. அன்றியும் இவற்றின் முன்னர் காலத்தைக் குறிக்கு மெழுத் தில்லை. உண்டேன், தந்தேன், சென்றேன் முதலிய வற்றிலுள்ள 'ஏன்' விகுதி குன்றி, உண்டு, தந்து, சென்று என ஒருகால் வழங்கப் பின்னர் டு, து, று இவற்றை விகுதி யாகக் கொண்டிருத்தல்கூடும். என், ஏன் இவற்றின் பொருளை யாது குறிக்குமெனின், அவ்வினைகளுக்கு எழுவாயாய் வழங்கப் படும் யான், நான் என்பன என்னலாம். இவ்வாறு மலையாளத் தில் இன்றும் வினைகள் வழங்குதலைக் காணலாகும். 'உண்கு' போன்றதும் 'உண்கேன்' போன்ற வினையிலுள்ள ஏன் குன்றி, ஆயிருத்தல்கூடும்.

உண்கு, உண்டு, வந்து, சேறு என்பன எதிர்காலத்தைக் குறிக்குமென இளம்பூரணர் சேனாவரையர், இலக்கணவிளக்க வாசிரியர் இம்மூவரும், 'று' 'து' இவ்விரண்டும் இறந்த காலவெதிர்காலங்களையும், 'டு' இறந்தகாலத்தையும், 'கு' எதிர்காலத்தையுங் குறிக்குமென நன்னூலாரும், நான்கும் பெரும்பான்மையும் எதிர்காலத்தின்கண் வருமென நச்சினார்க் கினியருங் கூறுவர்.

அம், ஆம், எம், ஏம், ஏங்கள், ஓம்.

இவற்றுள் முதற் கூறப்பட்ட நான்கும் எக்காலத்தும் வழங்கப்படும். 'ஏங்கள்', 'ஓம்' என்பன பிற்காலத்தின் கண்ணே வழங்கப்படுகின்றன. 'வந்தோம்' என்றது 'வந் தோன், வந்தோள், வந்தோர்' முதலியவற்றை நோக்கி ஒற் றுமைப்போலியான் வழங்கியிருத்தல்வேண்டும்.

இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் இம்மூவ ரும் "அம், ஆம் என்பன முன்னின்றாரை உளப்படுக்கும்,

தமராயவழி படர்க்கையாரையும் உளப்படுக்கும்; எம் ஏம் என்பன படர்க்கையாரை உளப்படுக்கும்"[1] என்பர். நன்னூலார் அவர்களோடு உடன்படுவதுமன்றி, ஓம் என்றதனை எம், ஏம் இவற்றோடு கூட்டியுமுரைத்தனர். இலக்கணவிளக்க நூலார் நன்னூலாரோடு உடன்பட்டனர். வீரசோழியவாசிரியர் 'எம்' விகுதியைக் கூறவில்லை. இவ்வாறு அவர்கள் கூறியதற்குப் பின்வரும் வழக்குச் சான்றாகும்.

பயில் பூந்தண்டலைப் படர்குவம் (சிலப். 258, 67)
ஏவல் செய்துணைவரேம் யாங்கள் (கம்பரா. கிட். 175, 14)
வரிக்குக் கூறுசெய்வார்களுக்குஞ் சொன்னோம்
(S. I. J. III. i. 44, 5)

தற்போது பேச்சுவழக்கில் ஓம், ஏங்க, ஓங்க இவைதான் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவற்றுள் ஏங்க, ஓங்க இவை ஏங்கள், ஓங்கள் இவற்றின் திரிபாகும். இவ்வழக்கை வின்ஸான் கூறுவர்.

கும், டும், தும், றும்.

ஒருமை விகுதிகளெனக் கருதப்படும் கு, டு, து, று இவற்றோடு பன்மை விகுதியாகிய மகரஞ்சேர, இவை தன்மைப் பன்மை விகுதியாயின.

இ, ஐ, ஆய், ஓய்.

இவற்றுள் முதற்கூறப்பட்ட இரண்டுமே சங்கவிலக்கியங்களில் மிகுதியாய் வழங்கப்பட்டன. பிற்காலத்தில் 'ஆய்' விகுதிதான் மிகுதியாய் வழங்கப்படுகின்றது. ஓய் விகுதியும் இலக்கியங்களில் வழங்கப்படுகின்றது.

வீரசோழியவாசிரியர் 'ஆய்' விகுதி ஒன்றனை மாத்திரங் கூறுகின்றார்.

இர், ஈர், ஈர்கள், மின்கள், உங்கள்.

இர், ஈர், இரண்டும் எல்லாக் காலத்து இலக்கியங்களிலுங் காணப்படுகின்றன. இரட்டைப்பன்மைவிகுதியாகிய 'ஈர்கள்'

(1) தொல். சொல். 202, சேனா.

மின்கள் பிற்காலத்து வழக்கில் வந்தன. பேச்சுவழக்கில் இர் மிகுதியாக இல்லை; ஈர் உயர்த்திக்கூறும் முன்னிலையொருமையிலும் ஈர்கள், ஈங்கோ, ஈங்க என்பன பன்மையிலும் பேச்சுவழக்கில் இருக்கின்றன. பின்னருள்ள மூன்றும் உயர்த்திக் கூற ஒருமையிலும் வழங்கும். 'வந்தீங்க' என்றது 'வந்தீமோ' முதலிய வினைகளுக்குக் கள்விகுதி சேர்த்து உண்டாகிய 'வந்தீங்கள்' என்றதன் திரிபாயிருத்தல்கூடும்; 'கேண்மின்கள்' என்றது 'கேளுங்கள்' என இக்காலத்தில் மாறியது காண்க.

**அன், ஆன், ஓன்.**

*தெரிநிலைவினையில் பெரும்பாலும் அன் விகுதிக்கு முன்னர் 'அன்' சாரியை வரும்.*

(உ-ம்.) அட்டனன் (புறநா. 78, 12)
உளன் (புறநா. 86, 3)

'ஓன்' விகுதி இலக்கியத்திலே வழங்கப்பட்டுளது.

(உ-ம்.) உறந்தையோனே (புறநா. 68, 18)

வீரசோழியவாசிரியர் 'ஆன்' விகுதியைமாத்திரங் கூறினர். நன்னூலார் முதலியோர் தொல்காப்பியனார் கூறியவாறே கூறினர். இக்காலத்தில் பேச்சுவழக்கில் 'ஆன்' விகுதி ஒன்றேயுளது.

**அள், ஆள், ஓள்.**

அன், ஆன், ஓன் இவற்றிற்குக் கூறியதே அள், ஆள், ஓள் இவற்றிற்கு மொக்கும்.

**அர், ஆர், ஓர், ப, மார், ஆர்கள்.**

முதற்கூறப்பட்ட ஐந்தும் எல்லாக்காலங்களிலும் வழங்கப்பட்டன. 'ஆர்கள்' பிற்காலத்தே வழங்கப்பட்டுளது. 'ஓர்' இலக்கியத்தில்தான் காணப்படும். 'மார்' என்றது 'ஆர்கள்' போன்றே இரட்டைப்பன்மை விகுதியென்பர் வின்ஸான். எனக்கும் அஃது உடன்பாடே. வீரசோழியவாசிரியர் ஆர், ஆர்கள் இவற்றைமாத்திரங் கூறினர். பின்வந்தோர் தொல்காப்பியனாரோடு உடன்பட்டனர். நாட்டுப்புறத்தார், 'வந்தார்கள்'

எனக் கூறாது, 'வந்தாங்க' என்கின்றனர். 'வந்தீங்க' என முன்னிலையில் வழங்குதலான் அதனை நோக்கி ஒற்றுமைப் போலியான் அவ்வாறு வந்திருத்தல்கூடும்.

து, று.

து, று இரண்டும் இறப்பு, எதிர்வு இரண்டன்கண்ணும் வருமென்பர் நன்னூலார். 'து' முக்காலத்தின்கண்ணும், 'று' இறப்பின்கண்ணும் வருமென்பர் சேனாவரையர், நச்சினார்க்கினியர் இருவரும்.

டு.

இது குறிப்புவினையின்கண் வருமென்பர் சேனாவரையரும், நச்சினார்க்கினியரும்.

அ, ஆ, வ.

பெரும்பான்மையும் அகரவிகுதியின் முன்னர் 'அன்' சாரியை வரும். (உ-ம்)

பரைந்தன (புறநா. 4, 3)
மருப்புப் போன்றன ( ,, 4, 4)

சிறுபான்மை சாரியையின்றியும் வரும். (உ-ம்)

தோன்றுவ ( ,, 4, 5)

'ஆ' விகுதி எதிர்மறையில்தான் வருமெனத் தோற்றுகின்றது. ஆசிரியர் தொல்காப்பியனாரே

உயிர்மெய் யல்லன மொழிமுத லாகா (தொல். எழுத். 60)

என்ற சூத்திரத்தில் வழங்கினர்; ஆயினும் வெளிப்படையாய் அஃது எதிர்மறையிற்றான் வருமென அவர் கூறிற்றிலர். நன்னூலார் தான் [1] முதன்முதலில் அது எதிர்மறையில் வருமென்றனரெனத் தோற்றுகின்றது. இலக்கணவிளக்கநூலார் அவரைப் பின்பற்றினர். வீரசோழியவாசிரியர் ஆ, வ என்பவற்றைக் கூறாது 'அன' என்றதை விகுதியாகக் கூறினர். ஆங்கு 'அன்' சாரியையுஞ் சேர்த்துக் கூறினர்போலும்.

(1) நன். 329.

ஏங்கள், ஈர்கள், உங்கள், ஆர்கள்.

ஈண்டு 'கள்' விகுதி எவ்வாறு வந்ததெனை ஆராய்தற் குரியது. அஃது அஃறிணைப்பெயரில்மாத்திரம் வருமென்பது ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியுள்ளா ரென முன்னரே அறிவிக்கப்பட்டது. அது பின்னர் ஒற்றுமைப்போலியான் உயர்திணைப்பெயர்க்கும் வரவே, யாங்கள் முதலிய வழக்கு சிலப்பதிகாரம் முதலிய நூற்களிற் பரவின. அதன்பின்னர் வினையின் உருவத்தோடு மாறுபடாத வினையாலணையும்பெயர்க் கண் வந்திருத்தல் கூடு மென்றதற்கு

சொல்மாலை சோல்லுவார்கள்......நெடுங்காலம் வாழ்வாரே
(பெரியதிரு. 135, 10)

முதலிய அடிகள் சான்றாகும். பின்னர் வினையிலும் வந்திருத் தல் கூடும்.

ஈண்டு மற்றொருசெய்தி நோக்கற்பாலது. தெலுங்கு, கன்னடம் இம்மொழிகளில் 'கள்' விகுதிக்கேற்ப முறையே 'லு' 'ம்ளு' 'ம்ள்' என்றிருக்கின்றன. அவை பெரும்பாலும் அஃறிணையையொத்த பெயர்களிலும், சிறுபான்மை உயர் திணையையொத்த பெயர்களிலும் வருவதுடன், வினையில் வாரா. ஆகலின் அவ்விருமொழிகளும் தமிழ்மொழியிலிருந்து பிரிந்த காலம் வரைதற்கு இஃதொரு சான்றாகும். சிலப்பதிகாரம், மணிமேகலை இவற்றின் காலத்திற்குப் பின்னரும், தேவாரம் நாலாயிரப்பிரபந்தம் இவற்றின் காலத்திற்கு முன்னரும் அஃ தாகும்.

வினைவிகுதிகள் அன், ஆன் முதலியனவாகக் கூறினர்; காலவிடைநிலைகளைக் கூறிற்றிலர். வீரசோழியவாசிரியர் தான், தாள், கின்றான், கிறான், கிறாய், கிறேன் முதலியவற்றை விகுதி யாகக் கூறினர். அவ்வாறு கூறுதற்குக் காரணம் வடமொழியில் வினைவிகுதியொன்றே காலத்தையும் இடத்தையுங் குறிக்கின்ற தாகக் கருதப்படுதலேயாகும். நன்னூலார் 'கிறான்' முதலிய வற்றைக் 'கிறு', 'ஆன்' முதலியனவாகப் பிரித்து முன்னுள்ள வற்றைக் காலவிடைநிலையென்றும் பின்னுள்ளவற்றை விகுதி எனவுங் கூறினர்.

பிரயோகவிவேகநூலார் வினையைப்பற்றிக் கூறும்போது வடமொழிக்கொள்கைகள் எல்லாவற்றையும் புகுத்திக் கூறினர். ஆங்கு வினைவிகுதிகள் 'ஆத்மனேபதம்' 'பரஸ்மைபதம்' என இருவகைப்படும். சாத்தன் வந்தான், சாத்தனால் அடிக்கப்பட்டான், சாத்தனாற் செல்லப்படுகை என்பன முறையே கர்த்தரிப்ரயோகம், கர்மணிப்ரயோகம், பாவேப்ரயோகம் எனக் கூறப்படும். 'அடதி' என்ற வடமொழி வினையில் 'அட்' என்றது தாதுவாகும்; 'தி' வினைவிகுதியாகும்; 'அ' விகரணமாகும். அவ்வாறு தமிழ்மொழியிலுஞ் சில விகுதிகள் ஆற்பனேபத விகுதிகளெனவும், சில பரப்மைபதவிகுதிகளெனவும், செய்வினை வழக்கைக் கர்த்தரிப்ரயோகமெனவும், செயப்பாட்டுவினைவழக்கைக் கர்மணிப்ரயோகமெனவும், தமிழ்வழக்கே யல்லாத 'சாத்தேன மம்யதே, என்ற வடமொழித்தொடர்க்கு மொழிபெயர்ப்பான 'சாத்தனாற் செல்லப்படுகை' என்றதைப் பாவேப்ரயோகமெனவும், உண்ணப்படும், உண்ணாநின்றான் என்றவிடத்து ணகரப்புள்ளியின் பின்னருள்ள அகர ஆகாரங்களை விகரணமெனவுங் கூறிப்போந்தார். இவ்வாறு கூறுதல் தமிழ்வழக்கிற்கு முற்றப் பொருந்தாதெனக் கூறலாம்.

காலமும் காலவிடைநிலைகளும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் காலம் மூவகைப்படுமெனவும் சிலபயன் கருதி இறந்தகாலம் எதிர்காலப்பொருளினும், எதிர்காலம் இறந்தகாலப்பொருளினும், நிகழ்காலம் எதிர்காலப்பொருளினும் வரும் என்றுங் கூறினர். ஆயினும் காலவிடைநிலையைப்பற்றிக் கூறிற்றிலர். அதற்குக் காரணம் காலவிடைநிலையில்லாமலும் வினைகள் காலத்தைக் குறித்தல் கூடும். உதாரணமாக 'புக்கான்' என்றது இறந்தகாலத்தைக் குறிக்குமெனவும், செய்யும் என்றது நிகழ்காலத்தைக் குறிக்குமெனவும் தொல்காப்பியத்தானும், சங்கவிலக்கியங்களானும் அறியப்படும். ஆயினும் ஆங்குக் காலவிடைநிலையில் வீரசோழியவாசிரியர் இறந்தகாலப்பெயரெச்சத்தைக் குறிக்க, த, ன, ய என்பனவும், நிகழ்காலப்பெயரெச்சத்தைக்குறிக்க, கிற, ஆநின்ற என்பனவும், எதிர்காலப்பெயரெச்சத்தைக் குறிக்க, கும், உம், ம் என்பனவும் வருமென்பர், நன்னூலார் அவற்றைக் காலவிடைநிலையாகவும்,

விகுதியாகவும் பிரித்து, த், ட், ற், இன் இவற்றை இறந்தகால விடைநிலையாகவும், கிறு, கின்று, ஆநின்று இவற்றை நிகழ்கால விடைநிலையாகவும், ப், வ் இவற்றை எதிர்காலவிடைநிலையாகவுங் கொண்டனர்.

புணர்ச்சியில் தகரப்புள்ளியே டகரப்புள்ளியாகவும் றகரப் புள்ளியாகவும் மாறுதலின், த், ட், ற், இன் இவை நாலுக்கும் பிரதியாக 'த், இன்' இவ்விரண்டனையுமே நன்னூலார் கூறியிருப்பின் சாலுமென்பது என் கருத்து.

'இன்' என்றது எவ்வாறு இறந்தகாலவிடைநிலையாக வந்தது என்று ஆராய்தற்குரியது. அவ்விகுதி குற்றியலுகரத்தினை ஈற்றிற்கொண்ட தாதுவிற்கே சேர்க்கப்படுகின்றன.

(உ-ம்) உறங்கின, அடங்கின

ஈண்டு அடங்கின என்றது பண்டைக்காலத்தில் அடங்கிய என்றிருத்தல் கூடுமென்றது

'அடக்கிய' (புறநா. 6, 25)

முதலிய வழக்கால் அறியப்படும். ஆங்கு 'அடக்கு' என்றவிடத்துள்ள குற்றியலுகரம் யகரத்தின் முன்னர் இகரமாயிற்று. பிறகு 'போனான்' முதலிய உருவங்களைப் பார்த்து 'அடக்கிய' என்றதும் 'அடக்கின' என்று ஒற்றுமைப்போலியான் ஆயிருத்தல்கூடும். ஆகலின் குற்றியலுகரத்தின் மரூஉவான இகரம் இறந்தகாலத்தைக் காட்டும் னகரத்தோடு சேரப் பின்னர் 'இன்' என்றதே காலவிடைநிலையெனக் கருதப்பட்டதென்னலாம்.

இறந்தகாலம் காலவிடைநிலை யில்லாது சிலவிடங்களிற் குறிக்கப்படும். தாதுவின் ஈற்றெழுத்து இரட்டிக்குமிடத்து, வினை இறந்தகாலத்தைக் காட்டும்.

(உ-ம்.) புகு — புக்கனர்

புக்கனர் முதலிய வழக்கு பிற்காலத்தில் இறந்துபட, அவற்றினிடத்திற் புகுந்தனர் முதலிய வழக்கு வந்துவிட்டது.

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் இம்மூன்றனுள் முதன்முதலில் மக்களிடத்து இறந்தகாலமே வழங்கியிருத்தல் வேண்டும். ஏனெனின் முன்னிகழ்ந்தனவற்றைப் பிறரிடம் அறிவிக்க மக்கட்கு அவா உண்டு; தற்போதுள்ளதைப் பிறர் நேரில் காண்கின்றமையின், அதனை ஒருவர் மற்றொருவருக்குச் சொல்வகையான் உணர்த்தவேண்டிய நியதியில்லை; வருங் காலத்தைப்பற்றி நினைத்தல் மக்களுக்குப் பிற்காலத்துத்தான் உண்டாதல்கூடும். குழவிகள் வருங்காலத்தைப்பற்றி உணர் கின்றனவல்ல. அவ்வாறுதான் உலகம் படைக்கப்பட்டகாலத் தும் மக்கள் இருந்திருத்தல்கூடும். ஏவலைக் குறிக்கும் வினை ஒருவாறு எதிர்காலத்தைக் குறிக்குமென்னலாம்.

நிகழ்காலவிடைநிலைகள்.

செய்கிறான், செய்கின்றான், செய்யாநின்றான் முதலிய வழக்கு பெரும்பாலும் சங்கவிலக்கியங்களில் இல்லை. பரி பாடலில் 'சேர்கின்ற' (பக். 163, 35) என்ற ஒருசொல் காணப் படுகின்றது. 'என்கின்றான்' 'பற்றுநின்றானை' முதலிய வழக்கு தேவாரத்திற் காணப்படுகின்றன. உண்ணுநின்றான், உண்ணுகிடந்தான், உண்ணுவிருந்தான் என்பன உண்ணு நின் றான், உண்ணு கிடந்தான், உண்ணு இருந்தான் என இருசொற் களை என்பர் பெருந்தேவனார். ஆகலின் அவற்றை ஒரு சொல் லாகக் கருதி 'ஆநின்று' என்றதைக் காலவிடைநிலையாகக் கொண்டனர்போலும் நன்னூலார். அவ்வாறாயின் உண்கிறான், உண்கின்றான் என்பன எவ்வாறு வழக்கில் வந்தன என்பது ஆராய்தல்வேண்டும். புறநானூற்றில் 'ஆகின்று' என்றது முற்றுவினையாக வழங்கப்பட்டுளது. (உ-ம்.)

பெண்ணுருவு ஒரு திறனாகின்று (புறநா. 1, 7)
பிறைநுதல் வண்ணமாகின்று (புறநா. 1, 9)

ஈண்டு 'ஆ' என்றதைத் தாதுவாகவும், கு, இன் இவற்றைச் சாரியையாகவும், 'று' என்றதை ஒன்றன்பால் விகுதியாகவுங் கொள்ளவேண்டும். 'ஆகின்றான்' என்றது 'ஆகின்று' என்ற தற்கு ஆண்விகுதி சேர்த்து ஆயிருத்தல் கூடுமோ? டாக்டர் க்ரால்,[1] டாக்டர் குண்டர்ட்,[2] வின்ஸான் மூவரும் 'கின்று' என்

(1) *Dr. Graul.* (2) *Dr. Gundert*

றது வருங்காலத்தைக் காட்டும் 'கு' வ்வும், தற்போதைக் காட்டும் 'இன்று' என்ற சொல்லுஞ் சேர்ந்துவந்தன என்பர்.

காலம் மூன்றெனக் கொள்ளாது ஏழெனக் கொள்ளுதல் பெருநலம் விளைவிக்குமெனவும், அவை இறப்பிலிறப்பு, இறப்பில் நிகழ்வு, இறப்பிலேதிர்வு, நிகழ்விலிறப்பு, நிகழ்வில் நிகழ்வு, நிகழ்விலேதிர்வு, எதிர்காலமெனவும், அவற்றிற்கு முறையே செய்திருந்தான், செய்திருக்கிறான், செய்திருப்பான், செய்யாநின்றான், செய்யாநிற்கிறான், செய்யாநிற்பான், செய்வான் என்பன உதாரணமாகுமெனவுங் கூறுவர் வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார். அவ்வாறு கூறியது ஆங்கிலத்தைப் பின்பற்றியோ என்ற ஐயமுண்டாகின்றது. ஏனெனின் செய்யாநிற்கிறான், செய்யாநிற்பான் என்ற வழக்கு தமிழ்மொழியில் இல்லை எனத் தோன்றுகின்றது. ஆயினும் காலத்தை மூன்றுக்கு அதிகமாகக் கொள்ளல்வேண்டுமென்பது உண்மையே. பின்வரும் வழக்கினை நோக்குவோம்:—

1. நான் சென்றபோது அவன் அதைச் செய்திருந்தான்.
நான் சென்றபோது அவன் அதைச் செய்துகொண்டிருந்தான்.
2. அவன் அதைச் செய்திருக்கிறான்.
3. அவன் அதைச் செய்கின்றான் (செய்யாநின்றான்).
4. அவன் அதைச் செய்துகொண்டிருக்கின்றான்.
5. அவன் அதைச் செய்வான்.
6. நான் செல்லும்போது அவன் அதைச் செய்துகொண்டிருப்பான்.
7. நான் செல்லும்போது அவன் அதைச் செய்திருப்பான்.

ஈண்டு, செய்திருந்தான், செய்துகொண்டிருந்தான், செய்திருக்கிறான் இம்மூன்றனும் இறந்தகாலச்செய்கை கூறப்படுகின்றது. முன்னிரண்டனையும் முறையே இறப்பிலிறப்பிற்கும், இறப்பில் நிகழ்விற்கும் உதாரணமாகவும், மூன்றாவதனை நிகழ்வில்இறப்பு என்றதற்கு உதாரணமாகவுங் கொள்ளலாம். செய்கின்றான், செய்துகொண்டிருக்கின்றான் இரண்டனையும் முறையே நிகழ்விற்கும், நிகழ்வில்நிகழ்விற்கும் உதாரணமாக்கலாம். செய்வான், செய்துகொண்டிருப்பான், செய்திருப்பான் மூன்றனை

யும் எதிர்வு, எதிர்வில்நிகழ்வு, எதிர்விறப்பு இவற்றிற்கு முறையே உதாரணமாகக் கொள்ளல் தகும்.

மறைச்செய்வினை.

ஆசிரியர் தொல்காப்பியனார் மறைச்செய்வினை யுண்டென்பதை

வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல்
எதிர்மறுத் துணர்த்தற் குரிமையு முடைத்தே
(தொல். சொல். 224)

என்ற சூத்திரத்தாற் குறித்தனர்.

மறைச்செய்வினை ஐவகையாக நிகழும்; அவையாவன :—

1. தாதுவிற்கும் வினைவிகுதிக்கும் இடையில் 'அல்' வருதல்.

(உ-ம்.) செல்லலம் (செல்-ல்-அல்-அம்) (புறநா. 101, 1)
அறியலன் (அறி-ய்-அல்-அன்) (புறநா. 239. 9)

2. காலவிடைநிலைக்கும் வினைவிகுதிக்கும் இடையில் 'அல்' லேனும் 'இல்' லேனும் வருதல்.

(உ-ம்.) சிறந்தன்று (சிற-ந்-த்-அல்-று) (புறநா. 75, 5)
உரைத்திலன் (உரை-த்-த்-இல்-அன்)
(பெரியதிருமொழி 205, 12)
கண்டிலேன் (காண்-ட்-இல்-ஏன்)
(பெரியதிருமொழி 202, 2)

3. செய்வினைமுற்றின் பின்னர் விகுதியேற்ற அல் வருதல்,

(உ-ம்.) முயங்கினேனல்லேன் (புறநா. 19, 7)
செல்வேமல்லேம் ( ,, 36, 11)
ஒல்லானல்லன் ( ,, 97, 21)

4. தாதுவிற்கும் காலவிடைநிலைக்கும் இடையில் 'ஆ' காரம் வருதல்.

(உ-ம்.) ஆகாது (தொல். எழுத். 71)
முதலாது ( ,, 65)
பேணாது (தேவா. 2, 6)

5. தாதுவிற்குக் காலவிடைநிலையைச் சேர்க்காது, நேரில் வினைவிகுதியைச் சேர்த்தல்.

(உ-ம்.) காணேன் (புறநா. 71, 5)
ஒல்லாய் ( ,, 31, 6)
ஒல்லான் ( ,, 78, 9)
வையார்களே (பெரிய திருமொழி, 204, 10)
வாரேம் (புறநா. 145, 4)

வீரசோழியவாசிரியர் ஆன், ஆள், ஆர், ஆர்கள், ஆது, ஆ. இலன், இலள், இலர், இலர்கள், இலது, இல, அதோளி இவை வினைக்குப்பின் தடைப்பொருளைக் குறிக்கச் சேர்க்கப்படுமென்பர். தன்மைமுன்னிலைவிகுதிகளையும், அலேன், அலை, அலன், அலர் முதலியவற்றையும் ஏன் அவர் கூறிற்றிலர் என்பது விளங்கவில்லை. அந்நூலுரைகாரர் ஆன் முதலிய ஆறும் எதிர்காலத்து வருமெனவும், ஏனையாறும் தகரத்தின் பின்வரின் இறந்தகாலத்தும், ககரத்தின் பின்வரின் நிகழ்காலத்தும் வருமெனவும், கூறுவர்.

நன்னூலாரும் இலக்கணவிளக்கநூலாரும் 'ஆ' எதிர்மறையில் வருமென்றுமாத்திரங் கூறிப் போயினர். இலக்கணக்காருள் வீரமாமுனிவரே, தாதுவிற்கு நேரில் வினைவிகுதியைச் சேர்த்தும், ஒன்றன்பாலில் 'ஆது' என்றதைச் சேர்த்தும் மறைவினையாக்கப்படுமெனக் கூறினர்.

தற்காலத்து, செய்யாய், செய்யீர் முதலிய முன்னிலைமுற்றுக்களும் செய்யா, உண்ணு முதலிய எச்சங்களும் விதி, மறை இரண்டிடத்தும் ஒரே உருவத்துடன் இருக்கின்றன. இலக்கணக்கொத்தாசிரியர் 'வல்லார் திறை கொடுப்பர்' முதலிய விடங்களில் 'வல்லார்' போன்றது விதிப்பொருளிலும் மறைப்பொருளிலும் வருமென்பர். இவற்றை ஆழ்ந்து நோக்கின், அவை விதிவினையா மறைவினையா என்றது வழங்குமிடத்தானும், ஒலிக்கும்வகையானுமே அறிதல் வேண்டுமென்றது வெளிப்படை.

விதிச்செயப்பாட்டுவினை.

இவ்வகையை இலக்கணக்கொத்தாசிரியர் கூறியுள்ளார். தொல்காப்பியனார் வாயாற் கூறவில்லை. ஆயினும் செயப்பாட்டு வினை அவர்தமக்கு உடன்பாடு என்றது மூன்றும் வேற்று மைப்பொருளுள் வினைமுதல் என்றதைக் கொண்டமையாற் பெறப்படும். அன்றியும் 'எனப்படும்' என்ற சொல்லை எழுத் ததிகாரமுதற்சூத்திரத்தில் அவரே கூறியுள்ளனர். ஆயினும் செயப்பாட்டுவினைவழக்கு சங்கவிலக்கியங்களில் அருகியே காணப்படும். சாஸனங்களிலும், தேவாரம் முதலிய பிற்காலத்து நூல்களிலும் மிகுதியாகக் காணப்படும். ஆகலினன்றோ வீர சோழியவாசிரியர் செயப்பாட்டுவினைவழக்கிற்குக் கருமக்காரகம் என்ற பெயரை இட்டு, அஃது அகரந்தொடர்ந்த தாதுவிற்குப் 'படு' வும், அதன் பின்னர் வினைவிகுதியுஞ் சேர்த்து உண்டாக் கப்படும் என்று கூறினர். அந்நூலுரைகாரர் 'தகு' வையும் 'படு' வோடு சேர்த்துக் கூறினர்.

நன்னூலார் அதனைப்பற்றி யொன்றுங் கூறவில்லை. பிர யோகவிவேகநூலார் உரையிற் கூறினர். இலக்கணக்கொத்தாசி ரியர் வீரசோழியவாசிரியர் கூறியவாறு கூறிச் சிலவிடங்களில் செய்வினையே செயப்பாட்டுவினைப்பொருளில் வருமென்பர். சங்கவிலக்கியங்களில் பெரும்பாலும் அவ்வாறு வருதல் காண்க.

(உ-ம்.) இல்வாழ்வா னென்பான் (குறள். 41)
சுற்றம் உடுப்பதூஉ முண்பதூஉ மின்றிக்கெடும்
(குறள். 166)

டாக்டர் கால்ட்வெல் பின்வருமாறு கூறினர் :—

செயப்பாட்டுவினைப்பொருள் பெரும்பாலும் 'செய்து' என்ற வாய்பாட்டு வினையெச்சத்தின் பின்னர் 'ஆ' 'முடி' என்ற தாதுக்களின் முற்றை வழங்கி உணர்த்தப்படும். (உ-ம்.) முடிந்து ஆயிற்று, முடிந்தது. சிலவிடங்களில் 'அடிக்கப்பட் டான்' என்ற பொருளில் 'அடி உண்டான்' என்ற வழக்கு உண்டு. இக்காலத்து 'நான் நன்றாய் சாப்பிடப்பட்டவன்' என்ற வழக்கும் உளது.

மறைச்செயப்பாட்டுவினை.

தாதுவிற்குப் 'படு' என்றதைச் சேர்த்து, அதன்பின்னர் செய்வினையிலுள்ளவாறு செய்கை முடித்தல்வேண்டும்.

(உ-ம்.) சிறக்கப்பட்டதன்று; காணப்பட்டிலது; உரைக்கப்பட்டின்று; காணப்படேன்; காணப்படான்; காணப்படாது; காணப்படேன் அல்லேன்.

இவ்வாறுள்ள வழக்கு வடமொழியில் இல்லை. வடமொழியும் தமிழ்மொழியும் வெவ்வேறினத்தன என்றதற்கு இதுவுமொரு சான்றாகும்.

ஏவல்வினை.

ஏவல்வினையும் விதியின்கண்ணும் [illegible]யின்கண்ணும் வழங்கும். விதியின்கண் செய்யாய், செய்ய, செய்தி, செய்தீ, செய்குவை, என்பன முன்னிலையொருமையின்கண்ணும் செய்யீர், செய்மின் என்பன முன்னிலைப்பன்மையின்கண்ணும் ஆசிரியர் தொல்காப்பியனார்காலத்து வழங்கின. தேவாரம் நாலாயிரப்பிரபந்தம் இவற்றுள் 'செய்மின்கள்' என்றதும் வழங்கப்பட்டது. வீரசோழியவாசிரியர் 'செய்' என்றது ஒருமையின்கண்ணும், 'செய்யும்', 'செய்மின்', 'செய்யாமே' என்பன சிறப்பொருமையின்கண்ணும் செய்யுங்கள், செய்மின்கள் என்பன, பன்மையின்கண்ணும் வருமென்பர்.

'செய்யும்' என்ற வினைமுற்றைத் தன்மை முன்னிலை பல்லோர் படர்க்கையில் வாராதென ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியிருக்க [1] வீரசோழியவாசிரியர் செய்யும், செய்யுங்கள் என்பனவற்றை முன்னிலையில் எவ்வாறு கூறினர் என்ற ஐயம் வரலாம். 'செய்யும்' என்றது 'செய்மின்' அல்லது 'செய்மே' என்றதன் திரிபு எனக் கொள்ளல் தகும்.

நன்னூலார் 'செய்மின்' என்றதைமாத்திரம் பன்மையிற் கூறினர்.

(1) தொல். சொல். 227.

இக்காலத்து 'செய்யாமே' என்றதைத் தவிர்த்து ஏனைய வற்றை வீரசோழியவாசிரியர் கூறியவாறே பேச்சுவழக்கில் வழங்குகின்றோம்.

ஆசிரியர் தொல்காப்பியனார் 'செயல்வேண்டும்' என்றதை ஏவலாகக் கொண்டனரெனத் தோற்றுகின்றது. அவ்வாறாயின் அது படர்க்கையிலும் வருதல்கூடும். அஃதே பின்னர் 'செய்ய, வேண்டும்' என மாறியிருத்தல்கூடும்.

ஏவன்மறையைப்பற்றி ஆசிரியர் தொல்காப்பியனார் ஒன்றுங் கூறாவிடினும் அழியல், அஞ்சல் (தொல். பொருள் 146) என்ற சொற்களை அப்பொருளில் வழங்கியுள்ளார். அவற்றையும் சங்கவிலக்கியவழக்கையும் நோக்கின், செய்யல், செய்யாய், செய்யாதி, செய்யேல் என்பன ஒருமையிலும், செய்யீர் என்பது பன்மையிலும் வழங்கப்பட்டன எனத் தோற்றுகின்றது.

| | | |
|---|---|---|
| (உ-ம்.) | பெயரல் | (புறநா. 3, 14) |
| | நீங்காய் | (கலித். II 470, 21) |
| | நில்லாதி | (கலித். II 468, 21) |
| | உள்ளழியேல் | (கம்பரா. அயோத். 225, 18) |
| | அயரீர் | ,, 277, 87) |

'செய்யவேண்டா' என்றதும் ஒருமை பன்மை இரண்டின் கண்ணும் வழங்கப்பட்டதெனத் தோன்றுகின்றது.

இக்காலத்துப் பேச்சுவழக்கில் ஒருமையில் 'செய்யாய், செய்யாதே' என்பனவும் சிறப்பொருமையில் 'செய்யாதேயும்' என்பதும், பன்மையில் 'செய்யாதீர்கள், செய்யாதேயுங்கள்' என்பனவும் வழங்கப்படுகின்றன.

ஆசிரியர் தொல்காப்பியனார் வியங்கோள்வினை தன்மை முன்னிலையில் வாரா தென்றமையான் அவர்காலத்து, 'செய்' முதலியன கூறுவோன் ஆணையைக்குறித்தலோடு விருப்பம் முதலியவற்றையுங் குறித்திருத்தல் கூடும். நன்னூலார் காலத்தில் வியங்கோள் தன்மை, முன்னிலை, படர்க்கை இம்மூவிடங்களினும் வழங்கப்பட்டமையின் செய்முதலியன ஆணையை மாத்திரங் குறிக்கத் தொடங்கிற்று என்னலாகும்.

வியங்கோள்.

இஃதும் விதியின்கண்ணும் மறையின்கண்ணும் வரும். தன்மை முன்னிலைகளில் வியங்கோள் வாராதென்றும், படர்க்கையில் ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் எல்லாவிடத்தும் ஒரே உருவங்கொள்ளுமென்றுங் கூறினர் ஆசிரியர் தொல்காப்பியனார். ஆயினும் அதன் உருவம் யாதெனக் கூறிற்றிலர். அவர் தாமே அறிதல், (தொல். சொல். 458) காட்டல் (தொல். சொல். 463) முதலியவிடங்களில் வியங்கோட்பொருளை வழங்கினராதலின், 'அல்' என்றதை வியங்கோள்விகுதியாகக் கொண்டனர் பின்னோர். "அறிதல்வேண்டும்" என்பதற்குப் பிரதியாக 'அறிதல்' என்றுந் தொல்காப்பியனார் கூறியிருத்தல் கூடும்.

வீரசோழியவாசிரியர் வியங்கோள் படர்க்கையில்தான் வருமெனத் தொல்காப்பியனார் கூறுமாறு கூறி, அது தாதுவின் பின் 'க'கரஞ் சேர்த்து ஆக்கப்படுமென்பர். நன்னூலார் 'செய்க, செய்யிய, செய்யியர்' என்பன வியங்கோள்வினை யென்றும், அவை மூவிடத்தின்கண்ணும் வருமென்றுங் கூறினர். இலக்கணவிளக்கவாசிரியர் நன்னூலாரோடு உடன்படுவதுமன்றி, அல், ஆல், உம், மார், ஐ இவையும் வியங்கோள்விகுதியாகுமென்றுங் கூறி அவற்றிற்கு இலக்கியங்களிலிருந்து உதாரணமுங் கூறினர். அவர்தங்கொள்கையே சிறக்கும். பின்வருமுதாரணங்களும் நோக்கற்பாலன.

| | |
|---|---|
| வாழிய நீ | (கலித். II. 583, 21) |
| வாழியர் யான் | (புறநா. 365, 9) |
| வாழியர் பல | ( ,, 371, 25) |
| நீ வாழியர் | ( ,, 137, 14) |
| செய்தேனுருக | ( ,, 71, 9) |
| செல்வையாகுவை | ( ,, 70, 15) |

பேச்சுமொழியில் வாழட்டும், வாழக்கடவான், வாழக்கடவாள் முதலியன வழங்கப்படுகின்றன.

மறையின்கண் 'பெயரல்' (புறநா. 3, 14) போன்றன வழங்கப்படுகின்றன. 'செய்யாய்' என்றது 'செய்' என மாறி

யதுபோன்று 'பெயராய் அல்லாய்' என்றது 'பெயரல்' என மாறிற்றோ என்பது ஆராய்தற்குரியது. அவ்வாறில்லாவிடின், ஒலிக்கும் மாறுபாட்டினால் அது மறையாகக் கொள்ளப்படல் வேண்டும்.

எச்சங்கள்.

வினை, முற்றுதலின்றி எச்சமுமாகலாம். அவ்வெச்சம் பெயர் வினை இவ்விரண்டனுள் ஒன்றைத் தழுவலாகும். பெயரைத் தழுவின் அது பெயரேச்சமாகும்; வினையைத்தழுவின் வினையேச்சமாகும்.

பெயரெச்சம் செய்வினைவிதிப்பெயரேச்சம், செய்வினை மறைப்பெயரேச்சம், செயப்பாட்டுவினைவிதிப்பெயரேச்சம், செயப்பாட்டுவினைமறைப்பெயரேச்சம் என நான்கு வகைப்படும்.

செய்வினைவிதிப்பெயரெச்சம் மூன்று காலத்தும் நிகழும். இறந்தகாலத்தில் செய்த, உறங்கிய எனவும், நிகழ்காலம் எதிர் காலம் இரண்டிலும் செய்யும் எனவும் இருந்தனவாகக் கூறினர் ஆசிரியர் தொல்காப்பியனார். பிற்காலத்தில் செய்த, உறங்கிய, உறங்கின என இறந்தகாலத்தும், செய்யும், செய்கிற, செய்கின்ற, செய்யாநின்ற, என நிகழ்காலத்தும், செய்யும் என எதிர் காலத்தும் வரும். செய்கிற, செய்கின்ற, செய்யாநின்ற என்ற வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் சங்கவிலக்கியங்களிற் பெரும் பாலும் காணப்பட்டில. சேர்கின்ற (பரிபா. 163, 35) எனப் பரிபாடலிலும், 'இறவாநின்ற' எனக் குறளிலும் இருப்பினும் அவற்றை வினையாலணையும்பெயராகக் கொள்ளலகூடும்.

செய்வினைமறைப்பெயரெச்சம் மூன்றுகாலத்தும் 'செய்யாத' என்றே செய்யுளில் வரும். பேச்சுவழக்கில் 'செய்யாமலிருந்த', 'செய்யாமலிருக்கின்ற', 'செய்யாமலிருக்கும்' என்பன முறையே இறப்பு, நிகழ்வு, எதிர்காலம் இவற்றில் வரும்.

செயப்பாட்டுவினைவிதிப்பெயரெச்சம் முறையே செய்யப்பட்ட, செய்யப்படுகின்ற, செய்யப்படும் என்பனவாம். செயப்பாட்டுவினைமறைப்பெயரேச்சம் 'செய்யப்படாத' என்றதே. இது மூன்று காலத்தின்கண்ணும் வரும். தற்போது பேச்சு

வழக்கில் செய்யப்படாமலிருந்த, செய்யப்படாமலிருக்கின்ற, செய்யப்படாமலிருக்கும் என்பன முறையே மூன்று காலத்தின்கண்ணும் நிகழும்.

செய்த, செய்கின்ற முதலிய சொற்களின் ஈற்றிலுள்ள அகரம் தொடக்கத்தில் பலவின்பால் விகுதியாக இருந்தல்கூடும். செய்த, செய்கின்ற என்பன வினையாலணையும்பெயராய் அஃறிணைப்பன்மைப் பெயர்களைத் தழுவியிருத்தலுங் கூடும். பின்னர் எல்லாப்பெயரையுந் தழுவ, அவற்றைப் பெயரெச்சமாகக் கொண்டிருத்தல்கூடும்.

**வினையெச்சம்.**

வினையெச்சங்கள் செய்து, செய்யூ, செய்பு, செய்யியர், செய்யிய, செயற்கு, செய்தென, செய, செயின் என ஒன்பது வகையாம் என்றனர் தொல்காப்பியனார். இவற்றுள் செய்து, செய்யூ, செய்பு மூன்றும் இறந்தகாலத்தைக்காட்டும்; செய்யியர், செய்யிய, செயற்கு, செய்தென, செய என்பன காரணம், காரியம் முதலிய பொருளைக் குறிக்கும்; செயின் என்றது நிபந்தனையைக் குறிக்கும். உறங்கி, போய் என்பனவும் பொருள் வகையான் 'செய்து' என்ற வாய்பாடாகவே கொள்ளப்பட்டன.

இவற்றுள் செய்யூ என்றது முற்றுவினையாற் குறிக்கப்படுஞ் செயலுக்கு முன்னிகழ்ந்த செயலைக் குறிக்கும்போது வருமென்பர் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும். இரண்டு செயல்களும் ஒருங்கு நிகழ்ந்தாலும் அது வராதென்பர் தெய்வச்சிலையார்.

(உ-ம்.) மேதாளோச்சி வலன் வளையூஉப் பகல் மகிழ்தூங்கும் (பத்து. 136, 145).

செய்பு.

என்றது முற்றுவினைச்செயல் நிகழுங்காலத்துள்ள செயலைக் குறிக்க வருமென்பர் சேனாவரையர். அதற்கு முன்னருள்ள செயலையுங் குறிக்க வருமென்பர் நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும்.

(உ-ம்.) புலராப் பச்சிலை யிடையுடுபு தொடுத்த.

இஃது ஆசிரியர்க்கு உடன்பாடென்பது அவரது

தெரிபு வேறு கிளத்தல் (தொல். சொல். 49.)

என்ற சூத்திரத்துள்ள தெரிபு என்ற வழக்கால் விளங்கும்.

செய்து, செய்யூ, செய்பு என்றவற்றிற்கு மறையாகச் செய்யாது, செய்யாமை, செய்யாமல் என்பன வரும்.

(உ-ம்.) நிரயங் கொள்பவரொடு ஒன்றாது...ஓம்புமதி (புறநா. 5, 6, 7)

அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்
(தொல். சொல். 26)

தீராமற் காப்பதோர் திறனுண்டேல்
(கலித். I. 287, 3)

செய்யாமற் செய்தவுதவி (குறள். 101)

'செய்யாமே' என்றதும் வழக்கிலுள்ளது.

அஞ்சன வண்ணனென் னுருயிர் நாயக னளாமே
(கம்பரா. குக. 14)

செய்யியர், செய்யிய.

இவ்விரண்டும் இக்காலத்து இறந்தன. இவை உருவத்தில் வியங்கோளோடு ஒன்றுபட்டன என்பது நோக்கற்பாலது.

செயற்கு.

இஃது உருவத்தில் 'செயல்' என்ற தொழிற்பெயரின் நான்காம் வேற்றுமையாயினும், அஃதின்று என்பர் சேனாவரையர். மொழிகளில் வினையெச்சங்கள் ஒருகாலத்தில் வேற்றுமையுருபேற்ற பெயராயிருந்தன என்ற மொழிநூல்வல்லார்கொள்கைக்கு இஃதொரு சான்றாகும். இக்காலத்து, 'செயற்கு' என்பதற்குப் பிரதியாக 'செய்வதற்கு' என்றதும் வழங்கப்படும்.

செய.

இக்காலத்து, செய்ய என்றும் வழக்கிலுள்ளது.

செயின்.

இஃதும் 'செய்' என்ற பகுதியினின்றும் பிறந்த ஐந்தாம் வேற்றுமையெனக் கருதற்கு மிடனுண்டு. தற்போது 'செய்

தால்' என்றது மிகுதியாய் வழங்குகின்றது. அதன் மறை பண்டைக் காலத்தில் 'செயினல்லால்' எனவும் தற்போது 'செய்யாவிடின்' 'செய்யாவிட்டால்' எனவும் வழங்கும்.

மேலே கூறப்பட்ட ஒன்பதைத் தவிர்த்து, செயினும் செய்தபின், செய்தமுன், செய்தக்கால், செய்வழி, செய்யிடம் முதலியனவும் வினையெச்சங்களா மென்பர் தொல்காப்பினார். இவற்றுள் 'செயினும்' என்றது 'செயின்' 'உம்' என்ற இருசொற்களால் ஆனதென்பதும், செய்தபின் முதலியன, பெயரெச்சம் பெயர் இவ்விருசொற்களால் ஆயினவென்பதும், செய்வழி, செய்யிடம் முதலியன வினைத்தொகையாய் ஏழாம் வேற்றுமையுருபு தொக, வினையெச்சமாகக் கருதப்பட்டனவென்பதும் வெளிப்படை.

வீரசோழியவாசிரியர் பொருட்டு, க, பான், வான், தற்கு அ என்பன செயவெனெச்ச விகுதிகளென்பர். அவற்றுள் க, அ என்பன 'செய' என்ற வாய்பாடாகக் கருதலாகும். 'பொருட்டு' என்பது நான்காம் வேற்றுமைச் சொல்லுருபாய் நின்று 'செயற்கு, செய்தற்கு' என்ற வாய்பாட்டினைச் சேர்ந்தது என்னலாம். பான், வான் என்பன படிப்பான் வந்தான், அறிவான் வந்தான் என்னுமிடத்துள்ள வினைமுற்று விகுதி என்னலாகும். வினைமுற்று வினையெச்சப்பொருளில் வருதல் ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு உடன்பாடாகும்.

ஆ, இட்டு, து, உ, இ என்பன, செய்தனெச்சவிகுதி என்பர் வீரசோழியவாசிரியர்.

நேமிநாதவாசிரியர் செய்யியர், செய்யூ என்பனவற்றைக் கூறாது, ஆ, வான், பாக்கு என்பனவற்றைச் சேர்த்தனர். நன்னூலாசிரியர் தொல்காப்பியனார் கூறியவற்றுள் 'செயற்கு' என்றதை நீக்கி, வீரசோழியவாசிரியர் கூறிய ஆ, வான், பான் என்பனவற்றையும், நேமிநாதநூலார் கூறிய 'பாக்கு' என்றதையுங் கூட்டிக் கூறினர். இலக்கணவிளக்கவாசிரியர் நன்னூலாரொடு உடன்பட்டனர்.

பாக்கு வாக்கு.

திருக்குறளுள் 'பாக்கு' மூன்றிடத்திலுளது. படுபாக்கு என்றது 136, 164 ஆவது குறள்களிலும், என்பாக்கு என்றது 1312 ஆவது குறளிலும், வேபாக்கு என்றது 1128 ஆவது குறளிலும் உள்ளன. ஆங்கு அவற்றிற்குப் படுதல், என்னுதல் என்றே பொருளாகும். ஆகலின் படுபாக்கு, என்பாக்கு என்ற பிற்காலத்து வினையெச்சங்கள் படுபாக்குக்கு, என்பாக்குக்கு எனச் செயற்கு என்ற வாய்பாட்டுவினையெச்சமாய் நின்று ஓரினவொலிகுன்றல் என்றதான் படுபாக்கு, என்பாக்கு என ஆயிற்றோ வென்பது ஆராய்தற்குரியது.

## 4. இடைச்சொல்.

இடைச்சொல் பெயர்ச்சொல் வினைச்சொல் இவற்றின் விகுதியாகுமெனக் கூறப்பட்டது. சில சொற்றொடரின் இடையிலும் இறுதியிலும் வரும். அவை உம், ஏ முதலியன.

(உ-ம்.) அவனும் இவனும் வந்தான்
ணஃகானொற்றே யாடூஉ வறிசொல்.

ஆகலின் தமிழ்மொழியிடைச்சொல்லும் வடமொழிபிரத்தியநிபாதங்களும் ஒன்றாகும். அவை தனிமையாய் வழங்கப்படா வென்றதை ஆசிரியர் தொல்காப்பியனார்

இடையெனப் படுவ பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே
(தொல். சொல். 249)

என்ற சூத்திரத்திற் கூறினர்.

இடைச்சொல்லெல்லாம் வாசகமல்ல துயோதகமே [1] என்பர் சேனாவரையருந் தெய்வச்சிலையாரும். அவ்வாறு கூறியதற்குக் காரணம் வடமொழியில் வேற்றுமையுருபுகளும் உபஸர்க்கங்களும் துயோதகமெனச் சிலராற் கொள்ளப்பட்டமையாகும்.

(1) தனக்கு ஒருபொருளில்லாது தன்னோடியைபுபட்டதற்கு ஈண்டு இதுதான் பொருளெனக் குறிப்பதற்குத் துயோதகமென்று பெயர்.

அவருள்ளும் வேறுசிலர் அவை வாசகமெனக் கொள்ளுதலானும், தொல்காப்பியனார் எல்லாச்சொல்லும் பொருள்குறித்தன என்று கூறினமையானும், அவை வாசகமென்றே கொள்ளல் தகும்.

வகை.

வேற்றுமையுருபுகளும், சாரியைகளும், வினைவிகுதிகளும், அசைநிலை, இசைநிறை, குறிப்பிற்பொருள்செய்குந, ஒப்பில்வழியாற்பொருள்செய்குந முதலிய சொற்களும் இடைச்சொற்களாகுமென்பர் தொல்காப்பியனார்.

---

## 5. உரிச்சொல்.

உரிச்சொல் இசை, குறிப்பு, பண்பு இவற்றுளொன்றைக் குறித்தும், பெயர் வினை இவற்றுள் தடுமாறியும், ஒருபொருள் பலபொருள் பெற்றும் வருமென்பர் ஆசிரியர் தொல்காப்பியனார். இதனை இலக்கணச்சூத்திரமெனக் கொண்டனர் அந்நாலுரைகாரர்கள். இலக்கணச்சூத்திரத்துள் அஃது ஒருபொருள் கொள்ளுமெனவும் பலபொருள் கொள்ளுமெனவும் கூறவேண்டுதலின்மையின், அச்சூத்திரம் அதன் தன்மையைக் கூறிற்றென்னலாம். அவ்வாறாயின் அதன் இலக்கணம் யாதெனின் உரிமைப்பொருளை யுணர்த்தும் பகுதி யென்னலாம். உரிமைப்பொருள் என்றதற்குச் சிறப்புப்பொருள் எனப் பொருளாகும். பெயர் வினை இவற்றுள் விகுதியைக்காட்டிலும் பகுதிக்குச் சிறப்பு மிகுந்தமையின், பகுதியைச் சிறப்புப்பொருள் காட்டும் பகுதியெனக் கூறுதல் தகும். தெய்வச்சிலையார் உரிச்சொல்லும் வடமொழியின் தாதுவும் ஒரு பொருட்கிளவியென்பர். எல்லாப் பெயரும் தாதுவினின்றும் பிறந்தன என்ற கொள்கையைக் கொண்டு அவ்வாறு கூறினர்போலும். பெயருள் பெரும்பகுதி தாதுவினின்று பிறந்திருப்பினும், எல்லாப்பெயரும் அவ்வாறே பிறந்தன எனக் கூறவேண்டுவதின்மையானும், தமிழ்மொழிப் பெயருள் பல எவ்வினையினின்றும் பிறந்தன எனக் கூறுதற்கு முடியாமையானும், உரிச்சொல்லென்பது பெயர்வினை இவற்றின்

பகுதியெனக் கூறல் தகும். இதற்குச் சான்றாக ஆசிரியர் தொல்காப்பியனாரே இதனைக் குறைச்சொற்கிளவி என எழுத்ததிகாரத்தின்கட் கூறியதும், ஈண்டு எழுத்துப் பிரிந்திசைத்தல் இவணியல்பின்று எனக் கூறியதும் காண்க. ஆசிரியர் தொல்காப்பியனார் வெளிப்படையாய் அறியப்படும் உரிச்சொற்களை இங்குக் கூறவில்லை யென்பதும், முதலில் ஒருபொருட் பல சொற்களையும், பின்னர்ப் பலபொருளொருசொல்லையும் வழங்குதல் வடமொழியாஸ்கநிருக்தத்தின் முறையோடு ஒத்திருத்தலுங் காண்க.

நன்னூலார் உரிச்சொல் செய்யுட்குமாத்திர முரித்தென்றும் ஒருகுணம் பல்குணங்குறிக்குமென்றும் பெயர்வினை இவற்றினின்று நீக்கப்படாவென்றுங் கூறினர். இவ்வாறு கூறியதற்குக் காரணம் உறு தவ நனி இவைபோன்ற சில சொற்களே உரிச்சொல்லெனக் கருதியதாகும். அது பொருந்தாக்கூற்றெனக் கருதி இலக்கணவிளக்கவாசிரியர் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியதைக் கூறி, அவை பெயர்வினை இவற்றின் பகுதியாகவும் பெயர்ப்போலியாகவும் வினைப்போலியாகவும் வருமென்பர். ஆகலின் எல்லாச்சொற்களும் உரிச்சொல்லாகுமென்றும், அவை இடைச்சொல்லுள் அடங்குமென்றும் பிரயோகவிவேகநூலார் கூறியதும், பெயர்வினை இவற்றை அடுத்து அவற்றிற்கு அடையாகவரும் மொழி என ஆங்கிலத்தில் தமிழகராதியிற் கூறியதும் பொருந்தாக் கூற்றாகும்.

---

## 6. தொகை.

சொற்கள் பெயர் வினை என இருவகைப்படுமெனவும், பெயர் வினை, உரிச்சொல், இடைச்சொல் இவை சேர்ந்து வருமெனவுங் கூறப்பட்டது. சிலவிடங்களில் பலபெயர்கள் ஒருங்கு சேர்ந்தும், பெயரெச்சமும் பெயரும் ஒருங்குசேர்ந்தும், சிறிது அவற்றுட் சில பகுதி தொக்கும், ஒரு சொன்னீர்மைப்பட்டு வழங்குகின்றன. அவற்றிற்குத் தொகை எனப் பெயராம்.

தொகை.

தொகை என்ற சொல் மறைபடுதல், ஒருங்குசேர்தல் என்ற இருபொருட்கொண்ட 'தொகு' என்ற தாதுவினின்று பிறந்தது. ஆகலின் சொற்கள் ஒருங்கு ஒலிக்கப்பட்டு இடையில் வேற்றுமையுருபு, உவமவுருபு முதலாயின மறைபட, அவற்றைத் தொகை என வழங்கலாகும். இவ்வாறு இரண்டு பொருளையுங் கொண்ட தாதுவினின்று பிறந்த தொகை என்ற சொல்லை ஆசிரியர் தொல்காப்பியனார் வழங்கியது வியத்தற்குரியது. தொகையும் சமாசனும் ஒருபொருட்கிளவியாகும்.

வகை.

தொகை அறுவகைப்படுமெனவும், அவை வேற்றுமைத்தொகை, உவமத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை எனவுங் கூறினர் ஆசிரியர் தொல்காப்பியனார்.

வேற்றுமைத்தொகை.

வேற்றுமையுருபேற்ற சொல்லும் அதனாற்றழுவப்பட்ட சொல்லும் ஒருங்கு ஒலிக்கப்பட, வேற்றுமையுருபு தொக, அத்தொகையை வேற்றுமைத்தொகை என்பர். அவ்விரண்டு சொற்களுக்கும் இடையிற் சில சொற்கள் நின்றுந் தொகலாம்.

(உ-ம்.) பொன்னாற்குடம்—பொன்னாலாகியகுடம் என்பது பொற்குடம் என்றாகும்.

உவமத்தொகை.

உபமானம் முன்னும் உபமேயம் பின்னுமிருக்க, இடையிற் கூறப்படும் உவமவுருபு தொகும்; அத்தொகைக்கு உவமத்தொகை எனப் பெயராகும். (உ-ம்.) பொன்போல் மேனி, பொன்போலுள்ள மேனி என்பன பொன்மேனி யென ஆகும்.

வினைத்தொகை.

பெயரெச்சமும் அதனாற்றழுவப்படும் பெயரும் ஒருங்கு ஒலிக்கப்படின், பெயரெச்சவிகுதி குன்றும். அது வினைத்

தொகையாகும். (உ-ம்.) கொன்ற யானை, கொல்லும் யானை என்பன கொல்யானை என்றாகும். இளம்பூரணர் நச்சினார்க்கினியர் முதலிய தொல்காப்பியவுரைகாரர்களும், நன்னூலாரும் இவ்வாறே வினைத்தொகையின் இலக்கணத்தைக் கூறினர். சேனாவரையரும், அவரைப் பின்பற்றி இலக்கணவிளக்கவாசிரியரும், வினைத்தொகை யென்றது பிரிவிலொட்டு (நித்தியஸமாஸன்) எனவும், அஃது ஒரு தாதுவும் பெயரும் ஒருங்குசேர்ந்து நிகழுமெனவுங் கூறினர். 'வினையின் றொகுதி காலத் தியலும்' எனத் தொல்காப்பியனார் கூறியிருத்தலானும், தாதுவிற்குக் காலத்தைக் காட்டுமாற்றலின்மையானும், அவர் தங்கூற்று ஆராய்தற் குரியது.

### பண்புத்தொகை.

இருமொழிகளுள் ஒன்று பண்பையும் மற்றொன்று பண்பியையுமேனும், ஒன்று விசேடப்பொருளையும் மற்றொன்று அதன் சாமான்னியத்தையுமேனுங் குறிப்பின், அவை பண்புத்தொகையாகும். (உ-ம்.) கருங்குதிரை, சாரைப்பாம்பு என்பன. கருங்குதிரை என்பது கரியது குதிரை என்ற சொற்களால் ஆக்கப்பட்டதென்பர் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும். அவர்களது கொள்கைதான் சிறக்குமென்றது 'இன்னது இதுவென வரூஉ மியற்கை' (தொல். சொல். 4, 16) என்ற தொல்காப்பியச் சூத்திரத்தினடி காட்டும். ஆயினும் வினைத்தொகைபோன்று பண்புத்தொகையும் பிரிவிலொட்டு என்பர் சேனாவரையர். அவரைப் பின்பற்றினர் இலக்கணவிளக்க நூலார். நன்னூலார் கருமையாகிய குதிரை கருங்குதிரை என்பர். கருமை என்பது பண்பைக் குறித்தலானும், குதிரை என்பது பண்பியைக் குறித்தலானும், இரண்டினையும் ஆகிய என்றதனாற் கூட்டுதல் பொருந்தாமையானும், அவர் கூற்றுச் சிறந்ததன்றென்க.

### உம்மைத்தொகை.

இருபெயர்களும் பல பெயர்களும் உம்மையாற் சேர்க்கப்பட்டு ஒலிக்க, அவ்வும்மை கெட அவை உம்மைத்தொகையாகும்.

(உ-ம்.) உவாப்பதினான்கு, புலிவிற்கெண்டை.

உம்மைத்தொகையைப்பற்றிக் கூறுந் தொல்காப்பியச்சூத்திரத்தில் இருபெயர், பல்பெயர் என்றுள. இளம்பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் இம்மூவரும் இரண்டு பெயர் பல பெயர் எனப் பொருள் கொண்டனர். அவ்வாறாயின் பல பெயருக்குள் இருபெயரும் அடங்குதலின் இருபெயர் என்ற சொல் சூத்திரத்தில் எற்றுக்கு என ஐயுற்று, இளம்பூரணர் 'இரண்டனையும் பன்மையென்று வேண்டான் இவ்வாசிரியன் என்பது' என்றும், சேனாவரையர் 'வேற்றுமைத்தொகை முதலாயின பல சொல்லாற் றொகுதல் சிறுபான்மை; அதனான் உம்மைத்தொகை இருசொல்லானும் பல சொல்லானும் ஒப்பத் தொகுமென்பது அறிவித்தற்கு இருபெயர் பல்பெயர் என்றார்' என்றும், நச்சினார்க்கினியர் 'இரண்டாகிய பல பெயரினும் இரண்டிறந்த பல பெயரினுந் தொகுமென்பதற்கு இருபெயர் பல்பெயரென்றார்' எனவும், தெய்வச்சிலையார் இருபெயர் என்பதற்குப் பொருட்பெயருந் தொழிற்பெயரும் என்றும், பல்பெயர் என்பதற்குப் பன்மை குறித்த பெயர் என்றும் பொருள் கூறி, இருபெயருக்கு உதாரணமாகக் கபிலபரணர், ஆடல்பாடல் என்றும், பல பெயருக்கு உதாரணமாகப் பார்ப்பார்சான்றார் என்றுங் கூறினர். தெய்வச்சிலையாரது உரை போற்றத்தக்கது.

அன்மொழித்தொகை.

இரண்டு சொற்கள் சேர்ந்து அவற்றின்பொருளல்லாது வேறுபொருளைத் தருவது அன்மொழித்தொகையாகும்.

(உ-ம்.) வெள்ளாடை வந்தான் என்னுமிடத்துள்ள வெள்ளாடை என்பது.

அது வெள்ளாடையுடையானைக் குறிக்கும். இவ்வன்மொழித்தொகை பண்புத்தொகை, உம்மைத்தொகை, வேற்றுமைத்தொகை இவற்றின் புறத்திற் பிறக்குமென்பர் தொல்காப்பியனார். வினைத்தொகை, உவமத்தொகை இவற்றின் புறத்து அன்மொழித்தொகை பிறவாதென்றும், துடியிடை, தாழ்குழல் என்பன இருபெயரொட்டு என்றும், ஆகுபெயர் ஒட்டுப்பட்ட பெயரோடு ஒற்றுமைப்பட்டு வருமென்றும், அன்மொழித்தொகை அப்பொருளின் வேறுபட்டுவருமென்றுங் கூறுவர்

தெய்வச்சிலையார். அவர்கூற்றே ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு உடன்பாடெனத் தோற்றுகின்றது. சேனாவரையர் நச்சினார்க்கினியர் இவ்விருவரும் வினைத்தொகை, உவமத்தொகை இவற்றின்புறத்திற்பிறந்த அன்மொழித்தொகையையுங் கொள்வர்.

ஆசிரியர் தமிழ்மொழியில் தொகை ஆறெனவும் அவற்றுள் பொருள் முன்மொழியிலும், பின்மொழியிலும் இருமொழியிலுஞ் சிறந்து நிற்குமெனவுங் கூறுதல் வடமொழியின்கண் ஸமாஸனின் எண்ணையுஞ் செயலையும் ஒத்துளது.

நிலங்கடந்தான்.

பெயரி னாகிய தொகையு மாருளவே
அவ்வு முரிய வப்பா லான (தொல். சொல். 67)

என்ற சூத்திரத்துள்ள உம்மைக்குப் பெயர்வினை இவற்றாலாகிய தொகையுண்டெனப் பொருள்கூறி

பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப
வேற்றுமை யுருபு நிலைபெறு வழியும்
தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்
(தொல். எழுத். 133)

என்ற சூத்திரத்தில் பெயருந் தொழிலும் பிரிந்திசைப்ப வேற்றுமையுருபு நிலைபெறுவழியும், பெயருந்தொழிலுமொருங்கிசைப்ப தோற்றம் வேண்டாத்தொகுதிக்கண்ணும் என நிரனிறையாகவும், தொகுதி என்றதற்குத் தொகையெனப் பொருளுங் கொண்டு, நிலங்கடந்தான் என்றதைத் தொகையாகக் கூறினர் சேனாவரையர். ஈண்டுக் கடந்தான் என்றது வினைமுற்றேயாகும். நிலங்கடந்தான் என்றவிடத்து நிலம் என்றது இரண்டாம் வேற்றுமையுருபு தொக்க தனிச்சொல்லென்றும், கடந்தான் என்றது தனிச்சொல்லென்றும் இளம்பூரணர் கொள்ளுதல் நேரிதெனத் தோன்றுகின்றது.

தொகையின் வகையிலும் இலக்கணத்திலும் நேமிநாத நூலார், நன்னூலார், இலக்கணவிளக்கநூலார், இலக்கணக்கொத்தாசிரியர் நால்வரும் தொல்காப்பியனாரைப் பெரும்பாலும் பின்

பற்றினர். வீரசோழியவாசிரியரும், பிரயோகவிவேகநூலாரும் வடமொழியைப் பின்பற்றிச் சமாசன் தற்புருடன், பலநெல், [1] கன்மதாரயம், துவிகு, துவந்துவம், அவ்வியபாவன் எனப் பிரித்தனர். அவர் கூறும் வகையும் இலக்கணமும் வடமொழியில் இயற்றப்பட்ட வாருசிகாரிகைகளை ஒத்தன. ஈண்டு தற்புருடனும் வேற்றுமைத்தொகையும், பலநெல்லும் அன்மொழித்தொகையும், கன்மதாரயம் துவிகு இவையும் பண்புத்தொகையும், துவந்துவமும் உம்மைத்தொகையும் ஒன்றாகும். கன்மதாரயனின் ஒருபகுதி வினைத்தொகையாகும்.

---

(1) பலநெல் என்றது 𑌬𑌹𑍁𑌵𑍍𑌰𑍀𑌹𑌿𑌃 என்றதன் மொழிபெயர்ப்பு.

# IV. தொடரியல்

## 1. முகவுரை

தொடருக்குத்தான் பொருளேயன்றி தொடரை ஆக்கிய தனிச்சொற்களுக்குத் தனிமையாயிருக்கின்றநிலையிற் பொருளில்லை யென்றது மொழிநூல்வல்லோரின் கொள்கை. இஃதே தமது கொள்கையுமென நமக்கு அறிவிக்குமாறு தொல்காப்பியனார் சொல்லதிகாரத்தின்கண் அல்வழித்தொடரைப்பற்றிக் கூறுங் கிளவியாக்கத்தை முன்னரும், வேற்றுமைத்தொடரைப் பற்றிக் கூறும் வேற்றுமையியல், வேற்றுமைமயங்கியல், விளிமரபு என்ற மூன்றியல்களையும் அதன்பின்னருங் கூறி, தொடரின் பகுதியாயுள்ள பெயர், வினை இவற்றையும், அவற்றின் பகுதியாயுள்ள இடைச்சொல், உரிச்சொல் இவற்றையும் பின்னருள்ள இயல்களிற் கூறியுள்ளார்.

## 2. சொற்களின் முறை

1. தமிழ்மொழியில் பொதுவாகத் தொடரின் தொடக்கத்தில் எழுவாயும் அதனீற்றில் பயனிலையுமிருத்தலே முறையாகும்.

(உ-ம்.) வாள் வலந்தர மறுப்பட்டன (புறநா. 4)

பயனிலையைச் சிறப்பித்துக் கூறவேண்டுமிடத்து அதனைத் தொடக்கத்திற் கூறுதலு முண்டு.

கண்டனென் கற்பினுக்கணியைக் கண்களால்
(கம்பரா. திருவடி 58)

2. ஆறாம்வேற்றுமையுருபேற்ற பெயர் எப்பொழுதும் அது தழுவும் பெயரின் முன்னரே இருத்தல்வேண்டும்.

(உ-ம்.) ஆலைவாய்க் கரும்பின் [1] றேனும் (கம்பரா. பால. 469)

(1) கரும்பின் என்றவிடத்து "அது" தொக்கது.

3. இரண்டாம் வேற்றுமையுருபேற்ற பெயர் பெரும்பாலும் தான் தழுவும் வினையின் முன்னர் வரும்.

(உ-ம்.) தலையை வணங்கி (சிலப். 490, 33)

இரண்டற்கு மிடையில் மூன்று நான்கு இவ்வேற்றுமையுரு பேற்ற சொற்களும் வரும்.

(உ-ம்.) இடமுலை கையாற் றிருகி (சிலப். 421, 43)
வந்தநம்பியை...முந்தை நான்மறைமுனிக்குக் காட்டி
(கம்பரா. பால. 233, 17)

சிலவிடங்களில் வினைக்குப் பின்னரும் இரண்டு முதலிய வேற்றுமையுருபேற்ற பெயர்கள் வரும். அவை பெரும்பாலும் பேச்சு வழக்கில் இல்லை.

(உ-ம்.) உண்குவம் பெரும நீ நல்கிய வளனே (புறநா. 136)
கண்டனென் வருவல்...காடே (புறநா. 23)

4. இனைத்தென வறியப்பட்ட சினைக்கிளவிக்கும் முதற் கிளவிக்கும் அவை வினையோடு பொருந்தியவிடத்து உம்மை கொடுத்தல்வேண்டும்.

(உ-ம்.) பன்னிரு கையும் பாற்பட வியற்றி (திருமுருகா. 118)
முரசு முழங்கு தானை மூவருங்கூடி (பொருநரா. 54)

இவ்வாறு வழக்கு வடமொழியில் இல்லை. ஆகலின் வட மொழியுந் தமிழ்மொழியும் வேறினப்பட்ட மொழிகள் என்ப தற்கு இஃது ஒரு சான்றாகும்.

5. ஒருவனது சிறப்புப்பெயர் தன் இயற்பெயர் முன் னரே வரும்.

(உ-ம்.) தெய்வப்புலவன் திருவள்ளுவன்.

6. சுட்டுப்பெயர் தன்னாற் குறிக்கப்படும் இயற்பெயரின் பின்னர் வரும்.

(உ-ம்.) சாத்தன் அவன் வந்தான்
சாத்தன் வந்தான் அவன் உண்டான்.

7. பெயரெச்சம் எப்போழ்தும் தான் தழுவும் பெயரின் முன்னரே வரும்.

(உ-ம்.) நுதி மழுங்கிய வெண்கோட்டான் (புறநா. 4, 11)

---

## 3. எண்.

1. பெரும்பான்மையும் எழுவாய் ஒருமையா யிருப்பின் பயனிலையும் ஒருமையாயிருக்கும். அது பன்மையா யிருப்பின், பயனிலையும் பன்மையாயிருக்கும்.

(உ-ம்.) ஆவோ டல்லது யகரமுத லாது.(தொல். எழுத். 65.)
உயிர்மெய் யல்லன மொழிமுத லாகா.
(தொல். எழுத். 60.)

2. உலகம்போன்ற சொற்கள் மக்கள் போன்றவற்றை ஒருங்கு குறிப்பின், அவற்றின் பின்னர் பயனிலை ஒருமையாய் நிற்கும்.

(உ-ம்.) வையாது உலகம். (குறள் 117.)

3. உயர்த்துக் கூறுமிடத்து ஒருமைப்பொருளைக் குறிக்கப் பன்மையும் வரும்.

(உ-ம்.) யாமேத்துகம் பலவே. (புறநா. 10.)

4. சிலவிடங்களில் எழுவாய் ஒருமையாயிருக்க, பயனிலை பன்மையாய் வரும்.

(உ-ம்.) அறஞ் செய்தீமோ அருள்வெய்யோய். (புறநா. 145.)

5. சிலவிடங்களில் எழுவாய் பன்மையாயிருக்க, பயனிலை ஒருமையாய் வரும்.

(உ-ம்.) யாவோ யாம் காண்கு. (கலித். II. 497, 22.)

6. சிலவிடங்களில் பலவினைகள் வர, ஆங்கு ஒருமை பன்மை மயக்கம் நிகழும்.

(உ-ம்.) உண்குமெந்தை நிற் காண்கு வந்திசின். (புறநா. 125)

7. சிலபெயர்கள் உம்மையாற் சேர்க்கப்படினும் ஒருமை வினை யேற்கும்.

(உ-ம்.) மாதவர் நோன்பும் மடவார் கற்புங் காவலன் காவ லின்றெனினின்று. (மணிமே. 252, 208, 209.)

8. ஒருவர் என்ற பெயர் ஆண் பெண் இரண்டற்கும் பொதுவாய் நின்று பன்மைவினை யேற்கும்.

(உ-ம்.) ஒருவரை யொருவர் தொடர்ந்தார்.

(கம்பரா. சுந். கிங். 25.)

9. எதிரில் நிற்பவர் ஆண் பெண் ணெனத் தெளிவாய் அறியப்படாவிடின், எழுவாய் ஒருமையா யிருப்பினும் பயனிலை பன்மையாயிருக்கும்.

(உ-ம்.) ஆண்மகன் கொல்லோ பெண்டாட்டி கொல்லோ அஃதோ தோன்றுவார்.

10. வினைப்பெயராகிய 'யார்' என்றது முடிக்குஞ் சொல்லா யிருக்கும்போது எழுவாய் ஒருமையா யிருத்தலுங் கூடும்.

(உ-ம்.) இவன் யார் என்குவையாயின். (புறநா. 13.)

---

## 4. திணை.

1. அன்புமிகுதிபற்றி அஃறிணைக்கு உயர்திணையும், உயர் திணைக்கு அஃறிணையும் வரும்.

(உ-ம்.) (ஆவின்கன்றைப்பார்த்து) என் தந்தை வந்தான்.
(ஆண்மகனைப்பார்த்து) என் யானை வந்தது.

2. சிறப்பினைக் கருதியும் அவ்வாறு வழங்குதல் கூடும்.

(உ-ம்.) செந்தார்ப் பசுங்கிளியார். (சீவகசி. 1036.)
மன்னனுயிர்த்தேமலர் தலையுலகம். (புறநா. 186.)

3. எழுவாய் உயர்திணை அஃறிணைப்பெயர்களாயிருப்பின், பயனிலை உயர்திணையாயு மிருக்கும்.

(உ-ம்.) யானும் என் எஃகமுஞ் சாறும்.
பொன்னனுங் குதிரையும் வந்தார்கள்.

4. எழுவாய் அவ்வாறிருக்க, பயனிலை அஃறிணையாயு மிருக்கும்.

(உ-ம்.) கடுஞ்சினத்த கொல்களிறும்
............ .....
நெஞ்சுடைய புகன்மறவருமென
நான்குடன் மாண்டதாயினும். (புறநா. 55)

---

## 5. இடம்.

எழுவாயி னிடமே பயனிலையதும் ஆகும். ஆயினும் எழுவாய் தன்மைமுன்னிலைப்பெயர்களாயேனும் தன்மைபடர்க்கைப்பெயர்களாயேனும், தன்மைமுன்னிலை படர்க்கைப்பெயர்களாயேனும் இருப்பின், பயனிலை தன்மைப்பன்மையா யிருக்கும்.

(உ-ம்.) யானும் நீயும் போனோம்.
யானும் அவனும் போனோம்.
யானும் நீயும் அவனும் போனோம்.

---

## 6. சுட்டுப்பெயர்.

1. சிலவிடங்களில் 'இவன்' என்ற படர்க்கைப்பெயர் தன்மையொருமைப் பொருளில் வரும். அதற்குக் காரணந் தன்னைப் பிறன்போற் கூறவேண்டு மென்ற விருப்பமே யாகும்.

(உ-ம்.) காண்கிவன் கடும்பினது இடும்பை (புறநா. 173)

அவ்வாறே 'இங்கு' என்ற சொல்லும் வழங்கப்படும்.

(உ-ம்.) பரகதி யிழக்கும் பண்பு இங்கில்லை. (சிலப். 395, 85)

ஈண்டு இவன், இங்கு என்பன வழங்கப்படுகின்றனவே யன்றி, அவன், அங்கு என்பன வழங்கப்படாமை நோக்குக. அதற்குக் காரணம் இகரச்சுட்டு அருகாமையிலிருக்கும் பொருளை யும் அகரக்கட்டு சேய்மையிலிருக்கும் பொருளையுங் குறித்தலே யாகும்.

2. தான், தாம், தாங்கள் என்பன தனியாய் வந்து முன் னிலைப் பொருளைக் குறிக்க வழங்கப்படும். முன்னிலையிலிருப் போன் கூறுவோனோடு ஒத்த நிலையிலிருப்பின் 'தான்' என்றும், சிறிது உயர்ந்த நிலையிலிருப்பின் தாம் என்றும், மிகுந்த உயர் நிலையிலிருப்பின் 'தாங்கள்' என்றும் வழங்கப்படுகின்றன. அவை எல்லாம் ஒன்றன்பால்வினை யேற்கும்.

(உ-ம்.) தான் எப்போது வந்தது ?
தாம் எப்போது வந்தது ?
தாங்கள் எப்போது வந்தது ?

தாம், தாங்கள் என்பன முன்னிலைவினையு மேற்கும்.

(உ-ம்.) தாம் எப்போது வந்தீர் ?
தாங்கள் எப்போது வந்தீர்கள் ?

சிலவேளை 'நாம்' என்ற தன்மைப்பெயர் முன்னிலை யொருமையைக் குறிக்கும்.

(உ-ம்.) நம்மை ஒருகாற் காட்டிவந்தால்
(பெரியதிருமொழி. 92, 1)
நெருநல் நடந்தவரோ நாம்.
(கம்பரா. ஆரணிய. 238, 119)

ஆங்கு 'நாம்' என்றது படர்க்கைவினை கொண்டதும் நோக் கற்பாலது.

பேச்சுவழக்கில் 'அது' என்ற படர்க்கைப்பெயரும் முன்னிலைப்பொருளைக் குறிக்கும்.

(உ-ம்.) அது என்ன சொல்லுகின்றது ?

ஈண்டுப் பயனிலை படர்க்கையாயிருத்தல் நோக்கத்தக்கது.

அவ்வாறே ஏழாம் வேற்றுமையுருபேற்ற 'இவ்விடத்தில்' என்றதும் முன்னிலைப்பொருளில் முதல் வேற்றுமையாய்ப் பேச்சுமொழியிற் காணப்படும்.

(உ-ம்.) இவ்விடத்தில் எவ்வாறு நினைக்கின்றது?

எவன் என்ற சொல் முடிக்குஞ்சொல்லா யிருக்கும்போது அஃறிணை எழுவாயையு மேற்கும்.

(உ-ம்.) இச்சொற்குப் பொருள் எவன்?

---

## 7. வேற்றுமையுருபும் வேற்றுமைப்பொருளும்.

வேற்றுமைகள் எட்டெனவும் அவற்றிற்குப் பெயர்வேற்றுமை, ஐவேற்றுமை...விளி வேற்றுமை என்பன தொல்காப்பியனார் காலத்திற்கு முன்னருள்ள பெயரெனவும், முதல் வேற்றுமை...எட்டாம் வேற்றுமை என்பன பிற்காலத்துப் பெயரெனவும் முன்னர் கூறப்பட்டுளது. அவற்றுள் முதல் வேற்றுமைக்குச் செய்வதும், இரண்டாம் வேற்றுமைக்குச் செயப்படுபொருளும், [1] மூன்றும் வேற்றுமைக்கு வினைமுதலுங் கருவியும் உடனிகழ்ச்சியும், நான்காவதற்குக் கொள்வோனும், ஐந்தாவதற்குப் பொருவும் எல்லையும் நீக்கமும் ஏதுவும், ஆறாவதற்குக் கிழமையும், ஏழாவதற்கு வினைசெய்யிடமுங் காலமும், பொருளெனக் கூறப்பட்டுளது. ஆயினும் ஒவ்வோருருபு பலவேற்றுமைப்பொருளில் வழங்கியுள்ளது காண்டற்குரியது.

1. இரண்டாம்வேற்றுமையை வழங்கவேண்டியவிடத்து மூன்று, நான்கு, ஐந்து, ஏழு இவ்வேற்றுமைகள் வழங்கப் படுகின்றன.

(உ-ம்.) வாளால் நோக்கி வாழும்.
இவட்குக் கொள்ளு மிவ்வணி.
பழியி னஞ்சும்.
அரசர்கட் சார்ந்தான்.
கோட்டின்கட் குறைத்தான்.

(1) இரண்டாம் வேற்றுமைப் பொருள் செயப்படுபொருளெனச் செவ்வனே கூறியவர் இலக்கணவிளக்கவாசிரியரேயாகும்.

2. மூன்றும்வேற்றுமைக்குப் பிரதியாக நாலு, ஐந்து இவ்வேற்றுமைகள் வரும்.

(உ-ம்.) அவற்குச் செய்யத் தகு மிக்காரியம்.
அம்பின் ஆட்டுதும். (கம்பரா. பால. 28, 3.)

3. நான்காம் வேற்றுமையிடத்து ஆறும் வரும்.

(உ-ம்.) நாகரது பலி.

4. ஐந்தாம் வேற்றுமையிடத்து நாலும் இரண்டும் வரும்.

(உ-ம்.) சாத்தற்கு நெடியன்
நினைப்பானை நீங்குந் திரு. (குறள் 519-)

5. ஆறும் வேற்றுமையிடத்து ஏழும் வரும்.

(உ-ம்.) காட்டின்கண் யானை.

6. ஏழாம் வேற்றுமையிடத்து மூன்றும் நாலும் வரும்.

(உ-ம்.) ஈன்மரோ இவ்வுலகத்தானே. (புறநா. 74.)
நால்வர்க்கு மறுவில் அன்பினில் வேற்றுமை மாற்றி
னாள். (கம்பரா. அயோத், 216, 5.)

இவ்வேற்றுமையுருபேற்ற பெயர்கள் அவை தழுவும் வினைக்கு முன் வரின் வேற்றுமையுருபு தொக்கும் இருத்தல் கூடும். வினைக்குப் பின்வரின் இரண்டு, ஏழு இவ்வேற்றுமை யுருபுகள்தாம் தொக்கு நிற்றல் கூடும்.

(உ-ம்.) உண்குவம் பெரும நீ நல்கிய வளனே. (புறநா. 136.)
கண்டனென் வருவல்...காடே. (புறநா. 23.)

மூன்றும்வேற்றுமையுருபு 'ஒடு' என்றே சூத்திரத்தில் வழங்கினர் தொல்காப்பியனார். 'ஆன்' என்றதைப் பல சூத் திரங்களிலுந் தானே வழங்கியிருப்பினும், அஃது அகரச் சாரியை பெறுமென

குஐ ஆனென வரூஉ மிறுதி
அவ்வொடு சிவணுஞ் செய்யு ளுள்ளே.

(தொல். சொல். 108.)

என்ற சூத்திரத்திற் கூறியிருப்பினும், அதனை மூன்றும் வேற்

றுமையுருபாகக் கூறிற்றிலர். ஆயினும் மூன்றாம் வேற்றுமைப் பொருளில் சங்கவிலக்கியங்களில் அது வழங்கப்பட்டமையின், அதனை மூன்றாம் வேற்றுமையுருபாகக் கொண்டனர் பின்னோர்.

ஒடுவென்னுருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வரின் சிறந்த பொருளைக் குறிக்கும் பெயரொடு வருதல் வேண்டுமென்றது தொல்காப்பியனார்கொள்கை.

Cf. ஒருவினை யொடுச்சொ லுயர்பின் வழித்தே.
(தொல். சொல். 91.)

வடமொழியிலோ சிறப்பில்பொருளைக் குறிக்கும் பெயரொடுதான் வரும். அவ்விருமொழிகளும் வேற்றினமொழிகள் என்றதற்கு இஃதுமொரு சான்றாகும். அவ்வாறாயினும் பிற்காலத்தில் வடமொழியைப் பின்பற்றி சிறப்பில்பொருட்பெயரொடு அதனை வழங்கியதூங் காண்க.

(உ-ம்.) வந்த நம்பியைத் தம்பிதன்னொடு...காட்டி.
(கம்பரா. பால. 233, 17,)

குளனொடு நதிகள் தங் குறைகள் தீரவே.
(கம்பரா. பால. 164, 46.)

எல்லைப் பொருளில் வரும் ஐந்தாம் வேற்றுமையும் இடப் பொருளில் வரும் ஏழாம் வேற்றுமையும் ஒன்றாயிருப்பினும் வெவ்வேறு வேற்றுமையாகவும், கருவிப்பொருளும் உடனிகழ்ச்சிப்பொருளும் வெவ்வேறாயிருப்பினும் ஒரு வேற்றுமையின் பொருளாகவும், தமிழிலக்கணக்காரர் கூறியிருத்தல் வடமொழி வேற்றுமையைப் பின்பற்றி யாதல்வேண்டும். அவ்வாறு அவர் செய்தமையான் தமிழ்மொழியின் இயற்கையழகைப் போக்கினர் என்றனர் டாக்டர் கால்ட்வெல். அவ்வாறு அவர் கூறியதற்குக் காரணம் 'இல்' லுருபை ஐந்து ஏழு இவ்விருவேற்றுமையுருபு எனவும், உடனிகழ்ச்சிப்பொருளில் ஒடுவும், கருவி வினைமுதற்பொருளில் ஆன் ஆல் என்ற உருபுகளும், வரும் என்று [illegible]ணியதே யாகும். அவ்வாறு நினைத்தற்கு நன்னூலும் அதன் உரைகளுங் காரணமாதல்கூடும். தமிழிலக்கணநூல்களுள் நன்னூலே மிகப் பழமையானது என அவரே கூறியிருத்தலான் அவர்க்குத் தொல்காப்பியம் என்ற இலக்கணநூல் தெரியாது

என்று கூறலாகும். அவர்தங்கூற்று இக்காலத்துத் தமிழ் மொழிக்குப் பொருந்துமேயன்றி பண்டைத்தமிழ்மொழிக்குப் பொருந்தாது. ஏனெனின் தொல்காப்பியர்கொள்கைப்படி 'இல்' என்றது ஒரு வேற்றுமையுருபாகவுங் கொள்ளப்பட்டிலது. 'இன்' என்றது ஐந்தாம் வேற்றுமைக்கும், 'கண்' என்றது ஏழாம்வேற்றுமைக்கே உருபுகளாக இருந்தன. அன்றியும் ஒடு, ஆன் இரண்டும் வினைமுதல், கருவி, உடனிகழ்ச்சி முதலிய பொருள்களில் சங்கவிலக்கியங்களில் வழங்கப்பட்டுள்ளன. நன்னூற்சூத்திரத்தை ஊன்றி நோக்கின், ஆங்கு நன்னூலார் ஒடு, ஓடு என்பன உடனிகழ்ச்சிப்பொருளில்தான் வருமென்று கூறியதாகத் தோற்றவில்லை. அந்நூலுரைகாரர்களே அவ்வாறு கொண்டனர்.

ஆன், ஒடு இவ்விரண்டுஞ் சங்கவிலக்கியங்களிற் பல பொருள்களில் வந்ததற்கு உதாரணம் :—

வினைமுதல்.

நீரொடு நிறைந்த விரிதழ் மழைக்கண் (புறநா. 164)
தீயினாற் சுட்டபு ணுள்ளாறும் (குறள். 129)

கருவி.

எனைப்பல் யானையு மம்பொடு துளங்கி (புறநா. 63)
பொன்னியற் புனை தோட்டியான்
முன்பு துரந்து (புறநா. 14)

உடனிகழ்ச்சி.

நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி (புறநா. 64)
தூங்குகையா னோங்குநடைய (புறநா. 22)

டாக்டர் கால்ட்வெல் கொண்ட ஐயத்திற்குச் சுமார் 600 ஆண்டுகட்கு முன்னரே சேனாவரையர் கூறிய விடை நோக்கற்பாலது :—" ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமையாகற்பால வெனின், அற்றன்று : வேற்றுமைமயக்கமாவது ஒரு வேற்றுமையது ஒருபொருட்கண்ணாக, சிலபொருட்கண்ணாக ஏனை

வேற்றுமையுஞ் சேறலன்றே ; அவ்வாறன்றிச் சிறிதொழித்து எல்லாப் பொருட்கண்ணும் இரண்டுருபுஞ் சேறலானும், வடநூலுட் பொருள்வேற்றுமையல்லது உருபுவேற்றுமையான் ஒரு வேற்றுமையாக வோதப்படாமையானும் ஈண்டெல்லா வாசிரியரும் ஒருவேற்றுமையாகவே யோதினரென்க" (தொல். சொல். 74, உரை).

---

## 8. காலமயக்கம்

சில பயன் கருதி ஒரு காலத்தைக் குறிக்கும் வினை வேறு காலத்தைக் குறிக்க வழங்கும் :—

1. விரைவு காரணமாக நிகழ்காலம் எதிர்காலம் இவ்விரண்டன் பொருளிலும் இறந்தகாலம் வரும்.

(உ-ம்) சாத்தா வருகிறாயா ? (விடை) இதோ வந்தேன்.
சாத்தா வருவாயா ? ,, இதோ வந்தேன்.

2. சிலவிடங்களில் துணிவைக் காட்ட நிகழ்காலத்திற்குப் பிரதியாக இறந்தகாலம் வரும்.

(உ-ம்.) அறிந்தேன் (கலித். III. 583, 7)

3. எதிர்காலத்திற்குப் பிரதியாக நிகழ்காலம் வரும்.

(உ-ம்.) பரதனே துங்க மாமுடி சூடுகின்றான்
(கம்பரா. அயோத். 216, 4)

4. எதிர்காலத்திற்குப் பிரதியாக இறந்தகாலம் வரும்.

(உ-ம்.) மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார் (குறள் 3)
செய்கிதென்ப (தொல். சொல். 68)

---

# அகராதி

N. B.—ஈண்டு எண்கள் பக்கத்தைக் குறிக்கும்

## தமிழ்

### அ

ஏ



ஐ



ஒ

ஓ



ஔ



க்

நீ



நு



நூ



நெ



நே



நோ



ப்



ப

மு



மூ



மெ



மே



மை





மொ



ய



யா